# உலக செங்குந்த மகாஜன சங்கம்

## 17 ஆவது மாநாடு

## சிறப்பு மலர்

ஜூன் 26, 27, 1993











வட ஆர்க்காடு

அம்பேத்கர் மாவட்டம், குடியேற்றம்.

Aykan



நெசவாளர் நேசன் - உத்தியோக ரத்னா

**திருமிகு J. சுத்தானந்தன் B.Sc.,**

தலைவர், தென்னிந்திய செங்குந்தர்

மகாஜன சங்கம்.

# Rs. 25000/- நன்கொடை வழங்கிய கொடை வள்ளல்



## திருமிகு M. எத்திராஜ முதலியார்

நிர்வாக இயக்குநர்

தலைவர்

பக்கிங்ஹாம் கர்னாடிக் மில்ஸ், சென்னை

நிர்வாக இயக்குநர்.

திருமகள் மில்ஸ் லிட்,

குடியாத்தம்

மற்றும் அவர்தம் குடும்பத்தினர்



திருமிகு. **K.M.கோவிந்தராஜன்**

முன்னாள் நகர் மன்றத் தலைவர்
நிறுவனர் - தாளாளர்,
திருவள்ளுவர் மேனிலைப் பள்ளி,
மற்றும்
வரவேற்புக் குழுத் தலைவர்
செங்குந்தர்
17-ஆவது மாநில மாநாடு
தலைவர்
வடஆற்காடு அம்பேத்கார் மாவட்டம்
செங்குந்தர் மகாஜன சங்கம்.

# செங்குந்தர் குலச் செம்மல் வள்ளல்





திரு. பா.கா. ஆறுமுக முதலியார் திருமதி. பா.கா. ஆறுமுக முதலியார்

புதுப்பேட்டை, நகரி.



பேராசிரியர் தி.ரா.செல்வராசன் M.A., M.Ed., P.hd.,
பொதுச் செயலர்,
தென்னிந்திய செங்குந்த மகாசன சங்கம், சென்னை.



சென்னை. திரு. M.S. ரெங்கையா செங்குந்தர் B.A., பொருளாளர்
தென்னிந்திய செங்குந்த மகாசன சங்கம்

புரவலர், தஞ்சை ஜில்லா செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்

# குடியேற்றம் காமாட்சி அம்மன் பேட்டை செங்குந்த மரபினர்கள் நிர்வாக குழு



முதல்வரிசை: S.N.சுப்ரமணியம் செங்குந்தர், T.R.கெங்காதர செங்குந்தர், K.N.ஜோதிபிரகாசம், K.V.திருநாவுக்கரசு செங்குந்தர், R.K.பஞ்சாட்சரம், K.G.துரைசாமி செங்குந்தர்.

இரண்டாவது வரிசை: K.A.முருகன் செங்குந்தர், K.A.சௌந்தரராஜன் B.Sc., B.L., (செயலாளர்) K.M.மகாலிங்கம் (தலைவர்), A.G.சின்னதம்பி செங்குந்தர், D.மார்கபந்து செங்குந்தர்.




அமரர் திருமிகு. **பு.க. கங்காதர செங்குந்தர்**

முன்னாள் நகர் மன்றத் தலைவர்

குடியேற்றம்



அமரர் திருமிகு. M.A.கோவிந்தராஜ முதலியார்

முன்னாள் நகர் மன்றத் தலைவர்,
முன்னாள் மேலாண்மை இயக்குநர்
ஸ்ரீ ராஜேஸ்வரி மில்ஸ் லிட், குடியேற்றம்



தியாகி D.A. ஆதிமூல முதலியார்
முன்னாள் நகர் மன்றத் தலைவர்
குடியேற்றம்.

தலைவர்

தஞ்சை ஜில்லா செங்குந்த மகாசன கல்விச்சங்கம்



திரு. R.N.சந்தான ராஜகோபால் செங்குந்தர்

புரவலர்

தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்

## ரூ.5000 வழங்கிய தம்பதிகள்



திரு. C.K.குமாரசாமி திருமதி. பூமாகுமாரசாமி

ரூ.10,000/- வழங்கிய நன்கொடையாளர்



திருமிகு. **மஞ்சுளா கிருஷ்ணன்** அவர்கள்
உரிமையாளர்
மஞ்சுளா பிராசஸ் - டையிங் இண்டஸ்ட்ரீயஸ்
ஈரோடு.

ரூ.5,000/- வழங்கிய நன்கொடையாளர்



திருமிகு. **ஏ. இராஜாமணி** அவர்கள்
டெக்ஸ்டைல் ஏற்றுமதியாளர்
சென்னை.



அமரர் திருமிகு. **எம்.ஏ. வேலாயுத முதலியார்** அவர்கள்
முன்னாள் நகர்மன்றத் தலைவர்
குடியேற்றம்



திருமிகு. **ஜி.எஸ்.இ. ஜோதி** அவர்கள்
S/o. ஜி.எஸ். ஏகாம்பரம்
குருவராயப்பேட்டை.



திருமிகு **K.T. மார்க்கபந்து முதலியார்**
பொருளாளர்
மாவட்ட செங்குந்தர் மகாஜன சங்கம்,
வடார்க்காடு அம்பேத்கார் மாவட்டம்.



திருமிகு. கே.பி. மார்கபந்து முதலியார்

தலைவர்

நகர செங்குந்தர் மகாஜன சங்கம்

குடியேற்றம்



திருமிகு. **பொம்பரம் பு.கா. சிவஞானம்**
பொதுச்செயலாளர்
நகர செங்குந்தர் மகாஜன சங்கம்
குடியேற்றம்



திருமிகு. **எம். தண்டபாணி**
இணைப் பொதுச் செயலாளர்
நகர செங்குந்தர் மகாஜன சங்கம்
குடியேற்றம்



நெமிலி கிராமம்

திரு. **V.P. சுந்தரம்** அவர்கள்

மற்றும்

அவர் தம் துணைவியார்

திருமதி. **சரோஜா சுந்தரம்** அவர்கள்



திரு. **பாகீஜா சண்முகம்** அவர்கள்

நிறுவனர் - உரிமையாளர்
இந்துஸ்தான் லுங்கி கம்பெனி
குடியேற்றம்.

# Rs. 2000/- நன்கொடையாளர்



திரு. **R.Y.சிங்கார முதலியார்**

திருமதி. **R.S.விசாலாட்சி அம்மாள்**

**ஏகாம்பர குப்பம், சித்தூர். A.P.**

## Rs. 2000/- நன்கொடையாளர்



திருவண்ணாமலை சம்புவராயர் மாவட்டச்
செங்குந்தர் மகாஜன சங்கத் தலைவர்
திரு. **R.N.சாமி** அவர்கள்



திரு. M.G.அமுர்தலிங்க முதலியார் B.A., B.L.

முன்னாள் நகர் மன்றத் தலைவர்
மேலாண்மை இயக்குநர்
ஸ்ரீ ராஜேஸ்வரி மில்ஸ் லிட், குடியேற்றம்



திரு. **S.P.சம்பந்த முதலியார்**

செயலாளர்

சேலம் மாவட்ட செங்குந்தர் மகாஜன சங்கம்

மேலாண்மை இயக்குநர்

சம்பந்தம் ஸ்பின்னிங் மில்ஸ்

போன்: 65944



திரு. **D. ராமசாமி முதலியார் B.A., B.L.,**

தலைவர்

சேலம் மாவட்ட செங்குந்தர் மகாஜன சங்கம்

மேலாண்மை இயக்குநர்

அருள்மிகு குமரகிரி ஸ்பின்னிங் மில்ஸ்

போன்: 67100



## திரு. K.R.மாணிக்க முதலியார்

துணைத் தலைவர்
முன்னாள் பொருளாளர்
சேலம் மாவட்ட செங்குந்தர் மகாஜன சங்கம்
மேலாண்மை இயக்குநர்
கந்தகிரி ஸ்பின்னிங் மில்ஸ்
போன்: 68161

# ரூ. 1000/- நன்கொடையாளர்கள்



திரு. T.M. வீரராகவ செங்குந்தர்

முன்னாள் தலைவர்
ஊராட்சி மன்றம், வளர் புரம்
அரக்கோணம் வட்டம்.



திரு. A.S. நாமகோடி அவர்கள்

ஏகாம்பர குப்பம்
ஆந்திர மாநிலம்

## Rs. 1000/- நன்கொடையாளர்



## திரு. B.T.M.சுப்பிரமண்யம்

### திருமதி. B.S.சரஸ்வதி

B.T.M. தெரு, புதுப்பேட்டை, நகரி.

# ரூ. 1000/- நன்கொடையாளர்கள்



திரு. T.M.V. துணைவியார்
திருமதி. செஞ்சியம்மாள் அவர்கள்
வளர் புரம்.



திரு. V.V. தீனதயாளன் B.Sc.,
நரசிம்மபுரம்
மின்னல்.

# Rs. 1000/- நன்கொடையாளர்கள்



திரு. S.S. முருகேச செங்குந்தர்
மனைவி ஞானாம்பாள்
ஆரணி, நகர செங்குந்தர் சங்கத் தலைவர்



திரு, திருமதி V.C.சதாசிவம் B.A., B.L.,
வேலூர்.

# Rs. 500/- நன்கொடையாளர்கள்



திரு. **T.V.ஒய்யார செங்குந்தர்**

லுங்கி வியாபாரம்
வளர்புறம், அரக்கோணம்



திரு. **கா.அ.கணபதி செங்குந்தர்**

R.K. பேட்டை, திருத்தணி வட்டம்



திரு. **P.G. ஏகாம்பர செங்குந்தர்**

மின்னல்
அரக்கோணம் வட்டம்



திரு. **N.A. கோபால் முதலியார்**

மேல் களத்தூர்
அரக்கோணம் வட்டம்

# ரூ. 1000/- நன்கொடையாளர்கள்



ஆண்டி மடம்

திரு. P.C. தர்மலிங்க முதலியார்



திரு. V.P. சுந்தரம்

அரக்கோணம்.

# Rs. 1000/- நன்கொடையாளர்கள்



திரு. P.V. ஏழுமலை செங்குந்தர்
திருமதி. குணாம்பாள் ஏழுமலை
GR PET



திரு. R.சுந்தர ராஜன்
திருமதி. S. செந்தமிழ்ச் செல்வி
ஆரணி

# ரூ. 500/- நன்கொடையாளர்கள்



சாவடி த. கணபதி செங்குந்தர்

ஏகாம்பர குப்பம்



சாவடி த. கணபதி செங்குந்தர்

துணைவியார் அம்மா கண்ணம்மாள்

ஏகாம்பர குப்பம்



திரு. P.A. லோகநாதன்

தலைவர்

செங்குந்த மகாஜன சங்கம்

தக்கோலம்



திரு. N.K. கோவிந்தசாமி செங்குந்தர்

R.K. பேட்டை.

# ரூ. 500/- நன்கொடையாளர்கள்



**K.R. எல்லப்ப செங்குந்தர்**
மேலபுலம் புதூர்
(VIA) பனப்பாக்கம்
வ.ஆ.அ.மா.



திரு. **K. சண்முகம்**
புதுத்தெரு, நகரி. A.P.



திரு.
**M.A. கந்தசாமி முதலியார்**
ரவி ஒயின்ஸ்
அரிசி ஆலை உரிமை
ஆரணி.



திரு.
**P. ஏகாம்பரம் முதலியார்**
புச்சி ரெட்டி,
திருத்தணி.

# ரூ. 500/- நன்கொடையாளர்கள்



திரு. அ.ராமசாமி செங்குந்தர்
வடக்கு எல்லை போராட்ட வீரர்
திருத்தணி.



திரு. ந.க. சுப்பிரமணிய செங்குந்தர்
புச்சி ரெட்டி பல்லி
திருத்தணி வட்டம்



திரு. பூஞ்சி ஆ. விநாயக செங்குந்தர்
புச்சி செட்டி பல்லி
திருத்தணி வட்டம்,
செங்கை எம்.ஜி.ஆர். மாவட்டம்



திரு. P.N. கணேச செங்குந்தர்
லுங்கி வியாபாரம்
மேட்டுத் தெரு, புச்சி ரெட்டி பல்லி
செங்கை மாவட்டம்.

# ரூ. 500/- நன்கொடையாளர்கள்



திரு. M. நடராஜன்
கண்ணன் திரையரங்கம்
குருவராயப் பேட்டை



திரு. V. திருஞானசம்பந்தன்
இணை செயலாளர்
வ.ஆ.அ.மா. செ.ம.ஜ.ச.
இளைஞர் அணி
குருவராயப் பேட்டை.



திரு. ஆ.சு. பழனியப்பன்
75, பழைய பஜார் தெரு,
அரக்கோணம்.



திரு.
தப.தே. வேலு செங்கு
மத்தூர்
திருத்தணி வட்டம்.

# ரூ. 500/ நன்கொடையாளர்கள்



திரு. **A.J.A. குமரன் M.A., B.L.,**
வழக்கறிஞர்
திருத்தணி.



திரு. **P.G. தர்மலிங்கம்**
சிந்தலப் பேட்டை



ஆலப்பாக்கம்.
திரு. **A.R. சஞ்சீவி**
சிந்தலப் பேட்டை



திரு. **P.G. சண்முக செங்குந்தர்**
சாயத் தொழிற்சாலை,
மடத் தெரு, பொதட்டூர்ப் பேட்டை.

# ரூ. 500/- நன்கொடையாளர்கள்





**திரு. N. ஏழுமலை செங்குந்தர்**

பரவத்தூர்
கிளைச் சங்கச் செயலாளர்

**திரு. M.M. பாலகிருஷ்ண**
**செங்குந்**

ஏகாம்பர குப்பம்
ஆந்திரா.





**திரு. M.S. குப்புசாமி**

2/20, கோதண்டராமர் கோயில் தெரு,
ஏகாம்பர குப்பம்
ஆந்திரா.

**திரு. காத்தவராயன்**

ஏகாம்பர குப்பம்
ஆந்திரா.



திரு. P. சுப்பிரமணியன்
திருமதி. T.S. குப்பம்மாள்

செ.ச. துணைத் தலைவர்
திருமால் பேறு, வ.ஆ.அ.மா.



திரு. G.S. துரைசாமி

தலைவர்
அம்மையார் குப்பம்



திரு. A. சம்பந்தம்

பொதுச் செயலாளர்
அம்பிகா சில்க் ஹவுஸ்
காஞ்சிபுரம்.

# ரு. 500/- நன்கொடையாளர்கள்



திரு. அ. பீதாம்பரம்
மாநில செயற்குழு உறுப்பினர்
சம்பத்துராயன் பேட்டை
அரக்கோணம் வட்டம்
வ.ஆ. அம்பேத்கார் மாவட்டம்.



திரு. புலவர்.
கா.ப.இராசகோபால்
M.A., B.Ed.,
மின்னல்



திரு. சி.தே. கன்னியப்பன்
செயலாளர்
செங்குந்த மகாஜன சங்கம்
விஸ்வநாத புரம்
குருவராஜப் பேட்டை
அரக்கோணம் வட்டம்.



திரு. V. பஞ்சாட்சரம்
விஸ்வநாத புரம்
G.R. பேட்டை.

வெல்க செங்குந்தம்!




# தென்னிந்திய செங்குந்த மகாசன சங்கம்

## 17-ஆவது சமூக, இளைஞர், மகளிர்

## செசவாளர் மாநாடு

# அழைப்பிதழ்

நாள் : 26, 27 ஜூன் 1993

சனி, ஞாயிறு

இடம் :

திருவள்ளுவர் மேனிலைப்பள்ளி,

குடியாத்தம்

வடார்க்காடு அம்பேத்கார் மாவட்டம்-632 602

# தென்னிந்திய செங்குந்த மகாசன சங்கம்
# மற்றும்
# வடார்க்காடு அம்பேத்கார் மாவட்ட செங்குந்தர் சங்கம்

பேரன்புடையீர்!

வணக்கம்.

திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள் அருளாசியுடன்,
எதிர்வரும் 1993-ஆம் ஆண்டு ஜூன் திங்கள்
26, 27 சனி, ஞாயிறு ஆகிய நாள்களில்,
வடார்க்காடு அம்பேத்கார் மாவட்டம்,
குடியாத்தம், திருவள்ளுவர் மேனிலைப் பள்ளியில்,
திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள் வளாகத்தில்
பெரியவர் கா. அ. சண்முக செங்குந்தர் பந்தலில்,
அமரர் K.A.S. பத்மநாப செங்குந்தர் அரங்கில்,
17-ஆவது சமூக, இளைஞர், மகளிர், நெசவாளர் மாநாடு நடைபெறும்.
அதுபோது அனைவரும் உறவினரோடு திரளாக வருகை தந்து
சிறப்பிக்குமாறு அன்புடன் வேண்டிக் கேட்டுக் கொள்கிறோம்.

அன்புள்ள,

**ஜெ. சுத்தானந்தன்,** B.Sc.,
தலைவர்

**K. M. கோவிந்தராஜன்**
மாநாட்டு வரவேற்புக் குழுத் தலைவர்

**டாக்டர் தி. ரா. செல்வராசன்** M.A., M.Lit. Ph.D.
பொதுச்செயலர்

**பு. சு. சிவஞானம்**
மாநாட்டு நிர்வாகச் செயலர்

**எம். எஸ். ரெங்கையா** B.A.
பொருளாளர்

**K. T. மார்க்கபந்து**
பொருளாளர்

**மற்றும் மாநில மாநாட்டு வரவேற்புக் குழுவினர்**

# நிகழ்ச்சி நிரல்

## 26-6-93 சனிக்கிழமை காலை 8.45 மணி

**பேரணி :**

| | | |
|---|---|---|
| தொடங்குமிடம் | : | குடியேற்றம் காமாட்சியம்மன் பேட்டை, செங்குந்தர் திருமண மண்டபம் |
| தலைமை | : | திரு. M.G. அமிர்தலிங்கம் செங்குந்தர், பி.எ., பி.எல். நிர்வாக இயக்குநர் ஸ்ரீ ராஜேஸ்வரி மில்ஸ் லிட். குடியேற்றத |
| முன்னிலை | : | திரு. K.M. மகாலிங்கம், திரு. M.K. பிச்சாண்டி, B.A. |
| தொடங்கி வைப்பவர் | : | திரு. V.M. வாசுதேவ செங்குந்தர் |
| தொண்டர் படைத்தளபதிகள் | : | திரு. S.K. தனசேகர், திரு. புகழனார், திரு. M.K. தண்டபாணி |

## சமூக மாநாடு

| | | |
|---|---|---|
| தலைமை & கொடியேற்றம் | : | திரு. J. சுத்தானந்தன், B.Sc., |
| முன்மொழிந்து வழி மொழிதல் | : | மாவட்டத் தலைவர்கள் |

திரு. S.D. பொன்னுசாமி *(சென்னை)*
திரு. G.S. துரைசாமி *(செங்கை)*
திரு. C. பழனிவேலு (விழுப்புரம்)
திரு. எம்.ஆர். பழனியாண்டி *(திருச்சி)*
திரு. இ. தனசீலன் (முகவை)
திரு. அ. செல்லையா முதலி *(காமராஜர்)*
திரு. S.V.R.M.A. நடராஜன் *(நெல்லை)*
திரு. சு. கிருஷ்ணசாமி (குமரி)
திரு. சி. குப்புசாமி *(திண்டுக்கல்)*
திரு. RAN. முத்துசாமி (பெரியார்)
டாக்டர் கு.ம. இலக்குவன் *(கோவை)*
திரு. M K.S. உத்தண்டி (தருமபுரி)
திரு எம். சங்கரபாண்டியன் *(தேவர் திருமகன்)*
திரு. ஆர்.எம் அரங்கசாமி *(கர்நாடகம்)*
திரு. வெ. அருணாசலம் *(கேரளா)*

மாவட்டச் செயலாளர்கள்

திரு. ஏ. சம்பந்தம் (செங்கை)
திரு. ஏ. குப்புசாமி (தி. ச. மா.)
திரு ப குமரகுருபரன் (விழுப்புரம்)
திரு. அ. சுப்பிரமணியம் (காமராஜர்)
திரு. சி. அருணாசலம் (நெல்லை)
திரு. ச வேலரசு (குமரி)
திரு. வி பி. சுப்பிரமணியம் (திண்டுக்கல்)
திரு. எம்.எஸ். பழனியப்பன் (பெரியார்)
திரு. சிங்கார ஆடியபாதம் (புதுவை)
திரு. கரு. மலையரசன் (தேவர் திருமகன்)
திரு. ப. துரைராஜ் (சிதம்பரனார்)
திரு பி. சச்சிதானந்தம் (தருமபுரி)
திரு கே.சி. கணேசன் (ஆந்திரா)
திரு. என்.கே. சிகாமணி (கர்நாடகம்)

கொடி வணக்கப்பாடல் : திரு. அ. பீதாம்பரம் (தலைவர், அரக்கோணம் வட்டம்)

குத்துவிளக்கேற்றல் : திருமதி. வசந்தா சுத்தானந்தன்

உறுதிமொழி : திரு. சீனி சம்பத்து செங்குந்தர்

திறப்பாளர் : சமுதாய கொடை வள்ளல் திரு. பா.கா. ஆறுமுக செங்குந்தர், (தலைவர், ஆந்திர மாநில செங்குந்தர் சங்கம்)

முன்னிலை : திரு. C.K. குமாரசாமி, M.A. புரவலர்
திரு. R N. சந்தான ராஜகோபாலன், தலைவர், தஞ்சை மாவட்டம்
திரு. C. காந்திதாஸ், M.A.B.L. தலைவர், மதுரை மாவட்ட
திரு. ச கு. பழனிவேலு, துணைத்தலைவர்
திரு. K.B. மார்க்கபந்து முதலியார், தலைவர், நகர சங்க

வரவேற்புரை : திரு. K.M. கோவிந்தராஜன், மாநாட்டு வரவேற்புக் குழுத் தலைவர்

## செயல்பாட்டு அறிக்கை

திரு. M.B. பாண்டுரங்கம், பி.காம்., துணைப் பொதுச் செயலாளர்

பிற்பகல் 2 மணி முதல் 3 வரை

இன்னிசை நிகழ்ச்சி : இசைச் செல்வி பா வள்ளி, சென்னை

பிற்பகல் நிகழ்ச்சி : படத்திறப்பு

வள்ளல் சபாபதி செங்குந்தர் — திரு. மு. சண்முகம், M.A.B.T. செயலர், காஞ்சி

பேரறிஞர் அண்ணா — திரு. து. பழனியாண்டி, சங்க அமைப்புச் செயலாளர்

பாவேந்தர் பாரதிதாசனார் — திரு. நா. கோவிந்தசாமி செங்குந்தர், தலைவர், புதுவை மாநிலம்

அமரர் M.V. பீமராஜ செங்குந்தர் — திரு. ஆர்.என். சாமி, தலைவர், தி. ச. மாவட்டம்

பெரியவர் கா.அ. சண்முக செங்குந்தர்—திரு. எம்.ஜி. அமிர்தலிங்கம், B.A.B.L.

அமரர் K.A. பத்மநாப செங்குந்தர் — திரு. M.B. மார்க்கபந்து, தலைவர், குடியாத்தம் நகர சங்கம்

பெரும்புலவர் மங்கலங்கிழார் — டாக்டர் பு. மு. கங்காதரன்

## மலர் வெளியீடு

வெளியிடுவோர் : திரு. A.V.Rm.V. சங்கரநாராயணன், புரவலர், அம்பாசமுத்திரம்

பெறுவோர் : திரு. S.P. சம்பந்தம், பொதுச் செயலர், சேலம் மாவட்டம்

## செங்குந்தர் பிரபந்த திரட்டு வெளியீடு

வெளியிடுவோர் : நீதி அரசர் திரு. T.N. சிங்காரவேல்

பெறுவோர் : டாக்டர் சி. பாலசுப்பிரமணியன், முன்னாள் துணைவேந்தர், தமிழ்ப் பல்கலைக் கழகம்

## பாராட்டு நிகழ்ச்சி

| பாராட்டுப் பெறுவோர் | பாராட்டுவோர் |
|---|---|
| 1. திரு. சரவணப் பழனிவேலு<br>துணைப் பொதுச் செயலர் | திரு. M.M. தணிகைமலை<br>துணைத் தலைவர் |
| 2. கவிஞர் தணிகை உலகநாதன் | புவலர் செ. சோமசுந்தரம், எம்.ஏ. பி.எட். |
| 3. திரு. V.V.C.RM. கந்தசாமி<br>சிறப்புத் தலைவர், கோவை | திரு. P. ராமசாமி, பி.ஏ.பி.எல்.<br>தலைவர், சேலம் மாவட்டம் |
| 4. திரு. K.K. இராமசாமி, பி.ஈ.<br>தொழிலதிபர். கோவை | வள்ளல் P. நடராச செங்குந்தர்.திருப்பூர் |
| 5. திரு. A. ராஜாமணி, பி.காம்.<br>பொது மேலாளர், ஹெண்ட்லூம் ஹவுஸ் | திரு. E.S. தியாகராஜன், Ex. M.L.A.<br>பொதட்டூர்ப்பேட்டை |

தலைவர் உரை : நெசவாளர் நேசன் J. சுத்தானந்தன், B.Sc.,

சிறப்புரை : திரு. K.V. ஞானசம்பந்தம், I.P.S. (Retd.)
திரு. S. தியாகராஜன், பி.இ. தொழிலதிபர்
திரு. P.K. சாமிநாதன், B.Com., செயலர் சென்னைப் பெருந
திரு. M. மாணிக்கம், Ex.M.C. செயலர், மதுரை
திரு.K.R.V. திருஞானசம்பந்தம் செங்குந்தர்—ஜெயங்கொ
திரு அ பழனிசாமி பி காம். சங்கரங்கோயில்
திரு. வை. ஆனந்த செங்குந்தர், தலைவர், தென்னார்க்காடு
திரு. க. நாராயணன், தலைவர், சிதம்பரனார் மாவட்டம்
டாக்டர் ம. அருள்மணி, சேலம் தெற்கு அமைப்பாளர்
திரு. ஆர். பாலசுப்பிரமணி, M.A.M.Ed. கல்லிடைக்குறிச்சி
திரு. புலவர் கோ. இளையபெருமாள், கொ.ப.செ. ஆரணி
திரு. புலவர் வேலு, M.A.B.Ed. தாரமங்கலம்
திரு. புலவர் சார. ஜெகன்னாதன், M.A.B.Ed. காஞ்சிபுர
திரு. அ. அரிமாப்பாமகன், எம்.ஏ.பி.எட். புதுவை

## 27-6-1993 மகளிர் மாநாடு

காலை *9-00* மணி

தலைமை : திருமதி. யசோதா சண்முகம், சென்னை
முன்னிலை : திருமதி. சரோஜினி ஞானசம்பந்தம்
உரிமை முழக்கம் : திருமதி. முத்துலட்சுமி இராமலிங்கம், ஆக்கூர்
திருமதி. அரசு மணிமேகலை, எம்.ஏ.
திருமதி. அயிராணி ராமநாதன், எம்.ஏ.
திருமதி. அமிர்தவல்லி, கரூர்
திருமதி. திலகவதி சண்முகசுந்தரம், எம்.ஏ. பி.எட்.
திருமதி. சரஸ்வதி குருநாதன், புஞ்சைப் புளியம்பட்டு
திருமதி. சந்திரா, மதுரை
புலவர் பூங்கோதை, செய்யாறு
செல்வி. எஸ்.ஆர். பூங்கொடி, காங்கேயநல்லூர்
நன்றியுரை : திருமதி K.M.G. உஷாராணி சுந்தரவதனம், B.A.

காலை 10-30 மணி : இளைஞர் மாநாடு

தலைமை : திரு கு. ப. கண்ணன், சிறப்புத் தலைவர், செங்கை செங்குந்தர் இளைஞர் பேரணி

வரவேற்புரை : ,, K.M. தண்டபாணி, இணைச்செயலர், குடியாத்த நகர சங்கம்

முன்னிலை : ,, ஆ. ராஜவேலு, துணைப்பொதுச் செயலர், பெண்ணாடம்
,, மு. சிவசண்முகம், துணைப்பொதுச் செயலர், உடுமலைப்பேட்டை
டாக்டர் மு. கருணாநிதி M.B.B.S. DCH. பொதுச்செயலர், திருச்சி

திறப்பாளர் : திரு. M. சுகானந்தம். பி.ஏ.பி.எல்., புதுச்சேரி

எழுச்சியுரை : திரு M P.N. ஜெகந்நாதன், பி. இ. ஈரோடு
,, K P. மகாலிங்கம், துணைத்தலைவர், சேலம்
,, சி. கார்த்திகேயன், எம்.ஏ. பி.எட், கேரளா
டாக்டர் க சண்முக வேலாயுதம், சென்னை
டாக்டர் E.S.S. ராமன், M.D. பொதட்டூர்பேட்டை
திரு. ஆ.க. இளமுருகு, D.M.E. கரூர்
,, M. முனியசாமி, M.A.B.Ed. மண்டலமாணிக்கம்
,, கே. எம். சண்முகசுந்தரம், எம்.ஏ. தேவகோட்டை
,, S.S. சம்பத், எம்.காம். சென்னைப் பெருநகர்
புலவர் திரு. க.பா. இராசகோபால், எம்.ஏ.பி.எட்.,
திரு. T.A. இராதாகிருஷ்ணன், தாரமங்கலம்
திரு. D. சம்பத், தருமபுரி
திரு. K. விநாயகம், ஜெயங்கொண்டம்
திரு. கவிஞர் புவியரசன்
திரு. இ.மா. இராமச்சந்திரன், எம்.ஏ., எம்.பி.எட்., நெல்லை
திரு. க. நாகராஜன், விளந்தை
திரு. S.K. தனசேகர், திமிரி
திரு புகழனார், காங்கேயநல்லூர்
திரு. M.K. தண்டபாணி, திருபத்தூர்

ன்றியுரை : புலவர் வே. பத்மநாபன், எம்.ஏ.பி.எட்.,

## கவியரங்கம் பிற்பகல் 2-30 மணி

பொருள் : வெற்றிப் படிகள்

தலைமை : கவிமாமணி மழைமகன், பவானி

டாக்டர் கு. திருவேங்கடம் — உறுதி
கவிஞர். மு. உலகநாத பல்லவன் — ஊக்கம்
கவிஞர். பொன். தங்கவேலன் — உழைப்பு
கவிஞர். நீலமேகம் — உற்சாகம்
கவிஞர். துரை. சௌந்தரராஜன் — உயர்வு

## நெசவாளர் மாநாடு மாலை 3 மணி

தலைமை : நெசவாளர்நேசன் J. சுத்தானந்தம், B.Sc.

முன்னிலை : திரு. வேலவர் T.S. சுப்பிரமணிய செங்குந்தர்

திறப்பாளர் : திரு. M. எத்துராஜ செங்குந்தர், நிர்வாக இயக்குநர், திருமகள் நூற்பாலை லிட், குடியாத்தம், தலைவர், B & C Mills, சென்னை,

படத்திறப்பு
கைத்தறிக் காவலர்
M.P.N. நாச்சிமுத்து : திரு. S.M. கனகரத்தினம், கைத்தறி துணை இயக்குநர்(ஓய்

சிறப்புரை : ஜனாப் அக்பர்பாஷா M.P. வேலூர் பாராளுமன்றம்
திரு. V. தண்டாயுதபாணி, B.Sc. B.L. M.L.A. குடியாத்தம் சட்டமன்ற தொகுதி
திரு. A. தேவராஜ், M.L.A. செய்யாறு
திரு. காஞ்சி பன்னீர்செல்வம், M.L.A. உத்திரமேரூர்
திரு. A.K.C. சுந்தரவேல் M.L.A. திருப்பத்தூர்
திரு. M. பாலசுப்பிரமணியன், M.A. M.L.A. புதுவை
திரு. C. கோபால், Ex.M.L.A. சோளிங்கர்
திரு. S.P. மணவாளன், Ex.M.L.A. திருப்பத்தூர்
திரு. T.R. கஜபதி, Ex.M.L.A. ஆற்காடு

நன்றியுரை : பேராசிரியர் தி.ரா. செல்வராசன், எம்.எ. எம்.லிட். பி.எச்

J SUDHANANDHAN,
145, Thirunagar, Erode-638 003.
**President** : South India Senguntha Mahajana Sangam,
Periyar District Karate Association
**Correspondent** : M.P. Nachimuthu, M. Jaganathan Polytechnic, Chennimalai.
Sengunthar Higher Secondary School, Erode.
Sengunthar Matriculation School, Erode.
Mottayappa Middle School, Vallipurathampalayam.
**Director** : Petrofils Co-operative Ltd., Baroda.

பெறுநர் :

**திரு. கே. எம். கோவிந்தராசனார்** அவர்கள்
தலைவர்—வட ஆற்காடு மாவட்ட—செங்குந்தர் சங்கம்,
24, பிள்ளையார் கோவில் தெரு,
புதுப்பேட்டை, குடியாத்தம்-632 601.

அன்புடையீர்,

வணக்கம். தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் 17-வது மாநில மாநாடு குடியேற்றத்தில் நடைபெறுவது மகிழ்ச்சிக்குரிய ஒன்றாகும். சங்கம் தோற்றுவித்து கடந்த 65 ஆண்டுகளில் 16 மாநில மாநாடுகளைக் கண்டோம். ஒவ்வொரு மாநாடும் ஒரு திருப்புமுனையாக அமைந்தது.

தற்பொழுது நடைபெற இருக்கும் குடியேற்ற மாநாடு செங்குந்தர் குடியின் ஏற்றத்திற்கு வழிவகுக்கும் மாநாடாக அமையும் என்பதில் எனக்கு ஐயமில்லை.

1929-ஆம் ஆண்டு ஈரோடில் நடைபெற்ற முதல் மாநாட்டிலிருந்து இன்றுவரை வடஆற்காடு மாவட்டத்துப் பெருமக்கள் குடியேற்றம் திரு. எம்.வி. பீமராஜ செங்குந்தர், திரு. எம்.எ. வேலாயுத செங்குந்தர், திருப்பத்தூர் பெரியவர் திரு. க அ. சண்முக செங்குந்தர், திரு. கே.எ எஸ். பத்மநாபன், இன்று தாங்கள் எனப் பலர் நம் சமுதாய அமைப்புடன் இணைந்து ஆற்றிய, ஆற்றிவரும் சீரிய பணியை நன்றியோடு நினைவு கூரக் கடமைப்பட்டிருக்கிறேன்.

கைத்தறி நெசவையே நம்பித் தறிக்குழியும் தரித்திரமும்தாம் தம் வாழ்க்கை என்று வாழ்ந்து வரும் ஏழைச் செங்குந்தர்களின் எதிர்கால வாழ்வு வளம் பெற நாம் பல முக்கிய முடிவுகளை இந்த மாநாட்டில் தீர்மானிக்க வேண்டும்.

இன்றைய இளைஞர்களின் வளமான எதிர்காலமே செங்குந்தர் குலத்தின் முன்னேற்றமாக அமையும். திக்குத் தெரியாத காட்டில் திசை தெரியாது தடுமாறுபவர்களைப் போல் தாங்கள் செல்ல வேண்டிய பாதை எது என்பது தெரியாது தடுமாறும் இளைஞர்களுக்கு வழிகாட்டும் மாநாடாக இந்த மாநாடு அமையும் என்று நம்புகிறேன்.

எதனையும் திட்டமிட்டுச் செயலாற்றும் தாங்கள் பொறுப்பேற்று நடத்தும் இந்த மாநாடு மிகச் சிறப்பாகவும், வெற்றிகரமாகவும் அமைய என்னுடைய நல்வாழ்த்துக்கள்,

மாநாட்டினையொட்டி வெளியிடப்படும் மலர் செங்குந்தர்களின் கடந்தகாலப் பெருமை. இன்றைய நிலை, நாளைய வாழ்வு என்பதனை எடுத்துக்காட்டுகின்ற விதத்தில் அமையவும். மலர் எல்லா விதத்திலும் சிறக்கவும் நம் குலக் கடவுள் எல்லாம் வல்ல செந்தில் கந்தப் பெருமானின் திருவடிகளை வணங்கி என்னுடைய நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

வாழ்க செங்குந்தம்!

தங்களன்புள்ள,
**ஜெ. சுத்தானந்தன்**

# Justice T. N. Singaravelu

''Rasi Kanya''
55, Fifth Street
Padmanabha Nagar
Adayar, Madras-600
Phone : 414439, 41


பெருமதிப்பிற்குரிய சகோதரர் உயர்திரு. கே.எம். கோவிந்தராஜ முதலியார், அவர்க
சால வணக்கம்.

நம் சமூக 17வது மகாநாட்டைக் குடியேற்றத்தில் சிறப்பாக நடத்த தாங்கள் வந்திருப்பது பெருமைக்கும் பாராட்டுதற்கும் உரியது. தாங்கள் நாற்பது ஆண்டுகளாகச் செ வரும் கல்வித் தொண்டு, நகராட்சித் தலைவராக ஆற்றிய பணி, நம் இனத்தவருக்குப் வகையில் செய்து வரும் ஆதரவு, இவைகளை வடார்க்காடு மாவட்டத்தவர் யாவரும் நன்றியு போற்றுவர். எழுபது வயதைக் கடந்த பின்னும் தாங்கள் உற்சாகமாகவும், பணிவோ துணிவோடும் இந்த மாபெரும் பணியை ஏற்றுக் கொண்டது, தங்கள் வாழ்க்கையிலேயே பொற்காலம் என்று கருதுகிறேன். தங்கள் முயற்சிக்கு நல்ல உள்ளம் படைத்த மக் அனைவரும் துணை நிற்பர் என்பது உறுதி.

இந்த மகாநாட்டில் ஒரு மலர் வெளியிடுவது மிகவும் சிறப்பான அம்சம். இந்த மலர் வாடா மலராக, நம் இனத்தவருக்குத் தேவைப்படும் தக்க எழுச்சியை உருவாக்கும் என்று கிறேன். ''பொருட் செல்வம் பூரியார் கண்ணும் உள'' என்று அருளினார் வள்ளுவப் பெருந்த பொருட் செல்வத்தை விடப் பண்பு, உதார குணம், சேவை மனப்பான்மைதான் மிகவும் பெரி நம் இனத்தவர் உயர்ந்த நிலைக்கு வர வேண்டுமானால் உயர் கல்வி கற்று, போட்டித் தேர்வுக வெற்றி கண்டு, அரசு உயர் பதவிகளை அடைய முயற்சிக்க வேண்டும். தனிப்பட்ட முறை தொழில் செய்து பொருள் சேர்ப்பது ஒரு சாதாரண காரியம். ஆனால் I.A.S., I.P.S., I.F A.S., Class I ரயில்வே சர்வீஸ், வங்கி அதிகாரிகளாக நம்மவர் பெருமளவில் சேரத் தங்கள தகுதியாக்கிக் கொள்ள வேண்டியது மிக மிக முக்கியம். கைக்கோளன் என்ற பதத் இன்னமும் பொதுவாக ஒரு சாதாரண நெசவுத் தொழிலாளி என்றுதான் பிறர் கருதுகிறார் எனவே, நாம் வளர்ந்தால் மட்டும் போதாது; மற்றோரையும் வளரச் செய்வதே நம் வாழ்க் யின் சிறப்பு; பொறுப்பும் கூட. மகாத்மா காந்தி, நேரு, காமராஜ் இவர்களின் தியாக வாழ்க் நம் இனத்தவருக்குப் பாடமாக அமைய வேண்டும். அந்த வகையிலே இந்த 17வது மகாநாட் குடியேற்றத்திலிருந்து ஒரு வேகம் உருவாகட்டும். ஊருக்குப் பத்து இளைஞர்கள் திறமாக யாகச் செயல்பட்டால், நம் குலம் விரைவில் மற்றவர்களுக்கு இணையாகச் சரிசமமாக வாழ் அந்தஸ்து பெற முடியும். ''Give me few men and women who are pure and selfless I shall shake the world'' என்று சுவாமி விவேகாநந்தர் நூறு ஆண்டுகளுக்கு முன்பு 189 சிகாகோ நகரில் முழங்கினார். அந்தப் பெருமானின் வாசகம் இந்த மகாநாட்டின் லட்சியம குறிக்கோளாக, தேவவாக்காக அமையட்டும் என்பதே மாநாட்டுக்கு நான் விடுக்கும் செய்தி.

பணிவன்புடன்,

**சிங்காரவேல்**

M. M. தணிகைமலை
துணைத்தலைவர்
தென்னிந்திய செங்குந்தர் மகாஜன சங்கம்
சென்னை - 600 001

15, தேசிகர் தெரு,
கோடம்பாக்கம்
சென்னை-600 024

12-6-93

அன்புடையீர்!

வணக்கம்.

திருத்தணிகைப் பெருமான் செழுங்கருணையால், அவர்தம் தம்பியர் வழிவந்த நம் செங்குந்தர் குலம் திருவிரிஞ்சை நன்னாட்டுக் குடியேற்றத்தில் மாநாடு கூட்டி மலர்வெளியிட்டு வீறுகொள்ளும் நிகழ்வுகள் 1993 ஜூன் 26, 27 ஆகிய நாள்களில் நடைபெற இருப்பதனை அறிந்து மட்டற்ற மகிழ்ச்சியினை அடைகிறேன்.

வடவார்க்காடு வேலூர், வேலை அடிப்படையாகக் கொண்டது. அதனால் வெற்றி கொள்ளும் வேலாயுதத்திற்கும் வீரத்திற்கும் விதைநிலமான மாவட்டம் வடார்க்காடு அம்பேத்கார் மாவட்டமாகும். எங்கெல்லாம் அடக்குமுறையுள்ளதோ அங்கெல்லாம் உரிமைக்குக் குரல் கொடுப்போர் வடார்க்காடு மாவட்டத்தினர் என்பதைச் சிப்பாய்க் கலகம் காலம் முதல் இன்றுவரை உண்மையாக இருப்பதை எண்ணிப்பார்க்கிறேன்.

அத்தகைய எண்ணங் கொண்ட மாவட்டத்தின் செங்குந்தர் சங்கத் தலைவராகப் பொறுப்பேற்றுத் தலையாயச் சங்கத்தின் போற்றுதலைப் பெற்ற தாங்களைக் கல்வியுலகம் நன்கறியும்; திரையுலகம் நன்கறியும்; அறிஞர் அண்ணா அவர்களோடும் காமராசர் அவர்களோடும் கலந்துறவாடும் பேறுபெற்ற தாங்கள் தென்னிந்திய

செங்குந்தர் மகாஜன சங்க 17ஆவது மாநில மாநாட்டு வரவேற்புக் குழுத் தலைவராய்ப் பொறுப்பேற்றுக் கொண்டு 74 வயதிலும் 24 வயதுள்ள இளைஞரைப் போல் துறைதோறும் துடித்தெழுந்து தொண்டாற்றும் உத்வேகம் கண்டு உளமாரப் போற்றுகிறேன்.

சிலவற்றைச் சிலரால்தான் எண்ணியபடி முடித்திட முடியும். அந்தச் சிலருள்ளும், பாரதமே வியந்து போற்றும் பள்ளிச் சீரமைப்பு மாநாட்டை நடத்தி வெற்றி வாகை கண்டுள்ள தாங்கள் முன்னின்று நடத்திடும் இம்மாநாடு நம் தலைமைச் சங்கத் தலைவர் நெசவாளர் நேசன் திருமிகு J. சுத்தானந்தம் முதலாக எல்லாரும் போற்றிடும் இனிய மாநாடாக அமையும் என்பது திண்ணம்.

குடியேற்றம் காமராசரை முதல்வராக்கி அரசியல் திருப்புமுனையாய் அமைந்த ஊர். எண்பதாயிரம் செங்குந்தர் நெசவாளர் பெருங் குடி மக்களைப் பெற்று லுங்கி ஆடைக்குப் பெயர் பெற்ற ஊர். இது இந்த 17ஆம் மாநில மாநாடு நடத்தி புதிய தீர்மானங்களை நிறைவேற்றி நம் செங்குந்தர்குல வீர வரலாற்றின் திருப்பு முனையாய் அமையும் என்பது என் நம்பிக்கை.

நம்பிக்கை நாயகர்களை உருவாக்கிடும் பணி யினை இம்மாநாடு இனிதே நிறைவேற்றிடவும், மங்கையர் வாழ்வில் மறுமலர்ச்சியினைக் காணும் மகத்தான மாநாடாகவும், இளைஞர்களின் இதயத்தில் புதிய இரத்தத்தைப் பாய்ச்சிப் பொலிவு பெறச் செய்யும் நல்ல மாநாடாகவும் செய்யும் தொழில்களிலே நெய்யும் தொழிலை மேற்கொண்ட நம் குல நெசவாளர் பெருங்குடி மக்களின் வாழ்வில் புதிய பொலிவு ஏற்றிடும் ஏற்றமிகு மாநாடாகவும் அமைந்திடவும் என் மனம் கனிந்த நல்வாழ்த்துக்களை உரியதாக்கி மகிழ்கிறேன்.

மாநாடு தொடர்பாக நடைபெறும் பேரணி, பாராட்டு விழா, மாநாட்டுத் தீர்மானங்கள், மலர் வெளியீடு ஆகியவை நிரல்பட நிகழ்ந்து, நம்மவர் வாழ்வில் புதிய பாதையைச் சமைக் கட்டும் என்று மனமார வாழ்த்துகிறேன்.

வாழ்க செங்குந்தர்!
வெல்க செங்குந்தம்!
செங்குந்தர் இனம் வாழ்க!
இழையெண்ணும் குணம் வாழ்க!
கல்விச்சீர் பெற்று
காலமெலாம் நீடு வாழ்க!

இன்னணம்,

M. M. தணிகைமலை



மு. சிவசண்முகம்,
மாநில துணைப் பொதுச் செயலாளர்,
தென்னிந்திய செங்குந்த மகாஜன
சங்கம், சென்னை.
திருமணத் தகவல் நிலையச்
செயல் தொடர்பாளர்.

STD :024252
போன் : 24568 P P.

21 - C, அன்சாரி வீதி,
உடுமலைப்பேட்டை—642 126.
கோயமுத்தூர் மாவட்டம்,

# வாழ்த்துரை

உறவினர்களே! வணக்கம்.

தென்னிந்திய செங்குந்தர் 17 வது மாநில மாநாடு வட ஆற்காடு அம்பேத்கார் செங்குந்த மகாஜன சங்கம் சார்பாக குடியேற்றத்தில் நடைபெற உள்ளது அறிந்து பெரு மகிழ்ச்சி அடைகிறேன். அது தொடர்பாக மலர் ஒன்று வெளியிட இருப்பது அறிந்தும் மகிழ்ச்சி.

நம் இனத்துப் பெரியவர்கள் இளைஞர்கள் வளர்ச்சிக்கு வித்திடுபவர்களாக விளங்கவேண்டும். அனுபவம் மிக்க பெரியோரின் அரவணைப்பு நம் இனத்திற்கு நல்லதோர் எதிர் காலத்தை வழங்கும். தடைகளை விலக்கி, அனைத்துச் செங் குந்தர்களும் ஒற்றுமைத் திருமணங்களை நடத்த முன்வர வேண்டும்.

மாநில மாநாடு சிறக்கவும், மலர் மணம் பரப்பவும் கோவை மாவட்டச் செங்குந்த மகாஜன சங்கத்தின் சார்பில் இதயங் கனிந்த பாராட்டுக்களையும் வாழ்த்துக்களையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

வாழ்க செங்குந்தர்!

மு. சிவசண்முகம்

ஆ. ராஜவேலு,
துணைத் தலைவர், பேரூராட்சி
மன்றம் பெண்ணாடம்

துணைப் பொதுச் செயலாளர்:
தென்னிந்திய செங்குந்த
மகாஜன சங்கம், சென்னை.

பொதுச் செயலாளர்:
தெ, ஆ. மாவட்டம் (தெற்கு)
செங்குந்த மகாஜன சங்கம்.

மேனேஜிங் பார்ட்னர்:
ஸ்ரீ மூகாம்பிகை பைனான்ஸ்
& சிட்ஸ்.



77, வடக்கு ரதவீதி,
பெண்ணாடம் (அஞ்சல்)
திட்டக்குடி வட்டம்.
தெ, ஆ. மாவட்டம்
அ. கு. எண். 606105
போன்: 266

# வாழ்த்து மடல்

வரும் 1993ஆம் ஆண்டு ஜுன் திங்கள் 26, 27 ஆம் நாட்களில் வடார்க்காடு அம்பேத்கார் மாவட்டம் செங்குந்த மகாஜன சங்கம் சார்பாகத் தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் 17வது மாநில மாநாடும். அதனை ஒட்டி மாநாட்டு மலரும் வெளியிடவுள்ள செய்தி அறிந்து பெருமகிழ்ச்சி அடைகிறேன்.

குடியேற்றத்தில் 1935இல் 5வது மாநில மாநாடு நடைபெற்ற அதே ஊரில் 17வது மாநில மாநாடு நடைபெற உள்ளது மிகச் சிறப்பாகும். நம் மக்கள் எல்லா வகையிலும் வளம்பெற மாநிலச் சங்கம் துவக்கி 65 ஆண்டுகள் ஆகிவிட்ட நிலையில் நம் மக்கள் நிலையைப் பார்க்கும்போது மிகக் கவலையாக உள்ளது. மிகுந்த வறுமை, அரசின் உதாசீனம், பிற இனத்தார் நம் மக்களைத் துன்புறுத்தும் கொடுமை இவை கண்டு இரத்தம் கொதிக்கின்றது

இந்த அவல நிலை மாறிட நம் மக்கள் வாழ்வு வளம் பெற நம் இனத்தவரிடையே சமுதாய உணர்வை ஏற்படுத்த இம்மாநாடு பேருதவியாய் அமையும். இம்மாநாட்டை ஒட்டி வெளியிட உள்ள மலர் எல்லா வகையிலும் சிறப்பாகவும், நம் இனம் உள்ள அளவும் போற்றும் வகையிலும் மலர வாழ்த்துகிறேன்.

இம்மாநாடும் மாநாட்டு மலரும் சிறப்பாக அமைய அயராது பாடுபடும் மாவட்டச் சங்கத் தலைவர் திரு கோவிந்தராஜன் அவர்களையும், அவருக்கு உறுதுணையாக உள்ள பெருமக்களையும், இளைஞர்களையும் பெரிதும் போற்றுகிறேன் வணங்குகிறேன், வாழ்த்துகிறேன்.

இங்ஙனம்,
அன்புமறவாத உறவினன்
ஆ. ராஜவேலு,

**Ln. M. B. PANDURANGAM**, L.E.E., B.Com.,
Residence :
13/1, South Mada Street,
Mylapore, Madras-600 004.
Phone : 76434

பெருந்தலைவீர்,

நமது பதினேழாவது மாநில மாநாடு, செங்குந்தரின் நம்பிக்கைக்குச் சிறந்த வழிகாட்டியாகவும், நல்வாழ்வுக்கு வழிவகுக்கவும், குடியேற்றத்தில் நடந்து குந்தர்களின் மாநாடு குந்தர்களின் குடிகள் ஏற்றம் பெற்றிட வரலாறு அமைத்திடும் வகையிலும் சீரோடும், சிறப்போடும் நடைபெறும் என்பது திண்ணம்.

எதிர்வரும் இன்னல்களை இடித்துப் பொடிப்பொடியாக்கிட
எங்கள் குலத் தலைவர் ''ஜேசு''வின் தலைமையில்,
குடியேற்றத்தில் கூடுவோம். இம்மாநாடு
குன்றுதோறும் வீற்றிருக்கும் குமரன் அருளால்
பல்வேறு வகைகளிலும் வெற்றிவாகை சூடி,
பல்லாண்டு நினைவிருக்கும் வகையில், நடைபெற,
எனது மனமார்ந்த நல்வாழ்த்துக்கள்.

இவண்,
**ம. பா. பாண்டுரங்கம்**

---

*A. V. Rm. V Sankaranarayanan*
(alias Mani)
Managing Partner
The Gomathy Mills (Spinning)
Viravanallur-627 426 (Tirunelveli Dt.)
Tamil Nadu

அன்புடையீர்,

புத்தாண்டு வாழ்த்துக்கள்.

தங்கள் 25-12-92 தேதியிட்ட கடிதம் கிடைத்தது. மிக்க மகிழ்ச்சி.

நமது செங்குந்த மகாஜன சங்க 17வது மாநில மாநாடு குடியேற்றத்தில் சிறப்பாக நடைபெற எனது வாழ்த்துக்கள்.

குடியேற்றத்திலிருந்து நமது சமூகப் பெரியவர்கள் நிறைய பேர் நமது சமுதாயத்திற்கும், தலைமைச் சங்கத்திற்கும் தொண்டு செய்திருக்கிறார்கள். இப்போதும் செய்து வருகிறார்கள். நமது சமுதாய மக்கள் சிறப்பாக வாழும் ஒரு நகரம். இங்கு நமது மாநாடு நடப்பது சிறப்பானது.

மாநில மாநாடு மிகவும் சிறப்பாக நடைபெறவும், சமுதாயம் வளர முக்கிய முடிவுகள் எடுக்கவும் எனது பிரார்த்தனைகள்.

தங்கள் அன்புள்ள,
**ஏ. வி. ஆர்.எம். வி. சங்கரநாராயணன்**



## எஸ். பி. மணவாளன்

முன்னாள் சட்டமன்ற உறுப்பினர்

திருப்பத்தூர் தொகுதி

திருவாளர்

**K. M. கோவிந்தராஜன்**

வரவேற்புக் குழு தலைவர்

**17வது தென்னிந்திய மகாசன சங்க மாநில மாநாடு**

**குடியாத்தம்.**

அன்புடையீர்! வணக்கம்.

தென்னிந்திய செங்குந்த மகாசன சங்கத்தின் 17வது சமூக, இளைஞர், மகளிர், நெசவாளர் மாநாடு ஜுன் திங்கள் 26 27 தேதிகளில் நெசவாளர் சமுதாயம் நிறைந்த குடியாத்தத்தில் நடைபெறுவது குறித்து மிக்க மகிழ்ச்சி.

நெசவாளர்களை முழுமையாகக் கொண்ட செங்குந்த சமுதாய மக்களின் வாழ்க்கைத்தரம் உயர்வதற்கும், கைத்தறிகளின் வளர்ச்சிக் கும்,சமுதாய மக்களின் கல்வி, வேலைவாய்ப்புகளில் முன்னுரிமை பெற வும் இம்மாநாட்டின் வாயிலாக மத்திய, மாநில அரசுகளின் கவனத்தை ஈர்க்கும் வகையில் இம்மாநாடு சிறப்பாக அமையவும், வெற்றி பெறவும் எனது நல்வாழ்த்துக்களை உரிதாக்குகின்றேன்.

அன்புள்ள,

**எஸ். பி. மணவாளன்**





## A. K. C. சுந்தரவேல் M.L.A.

சட்டமன்ற உறுப்பினர்
திருப்பத்தூர் தொகுதி (வ.ஆ.அ.மா)
சென்னை பல்கலைக்கழக செனட் உறுப்பினர்
மாவட்ட திருக்கோயில் நிர்வாக வாரிய உறுப்பினர்



திருவாளர் K. M. கோவிந்தராஜன்
வரவேற்புக் குழு தலைவர்
17வது தென்னிந்திய மகாசன
சங்க மாநில மகாநாடு
குடியேற்றம்

அன்புடையீர், வணக்கம்.

இம்மாநாடு சிறப்பாக அமையவும் வெற்றியுடன் நடைபெற என் இதயங் கவர்ந்த நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

நன்றி... வணக்கம்.

அன்புள்ள

A. K. C. சுந்தரவேல், M.L.A

ஏ. நடராஜ முதலியார்
துணைத் தலைவர்
திண்டுக்கல் அண்ணா மாவட்ட
செங்குந்த மகாசன சங்கம்,
நீலமலைக்கோட்டை.

21-6-93

திரு. கே. எம். கோவிந்தராஜன் அவர்கள்
வரவேற்பு கமிட்டி தலைவர்,
17வது மாநில மாநாடு,
குடியாத்தம்.

மாநாடு அழைப்பிதழ் கண்டு மகிழ்ச்சி. நமது மாநில தலைவர் உத்யோகத்திற்கு திரு. ஜே. சுத்தானந்தன், பி.எஸ்ஸி., அவர்களுக்கு உறுதுணையாக இருந்து வலுப்படுத்த இந்த மாநாடு ஆக்கமும், ஊக்கமும் உதவி செயல்பட வாழ்த்தும்.

அன்பன்,

அ. நடராஜ முதலியார்
மண்டல செயலாளர்,
நீலமலைக்கோட்டை.
21.6.93





குடியேற்றத்தில் நடைபெற்ற 17ஆவது
மாநில இளைஞர் மாநாட்டுக்கு
முன்னிலை வகித்த

## திரு. ஆ. ராஜவேலு

அவர்கள் ஆற்றிய சொற்பொழிவு
துணைப்பொதுச் செயலாளர்
தென் இந்திய செங்குந்த மகாஜன சங்கம்.

உலக செங்குந்தர்களின் தலைவர், கைத்தறி காவலர், நெசவாளர் நேசன் 50 லட்சம் செங்குந்தர்களின் விடிவெள்ளி, உத்தியோக ரத்தினா திரு. ஜெ. சுத்தானந்தம் அவர்களே! மாநில சங்க காவலர், செயல்வீரர் டாக்டர் திரு. டி. ஆர். எஸ். அவர்களே! இம்மாநாட்டை சீரோடும் சிறப்போடும் நடத்திக் கொண்டு இருக்கின்ற வடார்க்காடு அம்பேத்கார் மாவட்ட சங்கத் தலைவர் எம். கே. எம். கோவிந்தராஜன் அவர்களே! இவரோடு தோளோடும் தோள் நின்று சிறப்பாக பணியாற்றிக் கொண்டு இருக்கின்ற நிர்வாகிகளே, இந்த மாபெரும் இளைஞர் மாநாட்டிற்குத் தலைமை ஏற்று இருக்கின்ற காஞ்சி தந்த முத்து நமது சமுதாய சொத்து எனது நண்பர் திரு. கு. ப. கண்ணன் அவர்களே! இம்மாநாட்டில் கலந்து கொண்டுள்ள சட்டமன்ற நாடாளுமன்ற இன்னாள், முன்னாள் உறுப்பினர்களே, வெளிமாநிலத்தில் இருந்தும், வெளிநாட்டில் இருந்தும் வந்துள்ள செங்குந்த சொந்தங்களே. இங்கு வருகை தந்துள்ள செங்குந்த சொந்தங்களே, எனது உயிரினும் மேலான தாய்குலமே, செங்குந்த சமுதாயத்தை நிமிர்த்தி நிறுத்திக் காட்டுவோம் என்று சூளுரை கொண்டு தலைவர் ஆணைக்காக காத்து நிற்கும் செங்குந்த இளம் சிங்கங்களே, இம்மாநாட்டுக்கு முன்னிலை வகிக்கும் நல்வாய்ப்பினை வழங்கிய பெரியோர்களே! தங்கள்அனைவருக்கும் எனது நன்றிகலந்த வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த மாநாட்டுக்கு முன்னால் 1[illegible] மாநாடுகளை நடத்தி உள்ளோம். நம் மக்களின் எழுச்சியையும், நாம் பாதிக்கப்பட்டுள்ள நிலையையும், நமக்கு அரசு செய்ய வேண்டிய சலுகைகள் பற்றியும் கோரிக்கைகள் பல வைத்தோம்.

20.4.1940-ல் சென்னையில் நடந்த சிறப்பு மாநாட்டிலும் 12.1.1946ல் கோவையில் நடத்திய பிற்பட்டோர் சங்க மாநாட்டிலும் செங்குந்தர் சாதியை மிகவும் பிற்படுத்தப்பட்டோர் பட்டியலில் சேர்க்கக் கோரிக்கை வைத்தோம். இப்படி எந்த மாநாடாக இருந்தாலும் நாம் கோரிக்கை வைத்ததோடு சரி, எந்த அரசும் இதுவரை நமக்கு எந்த சலுகையும் செய்யவில்லை.

அமரர் பத்மஸ்ரீ எம்.பி. நாச்சிமுத்து அவர்கள் கைத்தறிக்காகவே தனது வாழ்நாள் எல்லாம் செலவிட்டு மறைந்தார்கள்.

நமது தலைவர் திரு. ஜே. எஸ். அவர்கள் தலைவராக 27.4.87ல் மருத்துவ மனையில் சிகிச்சையில் இருந்தபோதே பொறுப்பு ஏற்றார்கள். அதற்குப் பின்னால் 3.12.88 அன்று நமது எழுச்சியை அரசுக்கு காட்ட சென்னையில் மிகப்பெரும் எழுச்சி பேரணியை நடத்தினோம். சென்னையில் 1990 மே திங்கள் 12, 13ல் மாபெரும் மாநாடு 5.11.90ல் நமது இனத்தை மிகவும் பிற்படுத்தப்பட்டோர் பட்டியலில் சேர்க்கக் கோரி எல்லா மாவட்ட

தலைநகரிலும் பேரணி, உண்ணாவிரதம், இரத்த கையொப்பம் என்று நமது எதிர்ப்பை காட்டினோம். ஆனால் அன்றைய அரசு செவிசாய்க்காமல் நமது சங்கத்திற்கு பெரிய இடியாக கிடைத்த சலுகையில் 20 %. எடுத்து ஒரு சில சமூகத்தவரை மிகவும் பிற்படுத்தபட்டோர் ஆக்கி நமது வயிற்றில் அடித்தார்கள்.

இன்று நமது இன இளைஞர்களின் படிப்பும், வேலைவாய்ப்பும்எண்ணிப்பார்க்கும் போது இரத்தம் கொதிக்கின்றது. ஓட்டுக்காக அரசியல்வாதிகள் எதையும் செய்கின்றார்கள். நம்மிடம் 50 லட்சம் ஓட்டுகள் உள்ளன. எதிர் காலத்தில் அரசியல் தலைவர்கள் நமது தலைவர் காலடியில் விழும் காலம் வெகு தொலைவில் இல்லை.

நமது இன மக்களுக்கு உடனடியாக பல சலுகைகளை பெற்றுத் தந்தாக வேண்டும். கைத்தறிக்கு குறிப்பிட்ட ரக ஒதுக்கீடு கைத்தறி நெசவாளர்களுக்கு இலவச மின்சாரம், இலவச வீட்டு மனைப்பட்டா, விசைத்தறிக்கு சலுகை விலையில் மின்சாரம், செங்குந்தர் சாதியை மிகவும் பிற்படுத்தப் பட்டோர் பட்டியலில் சேர்த்தாக வேண்டும். தமிழக அரசும் மத்திய அரசும் நியமித்துள்ள 3-வது பிற்பட்டோர் நல கமிஷனில் செங்குந் தர்க்கும் பிரதிநிதித்துவம் வேண்டும். கைத்தறி தொழிலை குலத்தொழிலாகக் கொண்ட செங்குந்தர்களையே தமிழக அரசு கைத்தறி அமைச்சராக்க வேண்டும். தியாகி திருப்பூர் குமரன், தில்லையாடி வள்ளியம்மை பெயரை புதிதாகப் பிரிக்க உள்ள மாவட்டத்திற்கு வைக்கவும். புதிய பேருந்து கழகத்திற்கு வைக்கவேண்டும். நெய்வேலியில் நிலக்கரி கிடைப்பதை முதலில் கண்டுபிடித்து அரசுக்கு தெரிவித்தவரும் தனது நிலங்களை எல்லாம் கொடுத்து உதவியவரும் ஆன திரு. ஜம்புலிங்க முதலியாருக்கு நெய்வேலி நிறுவன செலவில் முழு உருவ வெண்கல சிலை வைக்கவும், அங்கு ஓடும் பேருந்து கழகத்திற்கு ஜம்புலிங்க முதலியார் பெயரை சூட்டவேண்டும் என்ற பல கோரிக்கைகளை இங்கு வைத்து இருக் கிறோம்.

இந்தக் கோரிக்கைகளைத் தமிழக அரசும் மத்திய அரசும் விரைந்து செயல்படுத்த வேண்டுகிறேன். அப்படி நம் கோரிக்கைகள் நிறைவேற்றபடாவிட்டால் மிகப் பெரிய போராட்டம் வெடிக்கும். நமது கோரிக்கை நிறைவேறும்வரை போராட்டம் தொடரும். இந்த போராட்டத்தில் களம் காண இளைஞர் பட்டாளம் தயார். தலைவர் அவர்களே, ஆணையிடுங்கள். எங்கள் உயிர் போனாலும் கோரிக்கை நிறைவேறும் வரை போராடு வோம். அதுவரை ஓயமாட்டோம். உறங்க மாட்டோம். தமிழகத்தை ஸ்தம்பிக்க வைத்து காட்டுகிறோம். ஆணையிடு தலைவா என்று கூறி,

வாழ்க செங்குந்தர். வெல்க செங்குந்தம்.

வாய்ப்புக்கு மீண்டும் நன்றி கூறி அமைகின்றேன்.

நன்றி! வணக்கம்.





# தென்னார்க்காடு மாவட்ட சங்கச் செய்தி

**தென்னாற்காடு மாவட்டம் (தெற்கு) செங்குந்த மகாஜன சங்கம்,**
**77 வடக்கு இரத வீதி, பெண்ணாடம்-606 105,**
**தென்னாற்காடு மாவட்டம், எஸ்.டி.டி. கோடு 0414382**
**போன் 266**



சங்கம் துவக்கப்பட்டது : 10.4.1983

மாவட்டத்தில் உள்ள கிளைச் சங்கங்கள் : 60

**பொறுப்பில் இருந்த தலைவர்கள் :**

திரு. இரா. சோமசுந்தரம், எம்.ஏ.,பி எல்.
எம். பச்சமுத்து, எம்.ஏ.பி.எல்.,
திரு. வை.ஆனந்தன்.

**பொதுச் செயலாளர்கள் :**

திரு. க.பொன்னம்பலம், திரு.ஆ. ராஜவேலு.

**தற்போது பொறுப்பில் உள்ளவர்கள் :**

**தலைவர் :** திரு.வை. ஆனந்தன்,

**பொதுச்செயலாளர் :** திரு.ஆ. ராஜவேலு,

**பொருளாளர் :** திரு. த.ஞானப்பிரகாசம், மற்றும் நிர்வாகிகள்

**சங்க செயல்பாடுகள் :**

1. இதுவரை மாநில சங்கத்தால் நடத்தப்பட்ட மாநாடுகளுக்கு அதிக நிதியும், மலருக்குத் தேவையான விளம்பரங்களும் சேர்த்து கொடுத்ததோடு மாநாட்டிற்கும் பெரும் பகுதியாக வந்து கலந்து கொண்டார்கள்.

2. வள்ளல் சபாபதி ஆங்கிலப் பள்ளி கட்ட மாநிலத்திலேயே முதன் முதலில் நிதி சேர்த்துக் கொடுத்து, பள்ளி சிறப்பாக செயல்பட உதவியது.

3. பலமுறை மாவட்டத்தின் பல பகுதியில் ஒரே நாளில் பல கிளைச் சங்கங்களை துவக்கி சாதனை புரிந்துள்ளன.

4. தொழில் முனைவோர் கருத்தரங்கு நடத்தி தொழில் அதிபர்களையும் இண்டஸ்ட்ரியல் அதிகாரிகளையும் பேச

அதிகாரிகளையும் அழைத்து சிறப்பாக நடத்தி நமது மக்களுக்கு விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தியது

5. ஆண்டுதோறும் 12, 10 வகுப்பு மாணவர்களுக்கு ஊக்கப்பரிசு வழங்கி வருகிறது.

6. தென்னாற்காடு மாவட்டத்தை 18.3.1990 அன்று இரண்டாக பிரித்து மாவட்ட சங்க வளர்ச்சியை துரிதப்படுத்தப்பட்டது,

7. 5.11.90 அன்று மாநில சங்க ஆணைப்படி கடலூரில் மிகப் பெரிய ஊர்வலமும். உண்ணாவிரத போராட்டமும், இரத்த கையொப்பமும் வாங்கி அனுப்பப் பட்டது.

8. மாநில தலைவர் திரு.ஜே.எஸ். அவர்கள் மீது பொய் வழக்கு போட்டு கைது செய்த போது கண்டன போஸ்டர், கண்டன ஊர்வலம் மாநிலத்திலேயே முதலாவதாக செய்யப்பட்டது.

9. 16வது மாநில மாநாட்டில் கலைஞர்கள் மாநாட்டிற்கு எங்கள் சங்க பொதுச் செயலாளர் திரு. ஆர். ராஜவேலு தலைமை ஏற்று மிகச் சிறப்பாக நடத்தி வைத்தார்.

10. மாநில சங்கத்திற்கு அடிப்படை உறுப்பினர் சேர்த்தல், ஆயுள் உறுப்பினர் சேர்த்தல், மித்திரன் ஆயுள் சந்தா சேர்த்தல் முதலியவற்றில் அதிக கவனம் செலுத்தப்படுகிறது.

11. தென்னாற்காடு மாவட்டம் (தெற்கு) பகுதியில் சுமார் 40,000 ஆயிரம் செங்குந்தர்கள் வாழுகிறார்கள்.

குடியேற்றத்தில் நடக்கும் 17-வது மாநில மாநாடு சிறப்பாக நடைபெறவும் மாநாட்டை ஒட்டிவரும் மலர் மிகச் சிறப்பாக அமைந்து என்றும் வாடா மலராக இருக்க வாழ்த்துகிறோம்.

—ஆ. ராஜவேலு



# இளைஞர்கள் சிந்தனை மாறுகிறது

டாக்டர் க. சண்முக வேலாயுதம்.

இளைஞர்கள் சிந்தனை மாறி வருகிறது என்றால் அது உண்மையாம். பெருமைப்பட வேண்டும். அந்தப் பெருமை— மனநிறைவு— இன்னும் அதிகமான காரியங்களைச் செய்ய இளைர்களை மேலும் ஊக்குவிக்க வேண்டும்.

இளைஞர்களே! மாணவச் செல்வங்களே! நாளை உங்கள் கையில் தான் இந்த செங்குந்த சமுதாயம் உருவாகப் போகிறது. அதற்கு இன்றே உங்களைத் தயார் செய்து கொள்ளுங்கள். இன்றே பங்கு கொள்ளுங்கள். சமுதாய மக்கள் உங்களை நம்புகிறார்கள். ஏனெனில் நீங்கள் தன்னலமில்லா தொண்டர்கள்.

தன்னலமில்லாது உழைப்பவன் எல்லா எல்லைகளையும் மீறுகிறான்; அவனுக்கு ஒரு மாபெரும் சக்தி துணை புரிகிறது என்பது பதஞ்சலி முனிவர் கண்ட உண்மை.

இந்த சிந்தனை மாற்றம் இன்னும் பலசெங்குந்த இளைஞர்களிடம் உருவாகவில்லை. ஆகவே மற்ற இளைஞர்களுக்கு இம்மாற்றம் கொண்டு வர இனவிழிப்புணர்வு ஊட்டுங்கள். அதற்குக் கீழ்காணும் செயல்களில் ஈடுபடச் செய்யுங்கள்.

1. இளைஞர் சங்கங்களை கிராமந்தோறும் நிறுவுங்கள்.
2. கிராமப் பொருளாதாரத்தை, குடும்ப வருமானத்தை உயர்த்தப் பாடுபடுங்கள்.
3. மரங்களைநடுங்கள்.
4. இளைஞர்களே சுய தொழில் செய்யுங்கள்.
5. நாம் படித்தவர்களானாலும், தொழில் செய்பவரானாலும் சரி, கீழே இறங்கி அடிமட்டத்து மக்களுக்காக வேலை செய்ய வேண்டும்.
6. சமுதாய ஒற்றுமைக்குப் பிரசாரம் செய்ய வேண்டும்; நாடகம் போட வேண்டும்.
7. தேசிய மொழியான இந்தியைக் கற்றுக் கொள்ளுங்கள்.
8. வெளியூரில் வேலை கிடைத்தால் வேலை செய்யச் செல்லுங்கள்; வேலை கிடைப்பது அரிதாக உள்ளது.
9. உலகில் எது நிலையானது என்று ஒரு அறிஞன் கேட்டான். பின் அவனே பதில் சொன்னான். 'மாற்றம் ஒன்றுதான் நிலையானது என்று உலகம் மாறிக்கொண்டிருக்கிறது. இந்த மாற்றத்தைச் சமாளிப்பதற்கு கல்வியால்தான் முடியும்மேன் மேலும் படியுங்கள்.

"முயற்சிகள் தோற்பதில்லை; என்ன அழகான வாசகம் முயன்று பாருங்கள் வெற்றி நமதே!

வாழ்க செங்குந்தம்! வளர்க செங்குந்தம்!

வடார்க்காடு அம்பேத்கார் மாவட்ட

தென்னிந்திய மகாஜன சங்கத் தலைவர்

மற்றும்

தென்னிந்திய செங்குந்தர் மகாஜன சங்கத்தின்

17-வது மாநில மாநாட்டு வரவேற்புக் குழுத்

தலைவர் திருமிகு

# கே. எம். கோவிந்தராஜன்

அவர்கள் ஆற்றிய

# வரவேற்புரை

பாசத்திற்கும் பணிதலுக்கும் உரிய செங்குந்தர் குலச் செம்மல் நெசவாளர் நேசன் உத்யோக ரத்னா பெருந்திரு. **ஜே. சுத்தானந்தம்** அவர்களே! எந்நாளும் என் கடன் என் குலத்திற்கே எனச் செயலாற்றிவரும் பொதுச்செயலர் **டாக்டர் தி. ரா. செல்வராஜன் அவர்களே!** மதிப்பிற்குரிய மாநாட்டுப் பொறுப்பாளர்களே! உணர்ச்சிப் பெருக்காய்த் திரளாகக் கூடியிருக்கும் உறவுப் பெருமக்களே! நேசத்திற் குரிய நெசவாளர்களே! நலம்செழிக்க குலவிளக்கேற்றும் தாய்மார்களே! கட்டுண்டோம் காத்திருப்போம்; கட்டளையிடுங்கள் என்று வீர முழக்கமிடும் வீரவாகு வழிவந்த வீர இளைஞர்களே! உங்கள் அனைவரையும் வருக! வருக! என வரவேற்று மகிழ்கின்றேன்.

இந்த மங்கலகரமான நேரத்தில் இன்னொரு மகிழ்ச்சியான செய்தி. நம் குலம் நலம்பெற வளம்பெற நாளும் உழைத்திடும் நம் குலத்தலைவர் திரு ஜெ. சுத்தானந்தம் அவர்களுக்கு அண்மையில் பொன்விழா வரவுள்ளது. அப்பொன் விழாவினை 18-ஆவது மாநில மாநாடு என்று சொல்லும் வண்ணம் ஏற்றமுடன் பொலிவுடன் நடத்த வேண்டும் என்று மாண்புமிகு நீதி அரசர் **திரு. டீ. என். சிங்காரவேலு** மற்றும் குலச் சான்றோர்கள் அனைவரையும் வேண்டிக் கேட்டுக் கொள்வதில் இரட்டிப்பு மகிழ்ச்சியடைகின்றேன்.

கும்பகோணம் மாநாட்டில் கொடியேற்றும் பொறுப்பினைத் தந்து, குடியேற்றத் தில் 17-ஆவது மாநில மாநாடு நடத்திடக் கட்டளையிட்ட மாநில சங்கப் பொறுப்பாளர்களுக்கும், அனைத்து மாவட்டச் சங்கப் பொறுப்பாளர்களுக்கும், குறிப்பாக வடார்க்காடு அம்பேத்கார் மாவட்டச் சங்கப் பொறுப்பாளர்களுக்கும் என் நன்றி கலந்த வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

குடியேற்றத்திற்கென்று ஒரு வரலாறு உண்டு! அது தென்னிந்திய செங்குந்தர் மகாஜன சங்கத்தின் துவக்க நிலையிலேயே பின்னிப் பிணைந்து இணைந்த தொடர் வரலாறு என்பது மட்டுமல்ல தொடரும் வரலாறு கூட! ஆம்!! தென்னிந்திய செங்குந்தர் மகாஜன சங்கத்தின் முதல் மாநாடு 1929ஆம் ஆண்டு ஈரோட்டில் நடைபெற்றது. அந்தத் துவக்க முதல் மாநாட்டில் எங்கள் உறவினர் **அமரர் எம். வி. பீமராஜ முதலியார்** நம் மக்களோடு தனிச்சிறப்புப் புகைவண்டியே ஏற்பாடு செய்து கலந்து கொண்டார் என்பதை உங்கள் நினைவிற்குக் கொண்டு வருகின்றேன். அப்பெரியவரின் பெயர் கொண்ட நுழைவு வாயில்தான் வண்ணக்கொடிகளைக் கரங்களாகக் கொண்டு உங்களை வருக! வருக! என்று வரவேற்று மகிழ்கிறது.

நமது சங்கம் முதல் மாநாடு கண்டது 1929ஆம் ஆண்டில் நமது சங்கம் 17-வது மாநில மாநாடு காண்பது 1993ஆம் ஆண்டில். இடைப்பட்ட ஆறுபத்து நான்காண்டு கால சங்க வரலாற்றினை, சங்கத்தின் சேவையை நினைவூட்டுவது போல, அறுபத்தி நான்காவது நாயன்மாராக அவதரித்துள்ள **திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள்** வளாகம் அமைந்துள்ளது. அவ்வளாகம் உங்களை வாய்மணக்க வாழ்த்தி வரவேற்கிறது.

திரும்பவும் சொல்லுகின்றேன். இந்தக் குடியேற்றத்திற்கென்று ஒரு தனி வரலாறு உண்டு என்று! அருள்கூர்ந்து திருப்பத்தூர் பெருமக்கள் முகத்தைத் திருப்பிக் கொள்ள வேண்டாம். காரணம் பெரியவர் **அமரர் கா. அ. சண்முகனார்** குடியேற்றத்தையே வாழ வைத்தவர்! குடியேற்றத்திற்கே உரியவர்! அப்பெரியவர் தென்னிந்திய மகாஜன சங்கத்தின் தலைவராகவும் செயல் வீரராகவும் புரவலராகவும் விளங்கியவர். **அமரர் கா. அ.ச.** அவர்களின் உயர்நிலை உணர்ந்து அவருக்குச் சிலைகண்ட திருமகள் நூற்பாலை இயக்குநர் **திருமிகு எதிராச செங்குந்தர்** அவர்களுக்கு இந்நேரத்தில் நன்றி யினைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

எனவே, இந்தக் குடியேற்றத்தில் புகழ்க் கொடியேற்றி தென்னிந்திய மகாஜன சங்கத்தின் குலவிளக்கேற்றிய அமரர் **கா. அ. சண்முகனார் பந்தல்** சொந்த ஊர் என்ற பாசத்தோடு, உங்களை நேசத்தோடும் பரிவோடும் வரவேற்று மகிழ்கிறது.

அப்பெரியவரின் பெருமகனார் **அமரர் கா. அ. ச. பத்மநாபச் செங்குந்தர்,** பிரிவு படாத வடார்க்காடு மாவட்ட செங்குந்தர் மகாஜன சங்கத் தலைவராக இருந்தார். தனிப்பெரும் தொண்டாற்றினார். அவரை நினைவு கொள்ளும் இந்நேரத்தில் பலருக்குத் தெரியாத ஒரு உண்மையைச் சொல்லக் கடமைப்பட்டு உள்ளேன். குடியேற்றத்தில் மாநாடு நடத்த வேண்டும் என்ற எண்ணத்தை நெஞ்சில் விதைத்தவரே திரு. பத்மநாபச் செங்குந்தர் அவர்கள்தாம்.

அவர் மறைவதற்குச் சில மாதங்களுக்கு முன், அவர் கேட்டுக் கொண்டதற்கு இணங்க, வடார்க்காடு மாவட்ட செங்குந்தர் மாநாட்டினை நடத்தும் பொறுப்பினை ஏற்றுக் கொள்வதாக நான் அவருக்கு வாக்களித்தேன். நான் அவருக்கு அன்று கொடுத்த வாக்கினை நிறைவேற்ற இயலாமல், கடன் பட்டான் நெஞ்சம் போலக் கலங்கியிருந்தேன். சில ஆண்டுகள் கடந்து இன்று மாவட்ட மாநாட்டிற்குப் பதிலாக, வட்டியும், அபராத வட்டியும், முதலும் சேர்த்துத் தருவதுபோல மாநில மாநாடாக நடத்துவதால், கடன் தீர்த்த நெஞ்சம் போல் களித்து இருக்கின்றேன்! அமரர் பத்மநாபச் செங்குந்தரின் இந்த அரங்கம் உங்கள் ஒவ்வொருவரையும் தனித் தனியாக வரவேற்று மகிழ்கிறது, என்று சொல்லி நானும் உங்களோடு சேர்ந்து மகிழ்ச்சியடைகிறேன்.

பெருந்தொலைவில் இருந்து பேருந்துகளிலும், தங்கள் வசதிக்கேற்ற வாகனங்களிலும் இங்கு வருகை தந்துள்ள உறவினர்களே! எழுச்சியோடு பேரணியில் ஏற்றமிகு முழக்கமிட்டு வருகை தந்த உடன் பிறப்புகளே! மாநில மாநாடு நமக்கொரு மாற்றத்தைத் தரும், ஏற்றத்தைத் தரும் என்ற எண்ணத்தில் எண்ணில் அடங்காது இங்குக் கூடியிருக்கின்ற என் குலப் பெருமக்களே! உங்கள் அனைவரையும் மாநிலத்தின் சார்பிலும் மாவட்டத்தின் சார்பிலும் நகரத்தின் சார்பிலும் வரவேற்கின்றேன்.

இந்த எழுச்சியும் ஒற்றுமையும் இன்றுபோல் என்றும் இருந்தால் நம் குன்றுதோறாடும் குமரக்கடவுள் அருளால் எக்குறையும் இன்றி எந்நாளும்வாழ்வோம். பெருமக்களே! **'நான் இன்றுபோல் என்றும் இருந்தால்'** என்று சொல்வதிலேயே என்றும் இருப்பதில்லை என்பதை நினைவில் கொண்டே சொல்கின்றேன்.

''மயான வைராக்கியம் பிரசவ வைராக்கியம்'' என்று சொல்வார்களே அவைகளைப் போல நம்முடைய எழுச்சியும் ஒற்றுமையும் மாநாடு முடிந்த உடனேயே மங்கி விடுகின்றன! மடிந்து விடுகின்றன!

நம் குலமக்களால் பரவலாகப் பேசப்படும் ஒரு முதுமொழி—பழமொழி—'ஆமை புகுந்த வீடும், அமீனா நுழைந்த வீடும் உருப்படாது' என்பதாகும்.

அமீனா புகுந்தான் என்றால் அவ்வீட்டுக்காரன் கடன் பட்டான் என்பது நமக்குத் தெரிந்த ஒன்று. எனவே கடன் பட்டவன் உருப்பட மாட்டான். ஆனால் ஆமை புகுந்த வீடு என்றால்?..........— எந்த ஆமை?.........எப்படி உருப்படாமல் போகும்? என்ற கேள்விகள் எழலாம்.

அந்த முதுமொழியில் சொல்லப்படும் ஆமை உயிருள்ள நீர்வாழ் ஆமை அல்ல; உணர்வுடைய நிலம் வாழ் மனிதனின் நினைவில் நீங்காமல் வாழும் பொறாமை! ஆம்! பொறாமை!

இந்த ஆமை—அதாவது பொறாமை, தனி மனிதனின் வீட்டில் மட்டும் இருந்தால் நாம் கவலைப்பட வேண்டியதில்லை. ஆனால் அந்தப் பொறாமை நம் குலத்திற்குள்ளே புகுந்திருக்கிறதே என்பதை வேதனையுடன் தெரிவித்துக் கொள்கிறேன். இதை மாற்ற வழி காணுங்கள்—இன்று போல் உள்ள எழுச்சியும் ஒற்றுமையும் என்றும் நிலைக்க வழி தேடுங்கள்!

மாநாட்டுக்கு வரவேற்புக் குழுத்தலைவன் என்ற முறையில் சில கருத்துக் களை இங்குப் படைக்கின்றேன்.

பல தீர்மானங்கள்—போராட்ட முறைகள் இம்மாநாட்டில் கொண்டுவர இருக்கின்றார்கள். அக்கருத்துக்களில் ஊடுருவி உரிமை கொண்டாட நான் விரும்ப வில்லை. அது நயத்தக்க நாகரீகமும் அல்ல.

பிற்படுத்தப்பட்ட நம் சமுதாயம்—மிகப் பிற்படுத்தப்பட்ட சமுதாயமாக அரசு அறிவிக்க வேண்டும் என்பது நமது ஒன்றுபட்ட வேண்டுகோள். அதற்கு இம்மாநாடு ஒரு தூண்டுகோல்!

நாம் பிற்படுத்தப்பட்டவர் என்றால் யாரால் பிற்படுத்தப்பட்டோம்? எப்போதிருந்து பிற்படுத்தப்பட்டோம்? ஏன்? எதனால் பிற்படுத்தப்பட்டோம் என்பதைப் போன்ற கேள்விகளுக்கு நீங்களே விடை காணுங்கள்.

விரல்விட்டு எண்ணக்கூடிய அளவிற்குச் சில பெரியவர்கள்—பெருந் தலைவர்கள், பெரும் அதிகாரிகள் நம்மினத்திலும் உள்ளனர்.

முன்னேறிய இவர்கள் பின் தங்கியிருக்கும் தம் குலமக்களை கை கொடுத்துத் தூக்கி முன்னேற வழிகாட்டாமல் இருந்தாலும் பரவாயில்லை. ஆனால் சிலரோ, கால்கொடுத்துத் தடுக்கி விழச் செய்கிறார்கள் என்ற வேதனையை என்னால் வெளியிடாமல் இருக்க முடியவில்லை! கைக்கோளர்கள்—கால்கோளர்களாக மாறிய புதிரும் புரியவில்லை!!

நான் எல்லோரையும் சொல்லவில்லை. நம்மவர்களில் நல்லவர்களும் இருக்கின்றார்கள்! இந்த அரங்கிலேயே இருக்கின்றார்கள்.

வாழு; பிறரை வாழ விடு; முன்னேறு; பிறரையும் முன்னேற விடு; என்பதே இலட்சியமாக அமைய வேண்டும்.

சங்கம் எனக்கு என்ன செய்தது என்று கேள்வி கேட்பது எளிது. ஆனால் சங்கத்திற்கு நான் என்ன செய்தேன் என்ற கேள்வியை எழுப்பி ஒவ்வொருவரும் விடை காண வேண்டும். ஆத்ம சோதனை செய்து கொள்ள வேண்டும்.

சங்கத்தின் சாதனையால்தான் நாம் பிற்படுத்தப்பட்ட பட்டியலில் உள்ளோம். அதனால்தான் நம்மவர்களில் சிலராவது வேலை வாய்ப்பு பெற்றுள்ளார்கள். இதனை நிதானம் தவறாது நினைத்துப் பார்த்தால் சங்கத்தின் வரலாற்றுச் சாதனை தெரிய வரும்.

நான்—எனது என்ற அகங்காரங்கள் நீங்கி, நாம்—நமது என்ற அன்புணர்ச்சி இனியாவது ஏற்படவேண்டும். இந்தச் சமுதாய அன்புணர்ச்சி உண்டானால் நம் சமுதாயச் சொத்துக்கள் முழுமையாகச் சமுதாயத்திற்குப் பயன்படும் என்பது மட்டுமல்ல; புதிய சரித்திரமே படைக்கும் என்பதைப் பணிவோடு தெரிவித்துக் கொள்கின்றேன்.

கைத்தறி—விசைத்தறி—இளைஞர்நிலை — கல்வியில் நாம் — பெண்கள் முன்னேற்றம் — வேலைவாய்ப்பு — சமூகக் குறைகள்—அரசியலில் நாம்—அரசின் பாராமுகம்—இன்றைய நிலை—நாளை நாம் எதிர்பார்ப்பன போன்ற அனைத்துத் துறைகளுக்கும் வழிவகைகாண இம்மாநில மாநாட்டிற்கு வருகை தந்துள்ள பல்துறைச் சான்றோர்களே! ஆர்த்தெழும் அலைகடலென ஆர்வத்தோடு கூடியிருக்கும் அன்பு உறவினர்களே! எழுச்சிமிகு பேரணி காட்டிப் பெருமைப்பட வைத்த பெருமக்களே! "போற்றுவார் போற்றட்டும்—புழுதிவாரித் தூற்றுவார் தூற்றட்டும்! ஏற்றமிகு கருத்து என்றால் எடுத்து இயம்புவேன், எவர்வரினும் அஞ்சேன் நில்லேன்" என்று உங்கள் வாழ்த்துக்களோடு கூறி அனைவரையும் மீண்டும் வருக! வருக! என்று வரவேற்று மகிழ்கின்றேன்.

# தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் 17-வது செங்குந்தர் மாநாடு

## தலைவர் திரு. ஜெ. சுத்தானந்தன் ஆற்றிய தலைமைப் பேருரை

தமிழகத்தின் அனைத்துப் பகுதிகளி லிருந்தும், ஆந்திரம், கேரளம், கர்நாடகம், பாண்டி, மராட்டியம் போன்ற பிற மாநிலங் களிலிருந்தும், ஈழத்தில் இருந்தும் வருகை தந்துள்ள என் உயிரினும் மேலான இனிய சொந்தங்களே! இளைஞரணியைச் சேர்ந்த அன்புச் சகோதரர்களே! வணக்கத்திற்குரிய தாய்க்குலமே! அனைவருக்கும் என் நன்றி கலந்த வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இன்றைய சூழ்நிலை மிக சிக்கலான சூழ் நிலை என்பதை நான் நன்கு அறிவேன். ஏறி வரும் விலைவாசி, ஈடுபட்டுள்ள தொழிலில் போதிய வருமானமின்மை, பள்ளி, கல்லூரி களில் நம் குலக்கொழுந்துகளைச் சேர்ப்பதற்கு ஆகும் செலவுச் சுமை ஆகியவற்றோடு நம் செங்குந்தர் மகாஜன சங்கத்தையும் ஒரு குழந்தையாக ஏற்று அதைப் பேணிப் பாது காத்து மகிழும் உங்களைப் பார்த்து நானும் மகிழ்கிறேன்; பாராட்டுகிறேன்; வாழ்த்து கிறேன்; நன்றி செலுத்துகிறேன்.

பிற்படுத்தப்பட்ட, ஒதுக்கப்பட்ட, தாழ்த் தப்பட்ட மக்களுக்காக உரிமைக்குரல் எழுப்பிய சமுதாயப் புரட்சியாளர் டாக்டர் **அம்பேத்கார்** அவர்களின் பெயரைத் தாங்கி யுள்ள இந்த மாவட்டத்தில் அதே உரிமைகளுக் காகப் போராடும் நாம் கூடியிருப்பது பொருத்தமுடையது; அர்த்தமுடையது.

குலத் தொழிலான கைத்தறி நெசவு மட்டுமின்றி உடல் நலத்துக்குக் கேடு விளை விக்கும் தீப்பெட்டித் தொழில், பீடி சுற்றுதல் போன்ற குடிசைத் தொழில்களில் நம்மவர்கள் பல்லாயிரக் கணக்கில் ஈடுபட்டு இருப்பதே, நாம் மிகவும் பின்தங்கிய நிலையில் இருக் கின்றோம் என்பதற்குச் சான்றாக விளங்குவது இந்தக் குடியாத்தம். இந்த மண்ணிலிருந்து தான் நமது கோரிக்கைகள் விண்ணதிர ஒலிக்க வேண்டும்.

நம் கோரிக்கைகளை நாடறியச்செய்கின்ற வகையில் இந்த எழுச்சிமிகு மாநாட்டினை நடத்த முன்வந்த வட ஆற்காடு அம்பேத்கார் மாவட்டத் தலைவர் அவர்களுக்கும், மாவட்ட வட்ட நிர்வாகிகளுக்கும், ஏனைய பொறுப் பாளர்களுக்கும், தொண்டர்களுக்கும் என் பாராட்டுக்களையும், வாழ்த்துக்களையும் தெரி வித்துக் கொள்கிறேன்.

1929-ஆம்ஆண்டு ஈரோட்டில் நடைபெற்ற முதலாவது செங்குந்தர் மாநாட்டில் வாலிபர் மாநாட்டின் தலைமைப் பொறுப்பேற்ற தன்னலம் கருதாது சமுதாயத்தொண்டாற்றிய குடியாத்தம் நகர்மன்ற முன்னாள் தலைவர் திரு. **மா. வே. பீமராஜ செங்குந்தர்** அவர்களை யும், தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் தலைவராக 21 ஆண்டுகள் பணி யாற்றிய சமுதாயத்தின் முன்னோடிகளில் ஒருவரான திருப்பத்தூர் பெரியவர் **க. அ. சண்முக செங்குந்தர்** அவர்களையும், அவரை அடுத்து தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் துணைத்தலைவராகவும், ஒன்று பட்ட வட ஆற்காடு மாவட்டத்தின் தன்னி கரில்லாத் தலைவராகவும் விளங்கிய திரு. K. A. S. **பத்மநாப செங்குந்தர்** அவர்களையும் இந்த நேரத்தில் நன்றியுடன் நினைவு கூரக் கடமைப் பட்டிருக்கின்றேன்.

அதேபோன்று இந்த இயக்கம் தோன்று வதற்குக் காரணமாக இருந்த ஆரூர் வள்ளல் திரு. **சபாபதி செங்குந்தர்** அவர்களுக்கும், என்னுடைய ஆசானாகவும், வழிகாட்டி யாகவும் விளங்கிய, மறைந்தும் மறையாது நம் அனைவரது நெஞ்சங்களிலும் வாழ்ந்து கொண்டிருக்கும் இன்றைய எழுச்சிக்கு வித் திட்ட நம் ஒப்பற்ற தலைவர் கைத்தறிக் காவலர் பத்மஸ்ரீ **M.P. நாச்சிமுத்து செங்குந்தர்** அவர்களுக்கும் நம் அனைவருடைய இதயப் பூர்வமான புகழஞ்சலியைக் காணிக்கை யாக்குகிறேன்.

இந்தப் பெருமக்களை என் நெஞ்சில் நிறுத்தி வணக்கத்திற்கும் போற்றுதலுக்கும் உரிய நம் குலகுரு திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகளின் பொன்னார் திருவடி களை வணங்கி தலைமை உரையைத் தொடங்குகிறேன்.

கடந்த ஐந்து ஆண்டுகளில் நான்காவது முறையாக உங்களை எல்லாம் சந்திக்கின்ற வாய்ப்புக் கிடைத்தது எனக்குக் கிடைத்த பெரும் பேறாகவே கருதுகிறேன்.

ஐந்தாண்டுகளில் நான்கு மாநாடுகளை நடத்தினோமே? இதனால் நாம் கண்ட பலன் தான் என்ன? என்று கேட்பவர்களும் உண்டு. அவர்களுக்குக் கூறிக் கொள்வேன். சிதறிக் கிடந்த செங்குந்தர்களை ஓரணியில் திரட்டி சமுதாயத்தில் ஒரு மகத்தான எழுச்சியையும், விழிப்புணர்ச்சியையும் ஏற்படுத்தி இருக் கின்றோமே இதைக் காட்டிலும் வேறு என்ன பலன் வேண்டும்? இதுவே எல்லாவற்றிற்கும் அடித்தளமல்லவா?

நாம் கடந்து செல்ல வேண்டிய பாதை கரடு முரடானது; என்றாலும் உங்கள் அனை வரின் ஆதரவோடும், அரவணைப்போடும் வெற்றியின் எல்லையைத் தொடுவோம் என உறுதி கூறுகிறேன்.

நாம் செய்யும் குலத்தொழிலானது சீரும் சிறப்புடையதுதான்! ஆனால் நம்மிடத்தில் தான் சிரிப்பும் இல்லை! மகிழ்ச்சியும் இல்லை! நாம் செய்யும் தொழில் புனித மானதுதான்! ஆனால் நாம் தான் பாவப் பட்ட ஜென்மங்களாக இருக்கின்றோம்.

ஆட்சிகள் மாறுகின்றன! ஆனால் நம் வாழ்க்கைக் காட்சிகள் மாறவில்லை.! கொள்கைகள் மாறுகின்றன! ஆனால் கோலங்கள் மாறவில்லை! கைத்தறியை காப்பதாகச் சொல்கிறார்கள்! ஆனால் கவலைகள் தீர்ந்ததாக இல்லை!

நம்முடைய வறுமையை விரட்டி, வளமையைப் பெருக்கி, நம் எதிர்கால சந்ததியினர் வளமான வாழ்வைப் பெற்றிட சிந்தித்துத் திட்டம் தீட்டி செயல்பட இதுவே ஏற்ற தருணம்.

புதியன புகுத்தி இளைஞர்களுக்கு ஏற்ற தொரு மாற்றுத் தொழில் காணும் வேளையில் ஏற்கனவே இந்தத் தொழிலில் ஈடுபட்டிருக்கும் நம்மவர்களையும் நாம் காத்தாக வேண்டும்.

நமக்கு ஏற்படுகின்ற பாதிப்புகள் தொழிலில் மட்டுமல்ல, சமுதாய அமைப்பி லும் கூட, நாம் யாரையும் விரோதிகளாக நினைக்கவில்லை என்றாலும், மாற்று இனத் தவர் சிலர் நம்மை விரோதிகளாக நினைக்கின்றார்கள்.

இதன் விளைவாகத் தாக்கப்படுவதும் நாமே! வழக்குகளும் நம் மீதே! கலவரத் துக்குக் காரணம் நாமில்லை! ஆனால் காவலில் வைக்கப்படுவதும் நாமே!

இந்த நிலைமைகள் மாறியாக வேண்டும். அதற்கு ஒரே தீர்வு நாம் முன்னிலும் ஒன்று பட்டு வலிமையுடன் செயல்படுவதேயாகும்.

வகுப்புக் கலவரங்கள் ஏற்படும் முன்ன மேயே உரிய, உறுதியான முன்னெச்சரிக்கை நடவடிக்கைகளை எடுக்க வேண்டுமெனக் காவல் துறையினரை இம்மாநாட்டின் வாயிலாகக் கேட்டுக் கொள்கிறேன்.

இன்றைய இளைஞர்களின் கையில்தான் நாளைய செங்குந்தர்களின் எதிர்காலம் ஒப்படைக்கப்பட்டிருக்கிறது. ஆனால் அந்த இளைஞர்களின் எதிர்காலத்தை எண்ணிப் பார்க்கின்றபொழுது கண்ணுக்கெட்டிய தூரம் வரை காரிருள்தான் தெரிகிறது. இருந்தாலும் காரிருளைக் கிழித்துக் கொண்டு வைகறைப் பொழுதைக் காணுகின்ற ஆற்றலும், திறமை யும் நம் செங்குந்த இளைஞர்களுக்கு உண்டு.

அந்த இளைஞர்களை அரவணைத்து வழி நடத்திச் செல்ல வேண்டிய பொறுப்பும் கடமையும் முதியவர்களுக்கு உண்டு.

இளைஞர்களின் பேராற்றலை முழுமையாகப் பயன்படுத்தாத எந்தவொரு சமுதாயமும் வாழ்ந்ததாக, வளர்ந்ததாக இல்லை. இது வரலாறு காட்டும் பேருண்மை.

இதற்கு சாட்சியாக நம் இயக்கத்திலேயே செங்கை எம். ஜி. ஆர். மாவட்ட இளைஞர் அணியினர் சென்ற ஆண்டு அடுத்த மாநாட்டிற்குள்ளாக ஒரு லட்சம் ரூபாய் அளவுக்கு **''செங்குந்தமித்திரன்''** சந்தாக்களைச் சேர்ப்போம் எனச் சூளுரைத்து அதனை இன்று நிறைவேற்றியிருக்கிறார்கள். இந்தச் சாதனைக்குக் காரணமான அவர்களைப் பாராட்டுகிறேன்! வாழ்த்துகிறேன்.

அவர்களைப் பின்பற்றி திருச்சி மாவட்ட இளைஞரணியினரும் களத்தில் இறங்கியிருக்கின்றார்கள். அவர்களையும் பாராட்டுகிறேன். இதைப் போன்று மற்ற பகுதிகளிலும் இளைஞர்கள் செயலாற்றிட வேண்டுகிறேன். எனவே இளைஞர்களை இணைத்து செயல்பட மறுப்பவர்கள் இந்த இயக்கத்தின் வளர்ச்சியைத் தடை செய்பவர்களாவர். இனியாவது இளைஞர்களை இணைத்துச் செயல்படுங்கள். அல்லது அந்த இளைஞர்களைச்செயல்பட வழி விடுங்கள்.

இளைஞர்கள் சும்மா இருந்து சுகம் காணுவதை விடச் சுய தொழில் துவங்க முன் வர வேண்டும். அதற்கான தன்னம்பிக்கையை வளர்த்துக் கொள்ளுங்கள். தனித்துச் செயல்படத் தயங்கும் இளைஞர்கள் தன்னொத்த இளைஞர்களுடன் இணைந்து சுய தொழில் துவங்கலாம்.

போட்டி உலகம் இது. அதற்கேற்ற வகையில் நம்மை நாம் தயார் செய்து கொள்ளவேண்டும். இல்லையென்றால் நம் எதிர்காலம் கேள்விக்குறியாகிவிடும்.

சமீப காலமாகத் திருமணம் என்பது ஆடம்பர நிகழ்ச்சியாக மாறி பல்லாயிரக்கணக்கான ரூபாய்களைக் கடன் வாங்கியாவது செலவழித்திடும் போக்கு நம்மிடையே தொற்று நோயாகப் பரவி வருகிறது. இது நம்மை அழித்துவிடும். இந்தப் போக்கை மாற்றிச் சிக்கனத் திருமணங்களையும் நடத்திட முன்வர வேண்டும்.

படித்த இளைஞர்கள், படிக்காத இளைஞர்களுக்கும், படித்துக்கொண்டிருக்கும் மாணவர்களுக்கும் கல்வி போதிக்க வேண்டும். அரசு சலுகைகளை நம் மக்கள் பெற்றிட உறுதுணையாக இருக்க வேண்டும். நம்மை இணைக்கும் பாலமாக இருக்கும் **''செங்குந்த மித்திரனு''க்கு** சந்தா சேர்க்கும் பணியில் ஈடுபட வேண்டும்.

இன்னும் இது போன்ற பல பயனுள்ள சமுதாயப் பணிகளை உங்களிடமிருந்து எதிர்பார்க்கின்றேன். இந்த எதிர்பார்ப்பில் ஏமாற மாட்டேன் என்ற நம்பிக்கை எனக்குண்டு.

ஒரு சமுதாயத்தின் கண்கள் என்பது பெண்களாகும். பெண்களின் முன்னேற்றத்தில் அக்கறை காட்டாத சமுதாயத்தை எண்ணும் பொழுது **''கண்கள் இரண்டினில் ஒன்றைக் குத்திக் காட்சி கெடுத்திடலாமோ?''** என்ற மகாகவி பாரதியின் வரிகள்தான் நினைவுக்கு வருகின்றன.

இன்று பெண்களுக்கு எல்லாத் துறைகளிலும் முன்னுரிமை கொடுக்கப்பட்டு வருகிறது. கல்வி, வேலைவாய்ப்பு, சுய தொழில், தேர்தல்களில் பங்கு என எல்லா நிலைகளிலும் பெண்களுக்கு என்று சலுகைகளும், ஒதுக்கீடுகளும் இருக்கின்றன. ஆனால் நம் செங்குந்தர் குலப் பெண்மணிகள் எந்த வகையிலும் அவைகளைப் பயன்படுத்திக் கொள்வதில்லை. இத்தகைய நிலைமைகள் மாறியாக வேண்டும்.

நம் குலப்பெண்களைக் குறைந்தது பத்தாவது வகுப்பு வரையாவது படிக்க வையுங்கள். வாய்ப்பிருந்தால் பெண்களுக்கேற்ற தொழில் கல்விகளைப் படிக்க வையுங்கள். இனி வருங் காலத்தில் ஆண், பெண் இருவரும் சேர்ந்து சம்பாதித்தால்தான் வாழ்க்கையில் உயர முடியும்.

அதேபோன்று பெண்களுக்கு அரசு அளிக்கின்ற சலுகைகளையும், வாய்ப்புகளையும் முழுமையாகப் பயன் படுத்திக் கொள்ள வேண்டும்.

நம்மவர்களுக்கு வளமான வாழ்வில்லை. வறுமையிலே வாடுகின்றோம். குடும்பமே

உழைத்தாலும் அரை வயிற்றுக் கஞ்சிக்கும் வழியில்லை.

ஏறிவரும் விலைவாசியில் வாங்கும் சக்தியை இழந்த நாம் விற்பனைப் பொருளாக மாறிவிட்ட கல்வி, வேலை வாய்ப்புகளை விலை கொடுத்து வாங்க முடிவதில்லை.

இவ்வளவு துன்பத்துக்கும், இன்னல்களுக்கும் இடையில் படித்துப் பட்டம் பெற்ற ஒரு சில இளைஞர்களும் வாங்கிய பட்டத்தைக் கையில் வைத்துக்கொண்டு வேலை வாய்ப்புத் தேடி சுற்றிச் சுற்றி வருகின்றார்கள்.

தங்கள் உடமைகளை விற்று அவனைப் படிக்க வைத்த பெற்றோர்களும் அவனது எதிர்காலத்தை எண்ணி ஏக்கப் பெருமூச்சு விடுகின்றார்கள்.

இந்த அவல நிலை இன்னும் எத்த நாளைக்கு? இந்தக் கொடுமைகளுக்கு தீர்வே கிடையாதா?

தீர்வு உண்டு. இதற்குள்ள ஒரே தீ நம்மை மிகவும் பிற்பட்டோர் பட்டிய சேர்ப்பதேயாகும்.

இதனை அடைவதற்கான வழிவகைக போராட்டத் திட்டங்களை மாநாட்டு நி வுரையில் அறிவிக்க இருக்கிறேன். அத உங்களைத் தயாராக்கிக் கொள்ளுங்கள்.

வாழ்க செங்குந்தம்!

வளர்க செங்குந்தர்!



# செங்குந்த இளைஞர்களே ஒன்று சேருங்கள்

## அ. பீதாம்பரம்

மாநில செயற்குழு உறுப்பினர் தென்னிந்திய செங்குந்த மகாசன சங்கம்
அமைப்புச் செயலாளர் வ. ஆ. அ. மா.
தலைவர், அரக்கோணம் வட்ட செங்குந்த சங்கம், சம்பத்துராயன் பேட்டை

சாதியின் பெயரால் சங்கங்கள் எதற்கு? ன்ற கேள்வி நமது சங்கம் தோன்றிய ளிலேயே எழுந்ததாகும். சாதிபேதங் ளை மறந்து இந்தியாவிலுள்ள பல கோடி க்களும் எல்லோரும் ஓரினம், ஓர்குலம், ன ஒருமைப்பாட்டுணர்வோடு வாழ வண்டிய இக்காலத்தில் ஏன் இந்தச் சாதி ங்கம் என்பவர்க்கு நாம் கூற விரும்புவது: ம் கல்வியிலும் பொருளாதாரத்திலும் ரசியலிலும் நமது நாட்டில் வாழ்கின்ற னைய சங்கங்களை விடப் பின்னடைந் ருக்கிறோம். பிற்பட்ட சமூகத்தவர் ளுக்குநமது அரசினர் சாதி அடிப்படையில் ான் கல்வி அரசாங்க அலுவல்கள் தலியன அளித்து வருகின்றனர்.

இந்த முறையில்லையேல் நாம் இன்று அடைந்துள்ள கல்வி நலம் அடைந்திருக்க டியாது. எனவே, இத்தகைய சலுகை ளைப் பெற்று நமது ஏழைச் சமூகம் ன்னேற்றமடையும் வரையில் நமக்குச் ங்கங்கள் இருந்தே தீர வேண்டும். அதோ ாருங்கள்! நம்மைப் போலவே பிற்பட்ட மூகத்தவர்கள் தங்கள் இனத்துக்கென்று சங்கங்கள் மட்டுமல்ல, தங்களுக்கென ஒரு கட்சியே அமைத்துக் கொண்டு, அரசியலி லும், அமைச்சரவையிலும் பெருமளவில் தொடர்ந்து பங்கு பெற்றுத் தம் இனத் தவர் வாழ, வளர அருந்துணை புரிந்து வருகின்றார்கள். அது மட்டுமன்று, அவர்களின் ஒற்றுமையின் ஆற்றலையும், கட்டுப்பாட்டையும் ஆதரவாக வைத்துக் கொண்டு அவர்கள் நம்மைவிட வேகமாக முன்னேறுகிற காட்சியைக் கண்டு நாம் பொறாமைப்படவில்லை. மகிழ்ச்சியோடு வரவேற்கிறோம்.

நாம் என்ன செய்கிறோம் என்பதை நினைக்கும்போது நம் குல முன்னேற்றங் கருதும் ஒவ்வொருவரும் மிக வருந்துவர் என்பதில் ஐயமில்லை. நமது குல ஏழை மக்களின் நலனைக் காக்கப் போதிய பிரதி நிதித்துவம் அரசியலில் நாம் பெற வில்லை. பெறுவதற்கும் முயன்றோ மில்லை. நமது குலம் முன்னேற வேண்டும் என்பதற்கும் நமது தலைச் சங்கத்தினர் சங்கங்கள் நிறுவினர்; செங்குந்த இளைஞர் அணி ஏற்படுத்தினர். இதை நம் இளைஞர் கள் நன்கு சிந்தித்துச் செயலாற்ற முன் வர வேண்டும் எனக் கேட்டுக் கொள்கிறோம். ஒரு சமூகத்துக்குச் சாலப்பரிந்து பால் நினைந்தூட்டும், தாயைப் போல மிகுந்த உதவிகள் செய்தும் அது போதாது எனத் தமக்கொரு கட்சியும் துவங்குகின்ற காட்சி யும் நீங்கள் காண்கிறீர்கள் அல்லவா? இனியாவது எழுங்கள்! ஒன்று கூடி நம்மவர்கள் வாழும் ஊர்கள் தோறும் இளைஞர் சங்கங்கள் அமையுங்கள். பெரிய நகரங்களில் வீதிக்கொரு சங்கம் அமையுங் கள்! அவற்றின் மூலம் முன்னேற்றப் பாதைகளை வகுத்துச் செயலாற்றச் சபதம் எடுத்துக் கொள்ளுங்கள்.

*எனது அருமைச் செங்குந்த இளைஞர்களே!*
*வளம் பெறும் முயற்சிக்கு முந்துங்கள்!*
*செங்குந்த இளைஞர் அணி அமையுங்கள்!*
*ஒன்று பட்டு உழையுங்கள்!*
*நாம் முன்னேறுவோம்!*

# "செங்குந்தர் சிறந்திட சங்கத்தை வளர்த்திடுவீர்"


**புலவர் இராம. உதிஷ்டன்,** எம். ஏ., எம். எட்.

செயலாளர், செங்குந்த மகாஜன சங்கம்

தெ. ஆ. மா. (வடக்கு) மயிலம்-604 304


தங்கத்தால் முடியாதது சங்கத்தால் முடியுமென
இங்குற்ற செங்குந்தர் இதயத்தில் இருத்தியே
சங்கத்தை வளர்த்திடவே அங்கத்தினர் ஆகிடுவீர்!
அங்கத்தின் உழைப்போடு தங்கமும் நல்கிடுவீர்!!
பொங்குகவி ஒட்டக்கூத்தர் மரபுவழி வந்தநாம்
மங்கியதோர் நிலையற்ற மாநாடு பதினேழை
ஓங்குபுகழ் குடியாத்தம் நகரில் கண்டோம்
செங்கதிரும் திங்களுமாய்ச் செயலாற்றும் நம்சங்கத்
தங்கத் தலைவர் செயலர் வழியினிலே
சிங்கமெனப் பாய்ந்துமே செயற்படுவோம் எந்நாளும்
இங்குள்ள செங்குந்தர் சிறந்திடவே நாமெல்லாம்
செங்குருதி சிந்திடவும் சிந்தையினில் உறுதிகொள்வோ
சங்கத்தின் அங்கத் தினரின் உயர்வே
சங்கத்தின் உயர்வெனவே எண்ணி நாம் உழைத்திடுவோ
நம் குலத்தில் மேல்நிலையில் உள்ள மாந்தர்
பாங்குடனே கீழுள்ள நம்மவரை உயர்த்துகின்ற
தங்கத் திருநாளே நாம்மகிழும பொன்னாளாம்
ஈங்கிதனை அனைவருமே ஏற்றிடும இந்நாளே
செங்குந்தர் வாழ்வில் ஓபுனித நன்னாளாம்
சங்கத்தமிழ் கொண்டு சபைதனில் பேசினாலும்
பொங்குகவி எழுதியே புத்தகம ஆக்கினாலும்
ஓங்கி உயர்ந்தவர் தேங்கித் தாழ்ந்தவரை
தாங்கி உயர்த்திட எண்ணாத வரையினில்
செங்குந்தர் வாழ்வினிலே உயர்ந்திடவும் வழியில்லை
ஓங்கியவர் தாழ்ந்தவரை உயர்த்து வோமென்று
இங்குநம் பதினேழாம் மாநாட்டில் சூளுரைப்போம்

# செங்குந்த சொந்தமே சிந்திப்பாய் இன்று நீ!

புலவர். இராம உதிஷ்டன், எம். ஏ, எம். எட்,
செயலாளர் செங்குந்த மகாஜன சங்கம்,
தென்னாற்காடு மாவட்டம் (வடக்கு)
மயிலம்-604304

ங்குந்த சொந்தமே சிந்திப்பாய்
சிறந்து வாழ்ந்தோம் நாபப்பா
இன்று அந்த நிலைமையே
இறங்கிப் போனதும் ஏனப்பா?
ஒன்று பட்ட நாமெல்லாம்
உயர்ந் திருந்தோம் அன்றப்பா
விண்டு போன காரணத்தால்
வீழ்ந்து விட்டோம் இன்றப்பா
கொண்ட கொள்கை விட்டுமே
குதர்க்கம் பேசி வந்ததால்
சண்டை மிகவும் வலுத்திட
சரிந்து போனோம் கேளப்பா
உரிமை உள்ள போதிலும்
உதவி செய்ய மறுத்திட்டோம்
கருணை உள்ளங் கொண்டுமே
கைகொடுக்க மறந் திட்டோம்
கூட்டம் கூடிப் பேசினோம்
கூடி வாழ மறந்திட்டோம்
நாட்டம் கொண்டு நமக்குதவ
நம்ம வரும்மறந் திட்டார்
கெட்ட எண்ணங் கொண்டுமே
கீழுள் ளோரை நசுக்கினார்
கட்டாயம் நம்ம வர்க்குக்
கருணை கொண்டு உதவினால்
பட்டமரம் தழைப்பது போல்
பாரினிலே நாமுயர் வோம்!
திட்ட மிட்டே நம்மவர்க்குத்
தினமுதவி நலமடை வோம்!!



# புதிய சாதனைகள் படைத்திடுவோம்!

**கவிஞர் தென்னவன்**
செம்பொன்னார் கோவில்



தங்கம்தான் செய்யாததை—நல்ல
சங்கம்தான் செய்யுமென
இங்கிதமாய் எடுத்துரைப்பர்—இதை
எதிர்ப்பாரும் உளராமோ? (1)

நம்குந்தர் சங்கமுமே—தோன்றி
நலமுறவே எழுபதாண்டு
செம்மைமிகு வாழ்வினிலே—பற்பல
சாதனைகள் படைத்ததுவே (2)

சங்கம்நமக் காற்றியுள்ள—அருஞ்
சாதனைகள் சிலமட்டும்
இங்கெடுத்து மொழிகின்றேன்—நீர்
எல்லோரும் வியப்புறவே (3)

மாவட்டம் பலவற்றுள்—முன்பு
வேறுபட்டு வாழ்ந்த நம்முள்
மேவட்டும் ஒற்றுமையே—என
மிளிரத்தான் செய்ததெது? (4)

தறிக்குழியில் வீழ்ந்துற்ற—கல்வி
தனையறியா மடமையினை
குறிக்கொண்டே இடித்துரைத்து—இன்று
குலம்தழைக்கச் செய்ததெது? (5)

படிக்கின்ற மாணவரை—நல்ல
பண்புளத்தால் ஊக்கிவிட
அடுக்காகப் பரிசுகளை—இன்று
அளிப்பதுவும் எதுவாமே? (6)

வசதியற்ற மாணவர்க்கு—மிக்க
வளமான கல்வியினை
கசடற்றுக் கற்கவென—உதவிக்
கரம்தந்து தூக்குவதெது? (7)

நெசவாளர் இன்னல்களை—அரசு
நிலையாக உணரவென
இசைவாக மாநாடுகள்—கூட்டி
இயம்பிநலம் செய்வதெது? (8)

கல்வி, பொருள், அரசியலில்—நாம்
கடைநிலையில் உளநிலையை
நல்விதமாய் எடுத்துரைத்தே—அரசு
நமைப்புரக்கச் செய்வதெது? (9)

சென்னை சேத்துப்பட்டில்—கல்வித்
திறனூட்டும் பள்ளியினைப்
பன்னருஞ்சீர் வள்ளலாரின்—பெயரில்
பண்புடனே நடத்துவதெது? (10)

எழிற்செல்வ வளம்காண—வேலை
இல்லாத இளைஞர்க்காய்த்
தொழில் முனைவோர் கருத்தரங்கைக்—கூட்டி
துணைநிற்பதும் எதுவாமே? (11)

குறிப்பிட்ட வட்டத்துளே—பெண்ணைக்
கொடுத்துப் பெறும் வழக்கமதை
நெறிப்பட்ட ஒற்றுமைமணம்—தன்னால்
நிலைமாற்றம் செய்வதெது? (12)

பிற்பட்டோர் பட்டியலால்—நாம்
பேருயர்வைப் பெற்றதாக
முற்பட்டோர் பட்டியலில்—சேர்க்க
முனைந்ததனைத் தடுத்ததெது? (13)

சீர்மரபினர் பட்டியலுள்—நமைச்
சேர்க்கவெனப் பேரணியும்
ஓர்நாளில் உண்ணாநோன்பும்—நடத்த
ஊக்கத்தைக் கொடுத்ததெது? (14)

வேட்டியுடன் சேலைகளை—நம்
விடிவெள்ளி கைத்தறிக்கே
நாட்டமுடன் ஒதுக்கிடுக—என
நயமுடனே புகன்றதெது? (15)

வீடில்லா நெசவாளர்—நிலையை
விரித்தோதி மழைக்கொதுங்க
கூடுபோலும் 'இல்'எனினும்—ஒன்றைக்
கொடுத்துதவக் கேட்பதெது? (16)

வீடுள்ளார் தொழில்செய்து—பசி
வேதனையைத் தணிக்கவென
பாடுபட இலவசமாய்—மின்
பாய்ஒளியைக் கேட்பதெது? (17)

தலைநகருக்கு வருவோர்கள்—சின்னாள்
தங்கித்தம் பணிமுடித்துச்
செலவெனவே **மாளிகையை**—சென்னைத்
திருநகரில் அமைத்ததெது? (18)

குந்தர்க்குக் கைவாளாய்—நம்
குல இளைஞர் கைவாளால்
சிந்தைக்கே இனியதான—'மித்திரன்'
திங்களிதழ் தருவதெது? (19)

ஒளிமிக்க எதிர்காலம்—தனை
உவப்புடனே காண்பதற்காய்
இளைஞர்க்குப் **பயிற்சிமுகாம்**—இன்று
எழிலாக நடத்துவதெது? (20)

நம்மவர்க்குத் தொண்டுசெய—இனி
நம்மில்பலர் ஒன்றுகூடி
எம்மன்றம் கண்டாலும்—அதனை
ஈன்றபுகழ் எதற்காமே? (21)

ஈவேந்தர் மனம் வைத்து—கொடுக்கும்
எளிய தொகை தமைச்சேர்த்துப்
**பாவேந்தர் அறக்கட்டளை**—இன்று
பண்புடனே நிறுவுவதெது? (22)

இப்படியாய்ச் சாதனைகள்—பலவாய்
இயற்றியதாம் நம்சங்கம்
செப்படிவித் தையேபோல்—அவற்றைச்
செய்துபுகழ்ப் பெற்றதுவே (23)

நம்தலைவர் **ஆனந்தர்**—அவர்
நற்றொண்டால் சங்கமுமே
தெம்புடனே மேலோங்கி—இன்று
சிறப்பாக உளதெனலாம்! (24)

எனவேதான் சங்கத்தை—நம்
இதயத்தில் கொலுவேற்றிக்
கனவினிலும் நனவினிலும்—உயர்
கடமைகளைச் செய்திடுவோம்! (25)

எங்குமுள குந்தரெலாம்—ஒன்றாய்
இணைந்திடுவீர் இப்போதே;
சங்கத்தைக் கொண்டேநாம்—புதிய
**சாதனைகள் படைத்திடுவோம்!** (26

---

## ஈட்டியெழுபது :

**செங்குந்தர் மரபைச் சிறப்பித்துப்பாட உடன்படாத ஒட்டக்கூத்தரைக் கொலை செய்ய ஆலூர்ச் செங்குந்தர் முயன்றனர். இதனையறிந்த கூத்தர் ஓராயிரத்தெண்மர் சிரங்களை அறுத்து ஒன்றாகக் குவித்துச் சிரச்சிங்காதனம் அமைப்பின் அதன்கண் இருந்து ஈட்டிப் படையைக் குறித்து ஒரு பிரபந்தம் பாடுவேன் என்று கூறினார். அதனைக் கேட்ட செங்குந்த மரபினர் அனைவரும் ஒருங்கு திரண்டு சென்று புலவரின் விருப்பத்தின்படியே தங்கள் தலைகளை யரிந்து வைத்துச் சிரச்சிங்காதனமிட்டுத் தம் வீரத்திறத்தைக் காட்டி நின்றனர். அப்போது அச்சிரச்சிங்காதனத்தில் வீற்றிருந்த புலவர் பெருமான் தம் மரபினரது வீரம், பெருமைகளை எல்லாம் ஈட்டியெழுபது, என்ற நூலால் பாடினார்.**



# தமிழுணர்வு

புலவர் இரா. சுப்பிரமணியன்
(காஞ்சி நி. ச. மா.)





**பாவேந்தர் பாரதிதாசனார் நூற்றாண்டு விழா
கவிதைப் போட்டியில் முதல் பரிசு பெற்ற கவிதை**

தமிழ்நாட்டைக் கற்ற தமிழன்றா னாள்க
அமிழ்தமொழி காப்பீர் அளிசேர்—தமிழரே!
மெல்லத் தமிழ்ச்சாகும் வேற்றுமொழி யேற்பீரேல்
சொல்லியசொல் பாவேந்தர் சொல் (1)

அன்பு தரும்தமிழில் நல்லின்ப முண்டென்றார்
துன்ப மினியில்லை தூயவர்நாம்—என்னாட்டீர்!
துள்ளும் பகைமுடிப்பீர்! ஞானத் தமிழ்த்தேனை
அள்ளியுண்பீர்! பாவேந்த ராசை (2)

குயில்பாட்டும் கோல மயில்பாட்டும் திங்கள்
வெயில்பாட்டும் விண்மீன்கள் பாட்டும்—மயல்காட்டும்
கன்னித் தமிழ்வாய்; கனிவாய் துணிவாயாம்
பன்மொழிவாய் பாவேந்தர் வாய். (3)

எங்கள் தமிழ்தா னிளமைக்குப் பாலாகும்
எங்க ளசதிக்குத் தேனாகும்—எங்கள்
புலவர்க்கு வேலாகும் பொன்மன தாசன்
புலமை தமிழ்மணமே வீசும். (4)

மங்கை தரும்சுகத்தின் மேலான பூந்தமிழ்க்குப்
பங்கம் விளைந்திடில் மூச்சளிப்போம்—பொங்கும்
தமிழர்க ளெல்லாரும் தன்மானர் என்னும்
அமிழ்தப்பா வேந்தரின் பா. (5)

கனிச்சுவையும் முற்றல் கழைச்சுவையும் பாலின்
தனிச்சுவையும் தேனின் சுவையும்—இனிதெனினும்
எந்தம் தமிழின் சுவைக்கீடோ? பாவேந்தர்
தந்தபா எந்தப்பா நேர். (6)

எங்களின் வாழ்வெல்லாம் எங்கள் வளமெல்லாம்
மங்காத் தமிழென்று மார்தட்டி—சிங்கங்காள்
செங்குருதி சிந்தி தமிழ்காக்கப் பாவேந்தர்
சங்கே முழகென்றார் வா. (7)

தமிழின் வளர்ச்சியே தண்டமிழன் மேன்மை
அமிழ்தமாய் வாய்ந்தநற் பேறு—தமிழ்தமிழ்
என்றா லமிழ்தம் கிடைக்குமென்றார் பாவேந்தர்
சொன்ன வழகே யழகு. (8)

எங்கள் தமிழ்க்காதல் எங்கள் தமிழ்மீதில்
எங்கள் மொழியேதா னெம்தெய்வம்—எங்கள்
துறையனைத்தும் செந்தமிழே ஆள்கவெனச் சொல்லும்
கறைபடாப் பாவேந்தர் பாட்டு. (9)

பாடகரே மேடையில் பாடுவீர் தேன்தமிழில்
நாடகரே பேசிடுவீர் நம்மொழியால்—வீடகத்தும்
வேண்டாதீர் வேற்றுமொழி நெஞ்சம்பொறுக்கவில்லை
காண்பீரே வேந்தர் கருத்து. (10)

பலகடையில் தொங்கும் பலகை புரிய
சிலவேனும் செந்தமிழிலுண்டா—வலம்வந்து
காணுங்கள் பாவேந்த ராணை; பிறமொழியை
வேண்டாதீர் வேண்டும் தமிழ். (11)

வண்ணத் தமிழில் வகைவகையாய்ப் பாட்டெழுதிப்
பண்ணார் தமிழ்வளர்த்தார் பாவேந்தர்-எண்ணிப்பார்
தேனொழுகும் தெம்மாங்கு பாட்டெல்லாம்; செந்தமிழ்
வானுலகில் வாழ்ந்தா ரவர். (12)

தேவன் வழிபாட்டில் தேன்தமிழ் தானில்லை
நாவலவீர்! நாணுடையீர்! நன்குணர்வீர்! பாவேந்தர்
கண்ணீரால் பாடினார் கண்விழிப்பீர்! தாம்பிறந்த
மண்ணில் புகழ்சேர்த்தார் மாண்பு. (13)

செந்நெற் கனியும் பசுநெய் கிழங்கெல்லாம்
தொந்தி நிரப்பி வளர்ககுமே—எந்நாளும்
மூச்செல்லாம் முத்தமிழே யென்றாரே; வேந்தர்பா
வீச்சாலே வென்றார் பகை. (14)

வெல்லத் தமிழுண்டு வீர மதற்குண்டு
நல்லின்பம் நல்கும் வளமுண்டு—பல்கலையும்
ஆக்குவீர் நற்றமிழி லென்றபா வேந்தர்போல்
ஊக்குவித்தா ருண்டோ பிறர். (15)





செந்தமிழே! என்னுயிரே! செம்மையாய்—
வாழ்க்கையைச்
சந்ததம் செய்கின்ற தாயானாய்—உன்றனது
வாழ்வெல்லாம் நைந்திடுமே லென்வாழ்வும்
நையுமென்றார்
தாழ்வறியாப் பாவேந்தர் தான். (16)

தஞ்சமென வந்தார் தமிழ்வளர விட்டாரா?
விஞ்சு சுவைதமிழில் மிக்குண்டு—கொஞ்சுமொழி
வஞ்சி, தமிழணங்கே வாழ்வின் துணையென்றார்
துஞ்சிலவே பாவேந்தர் தொண்டு. (17)

பொருளில்லாத பாட்டுக்குக் கைத்தாளம் வேறா
இருட்டினில் சித்திரம் பாரார்—பொருள்தெரிய
வற்புறுத்திச் சொன்னார் தமிழருமை பாவேந்தர்
கற்கண்டு சொற்கண்டு கொள். (18)

தமிழே உணவென்று மின்ப முயிரென்றும்
தமிழே மணமென்றும் சொன்னார்—தமிழ்மொழியே
எங்களின் சொத்தாகு மென்றாரே? பாவேந்தர்
மங்காத் தமிழை மதி. (19)

வான்வெண் நிலவும்போல் கூரியவாள் வீரனும்போல்
மீன்யா ழிசையும்போல் வாழ்ந்தாரே—தேன்சுவை
கன்னல்நேர் பாட்டெழுதிப் பொன்றாப் புகழ்பெற்றார்
மின்னல் கவிபாடும் வேந்து. (20)

செந்தமிழைக் காதலித்தார். செய்யுளாய்த் தீட்டினார்
பைந்தமிழிற் றோய்ந்தார்; பகுத்தறிவை-இந்நாட்டில்
பட்டிதொட்டி யெல்லாம் தமிழால் பரப்பினார்
நட்புக்கோ பாவேந்தர் நாடு (21)

தாய்மொழியைக் காட்டிக்கொடுத்துவிட் டாட்சிசெயப்
பேயா யலைவாரைப் பேணாதீர்—ஆயும்
கனகசுப்பு ரத்தினத்தின் கண்போன்ற பாக்கள்
மனந்திருந்தி வாழ மருந்து (22)

உண்பது மொண்டமிழே வுள்ளமெல்லாம் பைந்தமிழே
பண்பனைத்தும் தாசனுக்குப் பால்தமிழே —
பெண்ணின்
அடிமைகள் தீருமட்டும் ஆகாதே யேற்றம்
இடித்துரைத்தா ரின்றுணர்ந்தோம் நாம். (23)

அண்டை மொழிக ளனைத்திற்கும் தாய்மொழியாம்
பண்டைத் தமிழ்மொழிதா னென்றாரே!—உண்மை
புவிப்புலவர் போற்றும் தமிழ்ப்புலமை சான்ற
கவிதைக்கோ பாவேந்தர் காண். (24)

தோற்றமோ? பொன்மலை, சொற்பெருக்கோ? குற்றாலம்
ஆற்றலோ? வேங்கை யறிவீரே—போற்றுவீர்
பாவேந்தர் தம்முணர்வை பாரறியச் செய்திடுவீர்
நாவேந்த ரென்றுரைப்பீர் நன்று, (25)



## பொருள் விளக்கம்

முதல்வெண்பா முதல்சொல்—தமிழ்
இறுதிவெண்பா இறுதிசொல்—நன்று
தமிழ்நன்று (நயம்)

பாட்டெண்

3. மயல்காட்டும் — ஆசை தரும்
துணிவாய் — வீரம் முழங்கும்வாய்
பன்மொழி — தமிழ், ஆங்கிலம், பிரெஞ்சு

21. நாடு — பிறந்தநாடு
நட்புசெயவிரும்பு
இரட்டுறமொழிதல்

5. அமிழ்தப்பா வேந்தரின்பா
1. அதுழ்து+அ+பா+வேந்தரின்+பா
2. அமிழ்தப்பா+வேந்தரின்+பா

6. தந்தபா எந்தப்பா நேர்
1. எந்த+பா+நேர்
2. எந்த+அப்பா+நேர்

18. கற்கண்டு சொற்கண்டு கொள்
1. கல்+கண்டு+சொற்+கண்டு+கொள்
2. கற்கண்டு+சொல்+கண்டுகொள்

21. நட்புக்கோ பாவேந்தர் நாடு
1. நட்பு+கோ+பாவேந்தர்
2. நட்புக்கோ+பா+வேந்தர்

24. கவிதைக்கோ பாவேந்தர் காண்
1. கவிதை+கோ+பாவேந்தர்
2. கவிதைக்கோ+பாவேந்தர்
3. கவி+தைக்க+ஓ+பாவேந்தர்

புலவர்—இரா. சுப்பிரமணியன்
காஞ்சி-606702
திருவண்ணாமலை சம்புவராயர் மாவட்டம்.

க.—2

## பெற்ற விருதுகள்

வாரியார் சுவாமிகள் பெற்ற விருதுகள் அவரை அடைந்தமையால் தாமே பெருமை பெற்றன. சிவானந்த சுவாமிகள் வழங்கிய 'திருப்புகழ்ச் சோதி', 'பிரவசன சாம்ராட்' பட்டங்களும், மதுரை திருஞான சம்பந்தர் மடத்து மகாசந்நிதானம் வழங்கிய 'அருள் மொழியரசு' எனும் பட்டமும், தற்போதுசதா பிஷேகம்காணும் காஞ்சிப்பெரியவாள்வழங்கிய 'சரஸ்வதி கடாக்ஷாம்ருதம்' எனும் பட்டமும் குறிப்பிடத்தக்கவை. இவை தவிர, அகோபில மடம் ஜீயர் சுவாமிகள் வழங்கிய 'ஷட்ப தானந்தர்', 'இசைப்பேரறிஞர்', 'கலை மாமணி', 'அமுத மொழிக்கொண்டல்', 'திருப்பணிச் சக்கரவர்த்தி,' 'திருப்பணிச் சரபம்', 'சொற்பொழிவு வள்ளல்' முதலிய விருதுகள் சுவாமிகளை அடைந்து பெருமை பெற்றன.

## தம்மைப் பற்றித் தாம் :

நம் சுவாமிகள் தம்மைப் பற்றித் தாமே கூறும் அடக்கமான நற்சான்று இது :

''காந்தியடிகளின் சத்திய சோதனையை ஆழ்ந்து படித்து அதன்படி ஒழுக எண்ணுபவன் நான். ஒவ்வோர் உயிரும் துன்பம் இன்றி வாழ நான் எண்ணுகிறேன். வினைகளால் பிறவிகள் எய்துகின்றன. எனவே மனதறியப் பாவம் செய்யக் கூடாது என்ற எண்ணம் எனக்குண்டு. அறிவு தோன்றிய நாள் முதலாக முருகவேளை உபாசித்து வருகிறேன்; எனினும் வேறு மூர்த்திகளிடம் வெறுப்பு இல்லாதவன். அஜீர்ணம் என்றால் என்ன வென்று தெரியாத நான் சொற்பொழிவு செய்யாத நாள்களே இல்லை மழை முதலிய தடைகளால் தவிர. எனக்கென்று பொருள் சேர்த்து வைத்துக் கொள்ளாத தால் மனம் ஆறுதலாக உள்ளது. யாரிடமும் நான் கடிந்து பேசுவதில்லை. கந்தர் சஷ்டி ஆறுநாள், மாத சஷ்டிகள், மகா சிவராத்திரி, கார்த்திகை, சோமவாரம், அருணகிரி நாதர் ஆராதனை இந்த ஆறும் அடியேன் உபவாசம் இருந்து வழிபடும் விரதங்களாகும்.''

இவ்வாறு கூறும் நம் சுவாமிகள், நம்மிடம் வேண்டும் வேண்டுகோள் இது : ''ஒவ்வொரு மனிதனும், 'நம் உள்ளத்தில் இறைவன் உறைகின்றான் என்றெண்ணி அவனருள் அறியத் தீவினை புரியாது, நல்வினைகளையும் பயன் கருதாமல் புரிந்து பிறவித் துயர் அகற்ற வேண்டும்.''

இதனாலன்றோ அவர் எத்தனையோ இல்லங்களில் பூஜை அறையில் வைத்து வழிபடப் படுகின்றார்?

## முடிவுரை

வாரியார் சுவாமிகள் வயலூர் முருகனை வழிபடுபவர்; அருணகிரி நாதரைக் கனவிற் காணும் பேறு பெற்றவர்; புலமைச் செல்வம் நிரம்பப் பெற்ற புண்ணிய சீலர்; ஒழுக்க நெறிகளை உலகுக்கெல்லாம் பரப்பி வரும் ஒழுக்க சீலர்: அருளாளர்; ஆசாரிய புருஷர்; வைதாரையும் வாழவைக்கும் மாமனிதர்.

நம்மால் அறுபத்து மூன்று நாயன்மார்களின் வரலாறுகளைப் படிக்கத்தான் முடிகிறது; அவர்களோடு வாழ நாம் கொடுத்து வைக்க வில்லை. ஆனால் நம் சுவாமிகளோடு நாம் வாழக் கொடுத்து வைத்திருக்கின்றோம்.

வையத்துள் வாழ்வாங்கு தாம் வாழ்ந்து, வானுறையும் தெய்வமாய் நம்மை ஆக்க, நம்மிடையே அவதரித்துள்ள நம் சுவாமிகள் காஞ்சிப் பெரியவரைப் போலச் சதாபிஷேகம் கண்டு, அதற்கு மேலும் பல்லாண்டுகள் வாழ வயலூர் எம்பெருமானாகிய முருகப் பெருமானின் வற்றாத பெருங்கருணையை இறைஞ்சி வழிபடுவோமாக!

# செங்குந்த மகளிர் அணி - ஏன்?

மீனாட்சி தென்னவன்
செயலர், தில்லையாடி வள்ளியம்மை மகளிர் மன்றம்,
செம்பொன்னார் கோவில்

### முன்னுரை

மொழியையும் நாட்டையும் தாயாகப் போற்றுகின்ற நாடு நமது நாடு. ஆம்; மகளிர் குலத்திற்கு நம்நாடு அளிக்கின்ற மரியாதையே ஒரு தனிச்சிறப்புடையது அன்றோ! உலகில் சரி பாதி பெண்ணினம். இந்தப் பெண்ணினத் திற்கு அனைத்திலும் சம வாய்ப்பு அளிப்பதே நேர்மையும் நீதியுமாகும். அதனால்தான் நம்மகாகவி பாரதியாரும்,

"ஆண்களோடு பெண்களும்
சரிநிகர் சமான மாக
வாழ்வம் இந்த நாட்டிலே"

என்று புரட்சிக் குரல் கொடுத்தார். சமயத் துறையில் எல்லாம் வல்ல பரமசிவனும் தன் இடப் பாகத்தை உமையம்மையார்க்கு அளித்த 'அர்த்தநாரீசுவரர்' தத்துவமும் இதனை வலியுறுத்தக் காணலாம்,

### மகளிர் குலம்

இத்தகைய மகளிர் குலம் சங்க காலத்தில் மிகச்சிறப்போடு வாழ்ந்ததாக இலக்கியங்கள் பகர்கின்றன. இடைக்காலத்தில் அது தாழ்த் தப்பட்டு அடிமைப் படுத்தப்பட்டுக் கிடந்த தாக வரலாறு நமக்கு அறிவுறுத்துகிறது. அண்மைக் காலத்தில் தான், மீண்டும் அது அடிமைத்தளையை உடைத்தெறிந்து விட்டுச் சுதந்திரமாகத் தலையெடுக்கத் தொடங்கி யுள்ளது எனலாம்.

### இன்றைய நிலை

இன்றைய நிலையில் — உலகில் எந்த ஓர் அமைப்பானாலும் அல்லது கட்சியானாலும் இளைஞர் அணி என்றும், மகளிர் அணி என்றும் இரு பிரிவுகளைக் கொண்டு அது இயங்கி வரு வதைப் பார்க்கிறோம்.

பெரியோர்கள் சிறந்த ஆலோசனைகளை வழங்கலாம்; அரிய அறவுரைகளைச் சொல்ல லாம்; நல்லபல திட்டங்களை அறிவிக்கலாம். இவற்றை நடைமுறையில் செயற்படுத்துவது என்பது துடிப்புள்ள இளைஞர்களாலேயே இயலும்! அதனால்தான் இன்று எல்லா அமைப்புகளிலேயும் 'இளைஞர் அணி' என்பது சிறப்புற்றுத் திகழ்கிறது.

அது போலத்தான் இன்று 'மகளிர் அணி' என்பதும் அனைத்து வகையிலும், ஒவ்வொரு அமைப்பும் திறம்படச் செயல்படத் துணை அமைப்பாக இருந்து உதவி செய்கிறது எனலாம்.

### நமது அமைப்பில் மகளிர் அணி

நமது சங்க அமைப்பிலும்—மேம்பட்ட மாநிலச் சங்கம் முதல், கீழ் மட்ட கிளைச் சங்கம் வரை மகளிர் அணி எனும் ஒரு துணை அமைப்பினை நிறுவுதல் மிகமிக அவசியமாகும். இவ்வணி எல்லா மட்டத்திலும் அதன் தாய் அமைப்பின் விதிமுறைகளுக்குக் கட்டுப்பட்டுச் சுதந்திரமாக இயங்க வழிவகை காண வேண்டும். தாய் அமைப்பு இடும் கட்டளை களைச் செயற்படுத்தவும் அதற்குத் துணை யாக இருந்து ஆக்க வழியில் உழைக்கவும் 'மகளிர் அணி' முன்வர வேண்டும். இவ்வாறு அமைகின்ற மகளிர் அணியே மற்றவர்களால் போற்றப்பெறும். மாறாகத் தாய் அமைப்பு டன் முரண்பட்டுச் செயற்படுகிற மகளிர் அணி சிறப்புற இயலாது.

### மகளிர் அணியின் கடமைகள்

மகளிர் அணி என்ன செய்யலாம்? இவ்வணி மாதம் ஒரு முறையோ மூன்று மாதங்கட்கு ஒரு முறையோ கூடிச் சமுதாய முன்னேற்றத்திற்கான ஆக்கக் கருத்

துக்களைப் பரிமாறிக் கொள்ளலாம்; குடும்பப் பிரச்சினைகளைக் கூட அனுபவம் நிறைந்த உறுப்பினர்களின் முன் கொண்டு வந்து நல்ல தீர்வு காணலாம்; தத்தம் மக்களின் கல்வி வளர்ச்சிக்கு ஊக்கம் கொடுக்கலாம். படித்த பெண்கள், படிக்கின்ற மாணவியர்க்குத் தனிப் பயிற்சி கொடுத்துத் தேர்வில் நிறைந்த மதிப் பெண்கள் பெற ஊக்குவிக்கலாம். அரசுத் துறையிலும் பணியாற்றும் பெண்கள், படித்த வேலையில்லாப் பெண்களுக்கு வேலை பெற வழி காட்டலாம்.

### சில பயிற்சிகள்

ஊராட்சி ஒன்றியங்களும், பிற சமூக அமைப்புகளும் ஆங்காங்கே பெண்மக்கள் சுய வேலைவாய்ப்புகளைப் பெறவென - தையற் தொழில், பூப்பின்னல், கூடைமுடைதல், பொம்மைகள் செய்தல்—போன்ற பயிற்சி களை அளித்து வருகின்றன. இவற்றை மகளிர் அணிகள் முயன்று தத்தம் பகுதியில் உள்ள பெண்கள் இப்பயிற்சிளைப் பெற வாய்ப்புகளை ஏற்படுத்திக் கொடுக்கலாம். தாமே கூட முயற்சி செய்து இவற்றில் சிறந்த தொழில் வல்லுநர்களை அழைத்துத் தம் உறுப்பினர்களுக்குப் பயிற்சியளிக்கச் செய்ய லாம்.

### நாட்டு நடப்புகளை அறியச்செய்தல்

இன்றைய சூழ்நிலையில் பெண்கள் பலர் தத்தம் வீட்டுக் கடமைகளைச் செய்தாலே போதும் என்று கருதுகிறார்கள். இவர்கள் வெளியுலகத்தை அறியாத கிணற்றுத் தவளை களாகவே இருக்க விரும்புகின்றவர் ஆவர். மாறிவரும் காலச் சூழ்நிலையில் இன்றைய மகளிர் அன்றாட உலகில் நடைபெறும் நிகழ்ச்சி களையும், அரசியல் நிலைமைகளையும், புதிய புதிய வாழ்வியல் கருத்துக்களையும், அறிவியல் கண்டுபிடிப்புகளையும் அவசியம் அறிந்து கொள்ளுதல் வேண்டும்.

மகளிர் அணி கூடுகின்ற போதெல்லாம், இவற்றைப் பற்றித் தெளிவாக, படித்த பெண்களை விட்டு மற்றவர்கட்குக் கூறச் செய்தல் வேண்டும். முடிந்தால் நல்லதரமான நாளேடு கிழமை ஏடுகளையும், நூல்களையும் கொண்ட படிப்பகம் ஒன்றை மகளிர் அணி நிறுவி நடத்துதலும் சிறந்த பலன்களை அளிக்கும்.

### இரு சவால்கள்

இன்றைக்கு மக்கட்தொகைப் பெருக்கம் என்பது உலகையே ஆட்டிப்படைக்கும் பெருஞ் சவாலாக இருக்கிறது. மக்கட் தொகைப் பெருக்கத்தை விரைவில் கட்டுப் படுத்த விட்டால் விளையும் பெருங்கேடுகளை எண்ண உலக அறிஞர்களும் தலைவர்களும் கவலை கொண்டிருக்கிறார்கள். அரசும் "மக்கட் தொகைக்கல்வி" என்னும் புதிய பாட திட்டத்தை அறிமுகப்படுத்தியுள்ளது. இதனை நம் மகளிர் உணர்ந்து 'குடும்பக்கட்டுப்பா பற்றிய புதிய செய்திகளை, சிறந்த பெண் மருத்துவர்களை மகளிர் அணி கூட்டத்திற்கு அழைத்துவந்து விளக்கம் அளிக்கச்செய்யலாம். குழந்தை வளர்ப்பு, குழந்தை மருத்துவம், மகப்பேறுகாலப் பாதுகாப்புப் பற்றியும் அவர் களிடம் விளக்கங்கள் பெறலாம்.

மற்றொரு சவால், திருமணமான இள பெண்களை அவதிக்குள்ளாக்கும் வரத சணைக்கொடுமைகளாகும். இன்று வீடுகளி உள்ள மின்சார அடுப்பும், வாயு அடுப்பு திருமணமான இளைய பெண்களின் மே தான் பாசத்தோடு தீ மழை பொழிகின்ற அவர்களைத்தான் தூக்குக் கயிறுகள் கட் யணைக்கின்றன; ஆறுகளும் குளங்களும் அ வணைக்கின்றன; கொடிய நச்சு மருந்துக சோதிக்கின்றன! இந்த வரதட்சணை கொடுமைகளுக்கு ஆண்கள் மட்டுமே கார மல்ல; பெண்களே பெரிதும் காரண என்பதை மகளிர் கூடியுள்ள கூட்டத்தி மகளிரே விவாதிக்கும் பொழுதுதான் 'அர உள்ளம் படைத்த மாமியார்கள் திரு வாய்ப்புகள் உள்ளன.

### பொது நிகழ்ச்சிகள்

ஊரில் நடைபெறும் கோயில் திருவிழ களின் போது மகளிர் அணியினர் முன்னின் பெண்களை முறையாக அமரச் செ அமைதி காக்கலாம்; உறவினர் வீட் திருமணங்களின் போது பெண்களை வரவே கும் பணியில் ஈடுபட்டுத் தொண்டுகள் செ லாம். நமது சங்கக் கூட்டங்கள், மாநாடுக பேரணிகள் போன்றவை நடைபெறும்போ ஒழுங்கு முறைகளையும் கட்டுப்பாடுகளை பெண்மக்கள் கடைப்பிடித்து ஒழுக வ காட்டலாம்.

வாய்ப்புள்ள மகளிர், மாநாடுகளிலு பேரணிகளிலும் கலந்து கொள்ள, அவர்கள மகளிர் அணியினர் ஊக்கப்படுத்தி அழைத் வரலாம்.

தொண்டுள்ளம் கொண்ட மகளி மாநாடுகள் நடைபெறும் பந்தல்களில், பெ களுக்கான பகுதியில் இருந்து அவர்கள வரிசையாக அமரச்செய்தல், குடிநீர் வழ தல், வழிகாட்டுதல் போன்ற பணிக ஈடுபடலாம்.

### திறமைகளை வளர்த்தல்

மகளிர் அணி கூட்டத்தை நடத்தத் தனிக் கட்டடம்தான் தேவை என்பது இல்லை; பரந்த-பெரிய-விசாலமான—ஓர் உறுப்பினர் இல்லத்திலேயே அதனை நடத்தலாம். படிக்கின்ற மாணவியரைக் கொண்டு கலைநிகழ்ச்சிகள் நடத்தச்செய்து மகிழலாம்; இதன்மூலம் அவர்களின் திறமைகளை வளர்க்கலாம்.

புதிய சமையல் குறிப்புகளையும், இனிப்பு காரவகைகள் செய்வது குறித்தும் மகளிர் தங்களுக்குள் கருத்து பரிமாறிக் கொள்ளலாம். இவற்றில் போட்டிகளும் நடத்தித் திறமைச்குத் தக்க பரிசுகள் வழங்கிச் சிறப்பிக்கலாம்.

பேச்சாற்றல் உள்ள இளம்பெண்களை ஊக்கப்படுத்திப் பேச்சுப்பயிற்சி அளிக்கலாம். அவர்களை மகளிர் மாநாடுகளில் பேசச்செய்து மகிழ்ச்சியடையலாம்; பயன் பெறலாம். ஆண்டு விழாவின் போது நமது தாய்ச்சங்கத் தலைவர்களை அழைத்துத் தம் அணியின் செயல்பாடுகளை விளக்கிக்கூறிப் பாராட்டுகளைப் பெறலாம்.

### மகளிர் மாநாடு

இவ்வாறு நம் மகளிர் அணி நம் சமுதாய மேன்மைக்கு எனப் பல்லாற்றானும் தொண்டு புரிய வாய்ப்புண்டு; அதனால் நம் செங்குந்த மகளிர் குலம் சிறந்தோங்க வழியுண்டு.

கடந்த 1991-ஆம் ஆண்டு 16ஆவது மாநில செங்குந்தர் மாநாடு கும்பகோணத்தில் நடைபெற்ற போது நடந்த 'மகளிர் மாநாடு' நிகழ்ச்சிகளைக் கண்ணுற்ற நமது மாநிலத் தலைவர் இளைய தலைமுறையின் எழுச்சிமிகு வேந்தர் நெசவாளர் நேசன் சுத்தானந்தர் அவர்கள் மாநாட்டின் வெற்றியினைப் பல படியாகப் பாராட்டிப் பேசினார்கள் தொடர்ந்து இது போல மகளிர் மாநாடுகள் நடத்த உள்ளதாகவும் தெரிவித்தார்கள். இம் மகளிர் மாநாட்டில் முற்றிலும் மகளிரே கலந்து கொண்டு, வரவேற்புரை முதல் நன்றியுரைவரை நிகழ்த்திய நிகழ்ச்சிகள் யாவும் அனைவர் உள்ளங்களையும் ஈர்த்தன; மகிழ்வித்தன என்றால் அவை மிகையல்ல; உண்மைகளேயாம்!

இப்படிப்பட்ட 'மகளிர் மாநாடுகள்' சிறப்புற வேண்டுமென்றால் நம் செங்குந்த குல மகளிர்க்குள் சிறந்த தலைவர்கள் பேச்சாளர்கள் கருத்துரையாளர்கள் தொண்டர்கள் உருவாக வேண்டும். அதற்கு நம் செங்குந்த மகளிர் அணி சிறந்தபயிற்சிக் கூடமாக அமைய வேண்டும்.

எனவே, எங்கெல்லாம் செங்குந்தர்கள் வசிக்கின்றார்களோ அங்கெல்லாம்—ஊர் தோறும் செங்குந்த மகளிர் அணியை உருவாக்குவோம்! உணர்வுபூர்வமாக அதனைச் செயற்படுத்துவோம்; பயன் பெறுவோம்.

இம் மகத்தான முயற்சிக்குத் தாய்ச் சங்கத் தலைவர்களும், பொறுப்பாளர்களும் உறுதுணையாக இருந்து ஊக்கம் அளிப்பார்களாக!

---

சோணாட்டு முதலியெனச் சொலவந்த
செங்குந்தத் தொகுதி வாழி
நாணாளு மலர்செய்த நற்றரும
மித்தரைமே னன்கு வாழி
காணாத காட்சியெலாங் காட்டியருள்
கந்தப்பன் கருணை வாழி
மாணாரும் வடிவேலு மயிலுமிரு
மாதர்களும் வாழி வாழி.

—செங்குந்த குல மாட்சி

# கவிச்சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தர்

—துரை. சௌந்தரராசன்
காஞ்சிபுரம்.

தில்லையம்பலத் திருக்கூத்தன் திருப்பெயரைத் தன்னில் தாங்கி.

அல்லல்பட்ட மக்களின் அறியாமை நீக்கிடவே
கல்விக்கரசி கலைமகளைத் தன்னுள் கொண்டு
நல்லுலகின் மலரியில் அவதரித்தார் கூத்தபிரான்!

வளமைநிறை நுண்ணறிவால் கவிநலம் உலகில்தழைக்க
இளமையில் ஐயம்திரிபற இருமொழியும் கற்றுணர்ந்து,
களமெனக் கொண்டு மாந்தர்தம் நெஞ்சங்களை
வளம்பெறப் பல்வேறு பாமாலைகளை தொடுத்திட்டாரே!

திறமைகள் இவரிடம் கண்டதால் பல்கலைகளும்
உறவெனக் கொண்டிவரைத் தஞ்சமென அடைந்தன!
கறவையின் மடிகொள் பாலுறிஞ்சும் கன்றுபோல்,
இறவாத ஞானங்களை உலகமும் பெற்றதே!

திருவைந்தை எஞ்ஞான்றும் தன்னுள் மொழிந்தநல்
உருவமாய் உலகினில் உலவிநிலைத்த தமிழ்க்கடலிவரே!
கருவகமாய் இவரைக் கொண்டதே நாற்கவிகளும்
பருப்பொருளாம் பார்புகழ நன்மகனாய்த் திகழ்ந்தாரே!

தவம்புரிந்து நற்றமிழும் இவரில்வாழ முனைந்ததன்றி,
சிவப்பழப் பொலிவும் இவரிலுலகம் கண்டதே!
புவியரசு சோழர்களின் ஆட்சிகளில் நற்பொருளுடைக்
கவியரசில் சக்கரவர்த்தி யாய்விளங் கியவரிவரே!

சுயநலம் என்பதே உலகினர் பொது வுடமை,
கயமைகுண மன்றியிவர் உலகநலம் இழையோட,
பயனிறை பற்பலஉதவி பிறர்க்கு ஈந்துமகிழ்ந்தார்.
நயமுடை நல்லவர் எவருமில்லை இவர்நாளில்!

வாழ்ந்துவிட்டு ஓய்ந்திடும் சோழநாட்டு மன்னர்களை
தாழ்ந்திடாமல் தூக்கிநிறுத்தி தகைமையுடை நூலில்விண்டு
வீழ்ந்துவிடாச் சரித்திரமாக நிலைக்க வைத்தவரிவரே!
ஆழ்ந்துணரச் சாற்றுவது உலாவும்பரணியும் பிள்ளைத் தமிழுமே!

யாதும்ஊரே யாவரும்கேளிர் என்றமொழி கொள்கையுடன்
தீதற்றநிலை கொண்டு சிறப்புடன் வாழ்க்கையில்
ஓதும்முதல் ஐங்தெழுத்தை சமயத்துள் வாழவைக்கும்
குதற்றநற் செங்குந்தர் குலநூலாக்க வேண்டினர்!

விலையாகத் தரவேண்டும் தமிழின்பாற் கொண்டன்பிற்குத்
தலைகளையே என்றுரைத்த கூத்தபிரான் சொல்நிற்கு முன்,
தலையாகும் வீரம்எமது எனத்தயங் காதுகாட்ட,
நிலையான உயர்தலைகளை யறுத்தீந்தனர் குலத்திற்கே!

தன்னிலும் புனிதர்களே தானுதித்த குலமாந்தரென
உன்னியுணர் நற்கூத்தரும் காட்டிநின்றார் ஈட்டிஎழுபதிலே!
நன்னியசெயல் நானிலம்உள நாள்மட்டும் குலத்திற்கே!
அன்னையாம் கலைமகளிடம் வேண்டிதலைகளை
ஒட்டவைத்தார்!

ஒட்டிய தலைகளால் ஒட்டக் கூத்தரானார்!
கட்டியம் இச்செயலே கலைமகளின் மைந்தரெனஉணர!
வெட்டும் இவர்சொல் தமிழ்மறைப் பண்பாலே!
கட்டும் உயர்நிலை இவரது அன்பாலே!

அடுக்கடுக்கான பலநூற்களை உலகினுக்கு ஈந்திடினும்,
தடுக்கஇயலா நல்லுரைகளைக் கவிதைகளில் வாழவைத்தார்
தொடுத்த சொற்களுள் இனிமையும் வன்மையும்
அடுத்தது காட்டிநிற்கும் பிறரெவர் ஊழிற்கும்!

பல்வேறு பட்டங்களும் பரிசில்களும் கொண்டதுண்டு!
வில்லேர் உழவர்களும் இவர்சொல்லால் தோற்பதுண்டு!
நல்லோர் பாராட்டிய நல்லறிஞர் இவரன்றோ!
பல்லோர் மாணவராகிட நற்பாடங்களும் புகட்டினாரே!

கல்வியே தன்னுயிர் மூச்செனக் கொண்டார்!
செல்வமோ இவரின்பல பொற்பதமுடை நூற்களே!
நல்லொழுக்கம் தமிழ்ப்புலமை அரசியல்ஞானம் இணைந்த
எல்லாமும் தான்சார்ந்த நாட்டிற்கே நல்கினார்!

பன்னிரண்டாம் நூற்றாண்டில் பார்புகழும் நன்மகனாய்த்
தோன்றிற் புகழொடு தோன்றியவர் இவரன்றோ!
குன்றாத நல்வளமுடன் உறந்தையில் அமரராகிட
நூறாண்டை அடையுமுன் இறைவனோடு இணைந்தாரே!

செங்குந்தர் குலத்தில் உதித்த தமிழ்உலகே!
இங்கெவரும் பிறக்கவில்லை நும்போல் நுண்ணறிவய்!
எங்கும்நிறை இறைவனோடு ஒன்றெனக் கலந்தவரே!
எங்களையும் வாழ்த்துங்கள்—உங்களை வணங்குவதால்!





# வேலும் வில்லும்



திருமதி அயிராணி ராமநாதன்,
எம். ஏ.,
சென்னை-15



வேலும் வில்லும் கம்ப இராமாயணத்திலும், கந்தபுராணத்திலும் முக்கியமான ஆயுத அம்சங்கள். ஒன்று புகழ் பெற்ற இதிகாசம்; மற்றது புகழ் பெற்ற புராணம். ஒன்றிலே வேல். மற்றொன்றிலே வில். இரண்டுமே மறத்தை நீக்கி அறத்தை நிலை பெறச் செய்யவும், இரண்டுமே வல்லரசை நீக்கி நல்லரசை உண்டாக்கவும், இரண்டுமே கதையம்சத்தில் ஒன்று போலவும் செயல்பட்டுள்ளன. இரண்டுமே பிறவிப்பிணியைத் தீர்க்கத்தான் இயங்கி இருக்கின்றன. ஆனால் ஒரு சின்ன வித்தியாசம் கந்தன் இறை அம்சமாகவே செயல்பட்டிருக்கிறான். இராமன் இறை அவதாரமாகச் செயல்பட்டிருக்கிறான்.

மனிதனிடத்தில் ஒன்பது நல்ல குணங்கள் இருந்து ஒரு குறை மட்டும் இருந்தால் குணங்கள் நீக்கி ஒரு குறையை மட்டும் பார்ப்பது மனித இயல்பு. மனிதனிடத்தில் ஒன்பது குறைகள் இருந்து ஒரு நல்ல குணமிருந்தால் குற்றத்தை நீக்கி குணத்தை மட்டும் பார்ப்பது இறை இயல்பு. எனவேதான் இறை தன்மையோடு கந்தன் சூரபத்மனை அழிக்காமல் வழிபடக்கூடிய பொருளாக மயில், சேவல் கொடி என ஏற்றுக் கொண்டான். இராமன் மனிதனாக இருந்ததால் தான் இராவணனை முற்றிலும் அழித்தான்.

இராவணன் பிறப்பு மூலத்தைச் சிந்தியுங்கள். சாபத்தின் காரணமாகத் தான் பூமியில் தோன்றினான். ஒன்பது பிறவிகள் எடுத்து என்னை வேண்டி என்னுடன் சேருகின்றாயா? அல்லது மூன்று பிறவிகள் எடுத்து என்னைத் தூற்றி எதிரியாக என்னுடன் சேருகிறாயா? என்று திருமால் கேட்டதற்கு, ''பிறவி கொடியது மூன்று பிறவிகள் போதும்'' என்ற வரத்தின்படி அரக்கனாக இராவணன் தோன்றினான். அந்த வகையில் பிறவி என்பது மிகவும் கொடியது. அதை நீக்கவே வேலும் வில்லும் செயல்பட்டன.. எனவே, நாம் அரியைக் கும்பிட்டாலும் அரனைக் கும்பிட்டாலும் பிறவியைப் போக்கிக் கொள்ள முடியும்.

நாம் முறையான வழிபாட்டின் மூலம் நம்மனதைத் தூய்மைப் படுத்திக் கொள்வதோடு, வினைகள் மேலும் இந்தப் பிறவியில் ஒட்டிக்கொள்ளாமல் பாதுகாக்கவேண்டும். எப்படி என்றால் ஒரு குடுவையில் காப்பர் சல்பேட் கரைசலை எடுத்துக் கொண்டு அதில் தொடர்ந்து தூய்மையான நீரை விட்டுக் கொண்டே வந்தால், சிறிது நேரத்துக்குள் காப்பர் சல்பேட் கரைசல் முழுவதும் வெளியேறி குடுவைக்குள் தூய்மையான நீர் நிரம்பி விடும். அதுபோல தொடர்ந்து

வழிபாடு செய்தால் கெட்ட எண்ணம் அகன்று மனம் தூய்மைப்படும்.

சென்ற பிறவியில் செய்த வினைகளைத் தான தர்மங்கள் தொண்டு மனப்பான்மை மூலமாகப் போக்கி கொள்ளலாம். பிறவித்துயரை முடிக்க வில். வேல் இராவணன் சூரபத்மன் இடத்தில் விளையாடியது போல் ஒவ்வொருவர் வாழ்க்கையிலும் நிகழ முடியாது. கந்தனும், இராமனும் கலியுகத்தில் மீண்டும் தோன்றி பிறவித் துயரைப் போக்க முடியாது. எனவே நாம் வழிபாடு, தர்மம், தொண்டு முதலியவற்றால் ஊழ்வினை தவிர்த்து பிறவிப்பயனைப் பெறமுயல வேண்டும்.

மூன்று அடுக்கு மாளிகை கட்டி அதன் மேலே தண்ணீர்த் தொட்டி அமைத்து மூன்று அடுக்கிலேயும் குழாயை ஒரே நேரத்தில் திறந்து விட்டால் தண்ணீர் வெகுவேகமாக கீழே உள்ள குழாயிலும், நடுமட்டதில் அதைவிடக் குறைவாகவும் வரும். அது போல் இறைவன் திருவருளாகிய தண்ணீர் கீழ்மட்டத் தொண்டராகிய குழாயில் வெகு வேகமாகவும் நடுமட்டத் தர்மம் ஆகிய குழாயில் அதைவிடக் குறைவாகவும் மேல்மட்ட வழிபாடாகிய குழாயில் அதைவிடக் குறைவாகவும் வரும்.

அதனால் தான் காட்டிலே பல காலம் தவம் செய்த யோகிகளுக்கு அருள் பாலிப்பதைவிட, ''என் கடன் பணி செய்து கிடப்பதே'' என்று மக்கட்பணியை மகேசன் பணியாகக் கொண்டுள்ள தொண்டர்களுக்கு ஆண்டவன் அருள்புரிய இருக்கும் இடம் தேடி வந்ததாக 63 நாயன்மார்கள் வாழ்க்கையில் படம் பிடித்துக் காட்டிருக்கிறார் சேக்கிழார்.

இன்றைக்குச் செங்கை எம்.ஜி.ஆர் மாவட்டத்தைச் சேர்ந்த நமது காஞ்சிபுரம செங்குந்த இளைஞர் அணியினர் பொறுப்புடன் உதவிக்கரம் நீட்டிச் சமுதாயத்துக்கு நல்ல தொண்டர்களாகச் சேவை புரிந்து பாராட்டு பெறுவதை நான் நேரிலேயே கண்டு மனம் மகிழ்ந்தேன் : இந்த விழிப்புணர்ச்சி தமிழக முழுவதும் பரவி ஆணென்ன பெண்ணென்ன இரு பாலாரும் சமுதாயம் நமக்கு என்ன செய்தோம் என்ற கேள்வி கேட்காமல் நாம் சமுதாயத்துக்கு என்ன செய் தோம் என்று கேட்டு நடந்தால், நமது செங்குந்த சமுதாயம் மேன்மை அடையும்.

வேலாயுதம் கொண்ட முருகப் பெருமானின் தம்பி வீரவாகுவின் வழித் தோன்றல்களாகிய நாம், தொண்டின் பெருமையை உணர்ந்து நடந்தால், நமது செங்குந்த சமுதாயம் நலம் பெறும், தமிழகம் வளம் பெறும். பாரதம் பலம் பெறும்.

வாழ்க அன்பு நெறி!

வளர்க தொண்டு நெறி!

---

கார்வாழி வாழி கலைமகள் வாழி கனகமயில்
கூர்வேலுஞ் சேவற் கொடிவாழிவாழி குகனிருதாள்
சீர்வாழி வாழி தெய்வயானை வள்ளி சிறந்தகச்சி
யூர்வாழி செங்குந்த வேலவர் வாழி யுலகெங்குமே

—திருக்கை வழக்கத்தந்தாதி

---



# குலப் பெயர்களும் தொழில் தொன்மையும்

புலவர் செ. சோமசுந்தரம் எம்.ஏ., பி.எட்.,
குடியேற்றம்



**முதலியார் :**

உலகம் அனைத்திற்கும் சிவன் முதல்வன். அம்முதல்வன் அருளால் முருகப் பெருமானுக்குத் துணையாய் அவதரித்த வீரவாகு முதலிய நவவீரர்கள் வழிவந்தவர்கள் ஆனதால் 'முதலிகள்' எனப்பட்டனர்.

'முதலி' என்று படைத் தலைவர்களை அழைப்பர். முருகனுக்குப் படைத்தலைமை பூண்ட காரணத்தாலும் முசுகுந்தச் சோழன் முதலிய மன்னர்களுக்கும் படைத் தலைமை பூண்ட காரணத்தாலும் 'ஆர்' என்ற சிறப்பு விகுதியும் சேர்ந்து. 'முதலியார் என்ற பெயர் நிலைத்து வந்தது.

அயலவர் படையெடுப்பு போன்ற காலங்களில் முதலில் பொறுப்பேற்று-முன்னின்று போர் புரிபவர் இம்முதலிகள் ஆவர்!

இதனை ஈட்டி எழுபது :

''இந்திரன் அயன்மால் தேவர் யாவர்க்கும்
முதன்மை யாக
வந்தபான் மையினால் சூல மழுப்படை
அத்தனார்க்கு
முந்திய நாமத் தானும் முதலியார் ஆகை
யால்செங்
குந்தர்சந் ததிக்கும் அப்பேர் முதலியர் என்று
கூறும்.''

என்று சிறப்பித்துப்பாடுகிறது.

**நிகண்டில் நாம் :**

சேந்தன் திவாகரரால் எழுதப்பட்ட திவாகர நிகண்டு :

''செங்குந்தப் படையர் சேனைத் தலைவர்
தந்து வாயர் காருகர் கைக்கோளர்''

ஆகிய ஐந்து பெயர்களும் நம்மவரைக் குறிக்கும் வேறு பெயர்கள் என்று விளக்கம் தருகிறது.

**செங்குந்தர் :**

குந்தம் என்று சொல்லப்படும் ஈட்டி நமக்கு இறைவியால் அருளப் பெற்றது. படைக் கருவிகளில் சிறந்தவற்றைச் 'செம்மை' என்ற பண்புச் சொல் சேர்த்துச் சொல்வது மரபு. வேலைச் செவ்வேல் என்பது போல குந்தத்தைச் ''செங்குந்தம்'' என்றனர். அப்படைக்கு உரியவர் ''செங்குந்தர்'' எனப்பட்டனர்!

குந்தம் என்பது குறிதவறாமல் எறியப்படுவது. குழுவாக யானைகளின் மேலிருந்து போர் புரிந்து பகைவர்கள் மீது குறிதவறாமல் எறிந்து எதிரிகளை வீழ்த்துவர். இவர்களை அத்திகோசத்தர் என்றும் அழைப்பர்.

(அத்தி = யானை; கோசம் = குழு)

இப்படையினர் மனஒருமைப்பாடும் நல்லொழுக்கமும் வீரமும் கொண்டு விளங்கினர்.

**கைக்கோளர் :**

நம் குலப் பெயர்களுள் ''கைக்கோளர்'' என்பதும் ஒன்று. மிகச் சிறந்த உண்மைகளை உணர்த்தும் இச்சொல் இன்று மருவி அப்பெயரின் உண்மைகளை உணர முடியாது மறைத்து விட்டது.

''கைக்கோள்''—என்றால் ஒழுக்கம் என்பது பொருள். ஆகவே புறவொழுக்கமும் அகவொழுக்கமும் உடையவர் கைகோளர் ஆவா.

படைத்தலைவர்கள் வீரமும் ஈரமும் உடைவர்களாய் இருந்தால் மட்டும் போதா! அவர்கள் நல்லொழுக்கமுடையவர்களாகவும் அரசின் நம்பிக்கைக்கு உரியவர்களாயும் இருத்தல் வேண்டும்.

கைக்கோளச் செங்குந்தர் அரசனது படைத்தலைவராய் மட்டு மில்லாது அவரின் நம்பிக்கைக்குரிய "அகப்பரிவாரமாக"வும் விளங்கினர். அக்கால அரசர்கள் "இத்தனை நூறு கைக்கோளர்களை அகப்பரிவாரமாக நான் கொண்டுள்ளேன்" என்று பெருமையோடு பேசும் அரச வாக்கி யங்கள் காலத்தாலும் அழியாத கல் வெட்டுகளில் இன்றும் காணலாம்!

எனவே, மூவேந்தர்களின் முழுமை யான நம்பிக்கைக்குரிய படைத்தலை வர்களாக இருந்து, அவர்களால் அன்புடன் கைக்கொள்ளப் பட்டமை யின் (படைத்தலைவராக) 'கைகோளர்' என்று பெயர் பெற்றனர் என்பதும் எண்ணத்தக்கது. கல்வெட்டுக்கள் பல வற்றில் "தெரிஞ்ச கைக்கோளர்" என்ற தொடரைக் காணலாம்.

போரில் பகைவரை வென்று சிறை செய்து திறை முதலிய பல்பொருள் களைக் "கைக் கொள்வதில்" சிறந்து விளங்கியதாலும்; தமக்குத் தாமே துணை என்பது போல தமது கை யுழைப்பைக் கொண்டே வாழ்வு கண்ட தாலும், குந்தப் படையைக் கைக் கொண்டவர்கள் என்பதாலும் "கைக் கோளர்" என்ற பெயர் வழங்கியது எனினும் தவறுகள் ஏதும் இல்லை!

**நிகரற்ற நெய்தல் தொழில் :**

குந்தம் ஏந்திய காலத்திலும் பிற காலங்களிலும் கைக்கோளர்களாகிய செங்குந்த முதலியார்கள் செய்யுந் தொழிலில் நிகரற்று விளங்கும் நெய்யுந் தொழிலை மேற் கொண்ட னர். உயிரைக் காக்கும் உணவினும் மானத்தைக் காக்கும் உடையே உயர்ந்தது, என்ற உன்னத பண் பாட்டின் அடிப்படையில் இத் தொழிலை ஒவ்வொரு குடும்பமும் குலத்தொழிலாய்க் கொண்டது.

காவிரி புகும் பட்டினத்தில் நம்ம வர் நெசவுத் தொழிலை மேற்கொண்டு இருந்தனர் என்றும், அவர்கள் அரச னால் ஆதரிக்கப்பட்டதோடு காருகர் என்று அழைக்கப்பட்டனர் என்றும் விரிவாக சிலப்பதிகாரம் விளக்கு கிறது. சில பகுதிகளில் நெய்தல் தொழிலை மேற்கொண்டவர்கள், தந்து வாயர் என்றும் அழைக்கப்பட்டனர்

போர்க் குணமாகிய ரஜோ குணத் தில் சிறந்து விளங்கியவர்கள், இறுதி யில் இறைவனடி விரும்பும் சத்துவ குணச் சான்றோர்களாயும் விளங்கி னர்! அதனால்தான் எவ்வுயிர்க்கும் தீங்கு தராத மன ஒருமைப்பாட்டையும் வாய்மை நெறியையும் தெய்வ சிந்த னையும் தாமாக வளர்க்கும் நெய்தல் தொழிலை மேற்கொண்டு புண்ணியம் பெற்றனர் திருவள்ளுவரும் காந்தி யடிகளும் இத்தொழிலை விரும்பி மேற் கொள்ளக் காரணம் இவைகளே!

ஆகாய நாதனாகிய தில்லைத்திருக் கூத்தாண்டவனுக்குத் திருக்கொடி யானது கைக்கோளராலேயே செய்து தரவேண்டும் என்பது வழிவழியாய் வருகின்ற மரபு என்றால் இவர் மகிமையை எதனாலும் எவராலும் விளக்க முடியாது!

**ஒழுக்கமும் ஒற்றுமையும் :**

போர்பற்றி வரும் புறத்திணை களுள் வஞ்சினக் காஞ்சி என்று ஒரு துறையுண்டு. போரில் பகைவரை வெல்லாவிடில் நான் இன்ன நிலையை அடைவேன் என்று முன்னமே வீர சபதம் மேற்கொண்டு, தன் வல்லமை காட்டுவது அத்துறையாகும்.

நமது குலவீரர்கள் குழுவாகச் சேர்ந்து சபதம் செய்து, குழுவாகச் சேர்ந்து வாய்மை காத்து, வான்புகழ் கொண்டு வரலாறு படைத்தனர். அது போலவே குடும்பமாக மேற்கொண்டு நெய்தல் தொழிலைப் புரிந்தனர்.

நூலிழைகள் ஒன்றுபட்டு உறுதி யான ஆடை ஆவது போல் அனை வரும் ஒன்றுபட்டு உறுதியான சமுதா யத்தை அமைத்த சான்றோர்கள் நம்மவர்கள். சான்றாக, பழையனூர் நீலி வரலாற்றில் இத்தகைய குடிமைப் பண்பைக் காணலாம். ஒருவன் உயிர் போனால் எங்கள் எழுபது பேர் உயிர் களைத் தருகிறோம் என்று சொல்லி, சொல்லியவாறே உயிரைக் கொடுத்த வர்கள்! வாய்மை காத்த வள்ளல்கள்!



# பாவடி

(நாடகம்)


புலவர் நா. கோதண்டன் எம். ஏ. பி,எட்
திருவள்ளுவர் மேனிலைப்பள்ளி,
குடியேற்றம்


## பாவடியில் காலடி வைப்பதற்கு முன்னே

செம்மை சேர் செங்குந்த இனப் பெரு மக்களுக்கு என் இனிய வணக்கம்!

பாவடியில் உலவும் பாத்திரங்கள் யாவும் கற்பனைப் பாத்திரங்களே! ஆனாலும் நம் வாழ்வுக்குத் தேவையான பாடங்களைக் கற்பித்த பாத்திரங்கள்! கற்பிக்கும் பாத்திரங்கள், கற்பிக்கப் போகும் பாத்திரங்கள்!

இந்நாடகத்தில் வரும் **ஆனந்தன் :** செங்குந்தர் சமுதாயம் சிறப்பெற வேண்டும் என்பதில் ஆர்வம் உடையவர்; ஆனந்தம் உடையவர் இவர் எந்த இடத்தில் இலக்கிய நிகழ்ச்சிகள் நடைபெற்றாலும், அதில் கலந்து கொண்டு செஞ்சொற் சுவை இன்பம் கொள்வதில் ஆர்வம் உடையவர், தமிழ்ப்பற்றாளர்.

**நெய்யாண்டி :** ஒன்பதாம் வகுப்பு வரை பள்ளியடிக்குச் சென்றவன் : இப்போது பாவடிக்கு வந்தவன், எதையும் கிண்டலாகப் பேசும் இயல்புள்ளவன், ஆனந்தனால் திருத்தப்பட்டுச் சமுதாயத்தின் பெருமைக்குப் புகழ் சேர்க்கத் தன்னை இணைத்துக் கொண்ட இளைஞன் **கூத்தன், சுப்புரத்தினம் :** இவர்களும்சமுதாய நலனைப் போற்றுபவர்கள்—ஆனந்தனால் எழுச்சி பெற்றவர்கள்.

**குமரன் :** வயதானவர் உடலால்! உள்ளத்தால் இன்றும் அவர் குமரன். வயது 70- வார்த்தை வேகம் 20!

நெய்யாண்டிக்கு வயது 17, குமரனுக்கு வயது 70, இப்படிப்பாவடியில் இளைஞர் முதல் முதியவர் வரை பணியாற்று கின்றனர் என்பதைக் காட்டியுள்ளேன்.

இந்நாடகத்தில், கவிச்சக்கரவர்த்தி ஒட்டக் கூத்தரையும், பாவேந்தர் பாரதி தாசனையும், கொடிகாத்த குமரனையும், கொண்டுவந்து உள்ளேன்.

**கதைமாந்தர் பெயர்கள் :** கூத்தன் என்பது, ஒட்டக் கூத்தரையும், ஆனந்தன் என்பது, மாநிலத் தலைவர் — திருமிகு J. சுத்தானந்தன் அவர்களையும், சுப்புரத் தினம் என்பது—பாவேந்தர் பாரதிதாசனை யும், குமரன் என்பது—கொடிகாத்த குமர னையும், நெய்யாண்டி என்பது—நெய்யும் தொழிலை நினைவு படுத்தவும்—பெயர் களைச் சூட்டியுள்ளேன்.

எல்லாவற்றுக்கும் மேலாக—மாநாட்டு மலரில் வெளியிட பாவடி என்னும் நாடகத்தை ஆக்கித்தருமாறு பணித்த— குடியேற்றம் திருவள்ளுவர் மேனிலைப் பள்ளியின் நிர்வாகியும், வடார்க்காடு மாவட்ட செங்குந்தர் மகாஜன சங்கத்தலை வரும், எங்கள் அன்புத் தெய்வமும்

கல்விக்காவலருமாகிய, திருமிகு கு. மா. கோவிந்தராசனார் அவர்களுக்கு என் நன்றியைக் காணிக்கையாக்கி மகிழ்கின்றேன்.

இவண். அன்பன்,

**நா. கோதண்டன்.**

# 'பாவடி'—நாடகம்

ஆனந்தன் : "வாப்பா—சுப்பு! என்னப்பா இது நீ புறப்பட்ட நேரத்துக்கு இந்நேரம் திண்டிக்கே போய் வந்திருக்கலாம்! இங்க இருக்கிற மண்டிக்குப் போய் வர இவ்வளவு நேரமா...?"

சுப்புரத்தினம் : "அதுவா ...அங்க மண்டி யாண்ட ஒரே வண்டி மயமா இருந்தது!

நெய்யாண்டி : என்னது...! ஒரே வண்டி மயமா இருந்ததா? நம்ம மண்டிக்கார் வண்டி வியாபாரம் கூட... ஆரம்பிச் சிட்டாரா..."?

சு.ரத் : "ஏண்டா ... ! நெய்யாண்டி, இந்தக் கிண்டலுக்கு ஒன்னும் குறைச்சல் இல்லை! அங்கப் போயி வேலையைப் பாருடா"...!

ஆன : "அட....! அவன்கெடக்கறான் சின்னப் பயல்...நீ சொல்லுப்பா...!

சு.ர : "ரெண்டு அம்பாசிடர்கார் வெளியில இருந்தது... உள்ள நம்ம மண்டிக்கார் கிட்ட ஒரு பத்து பேரு பேசிக்கிட்டி ருந்தாங்க. அவங்களெல்லாம் போன பிறகு...!"

கூத்தன் : "அடே! டே!—நம்ம செங்குந்தர் மாநாடு நடக்கப் போவுது இல்லை"...!

நெய் : அட.... ஆடு, மாடு தான் நடக்கும்! மாநாடு கூடவா நடக்கும்?

கூத் : "ஏண்டா நெய்யாண்டி... ஆடு, மாடு நடக்காம, எகிரியா குதிக்கும்? மடையா மடையா...! அந்த மாட்டுக் கிட்ட பில்ல போட்டா ஒழுங்கா மேயுது—! இந்த மடையங்கிட்ட பில்ல போடுன்னு கொடுத்தா... கையில வைச்சிக்கிட்டு நிக்குது...! பாவு ஒட்டிக்கப் போவுதுடா... சீக்கிரம் பில்ல தேயுடா—!

ஆன : நாங்க பேசிக்கிட்டு இருக்கறப்ப நீ ஏன்டா... மூக்கு நீட்டுற...?

கூத் : "ஆமா... மா...அதுக்குத்தான் வந் திருப்பாங்க போலக் கீது! நம்ம மண்டிக் காரும் அவங்களோட போயிட்டு இப்பத் தான் வந்தார்"

[நெய்யாண்டி மீண்டும் குறுக்கிடு கிறான்]

நெய் : "ஆமா...நிதி வசூலுக்கு வந்தவங்க... கைப்பையை எடுத்துக்கிட்டு வந்தாங் களா...? இல்ல... கோணிப்பையை எடுத்துக்கிட்டு வந்தாங்களா"?

கூத் : "ஏன்டா மடையா...உனக்கு நெய் யாண்டின்னு பேரு வச்சத விட 'நையாண்டி மேளம்னு' பேருவைச்சிருக் கலாம்...!

ஆன : "...அட வேலையைப் பாருங்கப்பா... பேச்சு பாட்டுக்கு பேச்சி இருந்தாலும், வேலையிலும் கண்ணும் கருத்துமாக இருக்கணும்;

நெய் : "...ஆரியக் கூத்தாடினாலும் தாண்டவக் கோனே ...காரியத்தில் கண் வைய்யடா... தாண்டவக் கோனே" அப்படித்தானுங்க!"

ஆனந் : "ஏன்டா நெய்யாண்டி என்ன சொன்னவருலுக்கு வந்தவங்ககைப்பையை எடுத்துக் கிட்டு வந்தாங்களா? கோணிப் பையை எடுத்துக் கிட்டு வந்தாங்களான்னு கேட்ட இல்ல...!

[நெய்யாண்டி தலை குனிந்து நிற்கிறான்]

ஆனந்தன் : "கோணிப்பையை எடுத்துக் கிட்டுவந்து உங்கிட்ட நீட்டுனா...... நீ என்ன கண்ணை மூடிகிட்டு வாரி வாரியா......கொட்டுவே!"

நெய் : "அது......வந்து......

ஆனந் : பேசாதப்பா...கொட்ற வங்கக்கூட இப்படிக் கேட்டிருக்க மாட்டாங்க...!

கூத் : "வாரி, வாரி கோட்றாங்களோ...... இல்லையோ......! வாரியாருக்காக வாரி, வாரி கொடுத்தாலும் கொடுப் பாங்க...!

நெய் ; என்னது... வாரியாருக்கு வாரி, வாரி கொடுப்பாங்களா...?

கூத் ; இவரு எள்ளுன்னா...எண்ணெய்ன்னு வந்திடுவாரு...!

நெய் ; நான் ஏதாவது சொன்னா... சொல்லிட்டியேன்னு சொல்றீங்க... கேட் டாலும் கேட்டுட்டியேன்னு... சொல்றிங்க நான் என்னதான் செய்யறது...?

கூத் : நீ ஒன்னும் செய்யாத...பாவுக்குக்கஞ்சி காய்ச்சற வேலையைப் போய்ப்பாரு...!

சு. ரத் ; ஆமா... அது என்னப்பா...வாரி யாருக்கு, வாரி, வாரி கொடுப்பாங்கன்னு சொன்னீயே...!

ஆனந் ; வடாற்காடு அம்பேத்கார் மாவட்டம்—குடியாத்தத்தில் மாநில செங்குந்தர் மாநாடு நடக்கப்போவுது...! அந்த மாவட்டம்—காங்கேய நல்லூர்ல நம்ம வாரியார் சுவாமிகள் பிறந்ததால...அந்தமாவட்டத்துச் செங்குந்தர் தலைவர்...

நெய் ; ஆமா...இப்ப அந்த மாவட்டத்துத் தலைவர் யாரு...?

ஆனந் ; குடியேற்றம்--கு. மா. கோவிந்தராச முதலியார்...இப்பத்தலைவர்!

சு.ரத் ; "அடடே...! குடியேற்றத்திலேயே திருவள்ளுவர் பெயர்ல பெரிய பள்ளிக்கூடம் வைத்து நடத்தராரே...அவர் தானே!

ஆனந் ; "ஆமா...மா...அவரேதான்! அது மட்டுமல்ல, அவரு—குடியேற்றம் முன்னாள் நகரமன்றத் தலைவராகவும் இருந்திருக்கிறாரு...!

சு.ரத் ; "அவரு வாரியார் பெயர்ல...

நெய் ; [அவசரமாக] "இன்னொரு பள்ளிக்கூடம் கட்டப் போறாரா?

ஆனந் ; "அது இல்லப்பா...வாரியார் சுவாமிகள் பெயர்ல...ஒரு கல்வி அறக்கட்டளையை ஏற்படுத்தி, அதன்மூலம் நம்ம இனத்து ஏழைப்பிள்ளைகளுக்கு இலவசமா நோட்டு, புத்தகம் கொடுப்பதற்கு ஏற்பாடு செய்யப் போறாரு...! அதனால தான் அவரு நாள்தோறும் அங்கங்கப் போயி அங்கமெல்லாம் நொந்து, ஊர் ஊராய்ப்போயி உடம்பெல்லாம் நொந்து, நொந்து போயி இருக்கிற நம்ம சமுதாயத்தை நிலை நிறுத்தனும்னு படாத பாடு படறாருப்பா... நீ...என்னடான்னா வசூலுக்கு வந்துட்டாங்களான்னு கேக்கற ...ம்......!

நெய் ; [வருத்தம் கலந்த முகத்தோடு கண்கள் கலங்குவது போல்] "நான் எதையும் எப்பவும் கிண்டலா பேசறமாதிரி இதையும் கிண்டலாப் பேசிட்டேன்...! என்னை மன்னிச்சுடுங்க......!

ஆனந் ; "சரி...! சரி இதுக்குப் போயி வருத்தப்படாதே! தம்பி நீ எதையும் வெளிப்படையா பேசிடற... அது ஒரு நேரம் இல்லேன்னாலும் ஒரு நேரத்திலே தப்பாத் தெரியுது...அதனால இதுமாதிரி இனிமே பேசாதே...!

[நெய்யாண்டி சரியென்று சொல்வ போல் தலையை அசைத்துவிட்டு பாலை கையில் எடுக்கிறான்]

கூத் ; "டே! டே...! நெய்யாண்டி பாலை பக்குமா எடுடா... சிக்கல் வந்து போவுது...!

[எடுத்தப்பாவில் சிக்கலே வந்து விட்டது]

நெய் ; பள்ளிக்கூடம் படிக்கப் போனேன், பாடநூல்ல சிக்கல்! பாவடிக்கு வந்தேன், பா நூல்ல சிக்கல்!

கூத் ; "ஆமா இவரென்ன சிக்கல் சிங்காரத் துக்கு எதிர் வீடா...?

ஆனந் ; அது என்ன தம்பி... பாடநூல் சிக்கல்ன்னு சொன்னீயே···!

நெய் ; எங்கப்பாவும் ஒரு பாவடியி தான் வேலை செய்யறாரு... அவரா பாடநூலையும், நோட்டுப்புத்தகத்தையு வாங்கித்தரமுடியல ஆனா... ஒன்னு ம டும் சொல்வேன்: எங்கப்பா... பாவுக் ஒரு நாள் தவறாம கஞ்சி ஊத்த அவரா முடியறதில்ல... இந்த நிலையில பள்ளி கூடம் போக முடியுமா...? பாவடிக்கு வ திருக்கேன்...!

ஆனந் ; "தம்பி... வருத்தப்படாதே..... உனக்கு ஏற்பட்ட நிலை எதிர்காலத்தி யாருக்கும் ஏற்படக் கூடாதுன்னு, உன் மாதிரி படிக்க வசதியில்லாத குழந்தை களுக்குக் கல்வி வளர்ச்சிக்காகவும் உத செய்ய திட்டமிட்டிருக்காங்க. இதுக்கெல் லாம்... நம்தேசியக் கவி ...

"நிதிமி குந்தவர் பொற்குவை தாரீர்
நிதிகு றைந்தவர் காசுகள் தாரீர்!
அதுவு மற்றவர் வாய்ச்சொல் அருளீர்!
ஆண்மை யாளர் உழைப்பினை நல்கீர்!
என்று சொன்னது போல நாம் ஒவ்வொரு
வரும் நம் பங்கைத் தரவேண்டும் ....
அப்பத்தான் எதையும் வெற்றிகரமா
முறையில் நடத்திக் காட்ட முடியும்!

கூத் ; "ஆமா இந்த விவரம் எல்லாம் உனக்கு எப்படி இவ்வளவு சரியான முறையி தெரியுது......!

ஆனந் ; ...... "அதுவா... நம்ம இனத்து காக, இன நன்மைக்காக, நம்ம தலை வருங்க... எந்த ஊர்ல, என்னசெய்யு றாங்க, என்ன தீர்மானம் நிறைவேத் றாங்க...இதைப் பத்தியெல்லாம், நம் இனத்தவரால வெளியிடப்படும் 'செங் குந்த மித்திரன்' என்று ஒரு மாத இத

வருது... அதை வாங்கித்தான் தெரிஞ்சுக் கறேன்...!

கூத்; ''செங்குந்தமித்திரன்'' — [கொஞ்சம் பல்லை இளித்தபடி] இதழ் வருதுன்னு ... கேள்விப்பட்டிருக்கேன்... ஆனா இது வரைக்கும் அத பார்த்ததே இல்ல...!

ஆனந்; ''இதுக்கு மேல நாம... செங்குந்த மித்திரன்' — பார்த்ததே இல்லை படித்ததே இல்லை, வாங்னதே இல்லன்னு சொல்லாம... எல்லோரும் இனிமேலாவது செங்குந்தமித்திரனை வாங்கிடனும்... !

நெய்; ... ''ஏங்க... அதுக்கு மாதம் எவ் வளவு பணம்கொடுக்கனும்... !

ஆனந்; ஆயுள் சந்தான்னு — ரூ 150 கொடுததிட்டா போதும், மாதந்தோறும் புத்தகம் நம்ம வீட்டுக்கே வந்துவிடும்... !

நெய்; [மகிழ்ச்சி கலநத முகத்தோடு]

''அப்படியா... நான் இனிமே சினிமா வுக்குச் செலவு செய்யற பணத்தைச் சேமித்து, இந்த மாநாட்டில் தலைவருக்கு முன்னால ஆயுள் உறுப்பினரா ஆயிட இப் பவே முடிவு செஞ்சிட்டேன்... !

ஆனந்; — ஆஹா... ரொம்ப மகிழ்ச்சி நெய் யாண்டி... ரொம்ப மகிழ்ச்சி! உன்ன மாதிரி இளைஞுங்க எல்லாம்ஆர்வமா... இது மாதிரி முன்வந்தா... நம்ம இனம் மேலும், மேலும் தலை நிமிர்ந்து நிற்கும்... !

[தலைக்குச்சத்தாண்ட நின்றுகொண்டிருக் நெய்யாண்டியைச் சுப்பு ரத்தினம் அவசர மாக அழைக்கிறார்]

சு.ரத்; ...... ஏண்டா நெய்யாண்டி இங்க பாவு ஒட்டிக்கிட்டுகிது! நீ என்னடான்ன ...... தலைக்குச்சதாண்ட நின்னுகிட்டு பேசிக்கிட்டு இருக்க... '?!

நெய்; '·ஆமா... ஒட்டக்கூத்தருனு ஒரு புலவர்... தலைலேயே நின்னுகிட்டு பாட்டுப்பாடினாருன்னு படிச்சிருக்கேன்... நான் தலைக்குச்சந்தாண்ட நின்னுகிட்டுப் பேசக்கூடாதா?

ஆனந்; ஆமாண்டா...... ஒட்டக்கூத்தர் யாருன்னு உனக்குத் தெரியுமாடா... !

நெய்...''அதெல்லாந் தெரிஞ்சிட்டிருந்தா நான் ஏன் பாவடியில் இருக்கேன்!

கூ. —4

ஆனந்...''அவரு நம்ம இனத்தைச் சேர்ந்த புலவர். அது மட்டும் இல்ல... அவர், அரசன் விக்கிரம சோழன் நாட்டை ஆண்டபோதும், அவனுக்குப் பிறகு, அவன் மகன்இரண்டாம் குலோத்துங்க சோழன் ஆண்ட போதும் அவனுக்குப் பிறகு அவன் மகன் இரண்டாம் இராசராசன் ஆண்ட போதும் இவரே மூன்று தலை முறைக்கும் அவைக்களப் புலவரா இருந்திருக்காரு...

நெய்; ...ஓஹோ... (ஆச்சரியம் கலந்த முகத்தோடு) அப்படியா... அவ்வளவு பெரிய ஆளா...அவரு! ''இது நம்ம ஆளுன்னு சொல்லுங்க! அவருபாடும் போது ஒட்டிக்கிச்சி ...அது ...தப்பல்ல நான் பேசும் போது ஒட்டிக்கனா...மட்டும் தப்பா...?

சு: ரத் ...டேய் நெய்யாண்டி... திரும்பவும் கிண்டல் பேச்சு...!

ஆனந்...''ஒட்டக் கூத்தர் பாடின தால...தனித் தனியா இருந்த, தலையும், உடம்பும் ஒட்டிக்கிட்டது... அதனால அந்த எழுபது பேருக்கும் உயிர் வந்தது...!'ஈட்டி எழுபது' ன்னு ஒரு நூலே பிறந்தது! ''நீ பேசனதால பாவு ஒட்டிக்கிச்சி...அதனால என்ன ஆச்சி...?நூலெல்லாம் அறுந்தது—!

கூத்; அது கிடக்கட்டும்... வுடுங்க !இப்ப மாநாடு குடியேத்தில நடக்கப் போவு துன்னு சொன்னீங்க... இந்த மாதிரி மாநாடு, நடத்துவது பற்றிச் செயற் குழுவை எந்த இடத்தில் கூட்டி முடிவு பண்ணுவாங்க...?

ஆனந்... எந்ந ஊர்ல கூடினாலும்... அந்த ஊர்ல ஒரு கல்யாண மண்டபத்தை வாடகைக்கு எடுத்து... அங்க தா... செயற்குழு, பொதுக்குழு கூடி...இது மாதிரி மாநாடு நடத்தறதப்பத்திப் பேசி முடிவெடுப்பாங்க...!

சு.ரத்; ''எனக்கு என்ன மனசுல படுதுன்னா... நம்ம இனத்துச்குக்குச் சொந்தமான பாவடித்தோப்பு' இருக்கு இல்ல... அந்த இடத்தில

சு ரத்: ''சொத்தமா ஒரு செங்குந்தர் கட்டடம் ...கட்டணும்ன்னுபடுது...! நீங்க ளெல்லாம் என்ன நினைக்கிறீங்க...?

நெய்! [நெய்யாண்டி மறுபடியும் கிண்டலாக] ''இப்ப எல்லோரும் பாவை நனைக்கறாங்க...அடுத்து கஞ்சில நனைப் பாங்க...ஆனா...''நான் என்ன நினைக்

கறேன்னா — நம்ம பாவடியில செங்குந்தர் கட்டடம் கட்டறோமோ இல்லையோ...! வேற எவனாவது வந்து கொட்டா போடுற வரைக்கும்... நம்ம ஆளுங்க கொட்டாவி விட்டுக் கிட்டுத் தூங்காம இருந்தால் சரி'' —!

சுரத் : டேய் நெய்யாண்டி என்ன சொன்ன? என் பேரு சுப்புரத்தினம், நம்ம இனக் கவிஞர் பேரும் சுப்புரத்தினம்!

நெய் : அது யாருப்பா ...?இவரு புது கரடி விடறாரு...!

சு. ர: புதுவையில பிறந்தவர்... சுப்பு ரத்தினம்... அதாம்பா... பாரதிதாசன்!

நெய்... ஹோ... ஹோ... பாரதிதாசனா...! இப்ப அவருக்கு என்ன?

சு.ர: அவரு...''

பூட்டிய இரும்புக் கூட்டின் கதவு
திறக்கப்பட்டது! சிறுத்தையே வெளியில்
வா! ..........................................
சிங்க இளைஞனே திருப்பு முகம்! திறவிழி!
...ன்னு

சொன்னாரு...! அதத்தான் நம்ம இளைஞர் படையும்

''பூங்குயில் கூவிடும் பூஞ்சோலை— எமை மாட்ட நினைக்கும் சிறைச்சாலை...'' ன்னு பாடிக் கிட்டே சிறைக்குப் போகவும் தயாராக இருக்காங்க...

குமரன்: [அதே பாவடியில் பக்கத்துப் பாவில் வேலை செய்யும் 70 வயது பெரியவர்]

''ஏம்பா... இளைஞர் கிளைஞர்ன்னு பேசறீங்க, என்னையும் கொஞ்சம் அந்தப் படையில சேர்த்துங்கப்பா...!

நெய் ; ஆமா...இவருக்கு இப்பத்தா... 16 ஆவது வயது பொறக்குது...உன்ன முதல்ல சேர்த்துக்க வேண்டியது தா...!

[எல்லாரும் வேடிக்கையாகச் சிரிக்கிறார்கள்]

குமரன் : பரம்பரை பரம்பரையா நமக்குக் கஞ்சி ஊத்தற இந்தப் பாவடியில... எந்தக் கொம்பன் வந்து... கொம்ப நட்டு, கொட்டாயப் போடுவான்? கொம்ப நட்டான்னா...வம்ப வெலகுடுத்து வாங்றான்னு அர்த்தம்...! அது மட்டும் இல்ல... கொம்பப் பிடுங்கி நட்டவ மூஞ்சி மேல நான் வீசாட்டுவே... நம்ம இனத்துல — குமரன்னு ஒருத்தர் சுதந்தரத் துக்கு முன்னால... வெள்ளை நாய்கள் அவரை அடிக்கும் போது....நம்ம தேசியக் கொடியைச் கையல புடிச்சிக்கினே... உசிர விட்டாருன்னு...சொல்லக் கேட் டிருக்கேன்... நானும் ஒரு குமரன்தான்...

[எவ்லோரும் சிரிக்கிறார்கள்]

...உடம்பில தளர்ச்சியிருக்குன்னு சொல்றீயா...? என் உள்ளத்தில் தளர்ச்சி யில்லடா... அதனால் இன்னிக்கும் நான் குமரன் தான்...

குமரன் : ''இந்தப் பாவடியக் காப்பாத்த.. இங்கயே உசிர விட்டு 'பாவடி காத்த குமரன்னு' பெயர் வாங்கத் தயாரா... இருக்கேன்! யன்னடா — நெயாண்டிப் பயலே...சொல்றது புரிஞ்சதா?

நெய் ; அப்படின்னா...முதல்ல ஆயுள் உறுப் பினரா செங்குந்த மித்திரனுக்கு அனுப்ப ரூ. 150/ எடு...!

ஆனந் : ''ஏம்பா நெய்யாண்டி நீ எப்ப சேரலாம்னு இருக்கே...

நெய் ' ''நான் சம்பாதிக்கிறதே ரூ70" இதைக் கொண்டு போயி வீட்டில கொடுத்தாத் தாங்க கஞ்சி கிடைக்கும்...!

ஆன : ''என்னப்பா... கொஞ்சம் முன்னத்தா... சினிமாக் காசை மிச்சப் படுத்தி 'செங்குந்தமித்திரன் வாங்கப் போறேன்னு சொன்ன— அதுக்குள்ள என்ன...ஆச்சி...?

கூத் : ஹிம்... [சிரித்தபடியே]... என்னால் கூட மொத்தமா ரூ. 150 கொடுக்க முடியாதுங்க...

ஆனந்... ''சரி அப்படியானால் நான் சொல்ற வழியைக் கேளுங்க சரியா பட்டா, அது படி செய்யுங்க...

எல்லோரும்)... ''சரி...சரி... சொல்லுங்க...

ஆனந் : ''முதல்ல... ஒவ்வொரு பாவடியிலயும் வேலை செய்யற ஒவ்வொருத் தரும் மாதம் ரூ10 வீதம் சேர்த்து ஒருவர் பெயர்ல ஆயுள் உறுப்பினரா கட்டுவோம்...மாதந் தோறும்... இப்படியே சேர்த்து எல்லோரையும் உறுப்பினரா ... ஆக்கிடு வோம்! இதன்படி பார்த்தாலே ...மாதம் 200உறுப்பினர் ஆயுள் உறுப்பினரா...சேர முடியும்...இரண்டுவருடத்தில எல்லோரும் ஆயுள் உறுப்பினரா ஆயிட முடியும் 'செங்குந்தமித்திரனும்' வளர்ச்சி அடையும்!

எல் : சரி...சரி... நல்ல யோசனை...எங்க ளுக்கு ரொம்பப் பிடிக்குது அப்படியே செய்வோம்...!

ஆனந் : அப்படியானால், குடியேற்றத்தில நடக்கற மாநாட்டில நாம எல்லோரும் கலந்து கொள்ளணும், மாநாட்டுக்குக் கொஞ்சம் நிதி கொடுக்கனும். 'செங்குந்த மித்திரன்' உறுப்பினர் பணம் தர வேண்டும் எல்லாத்துக்கும் தயாரா வாங்க...!புறப்படுவோம்!

[எல்லோரும் மாநாட்டுக்குச் செல்ல தயாராகின்றனர்] திரை



பா. கா. ஆறுமுக செங்குந்தர்



பா. ஆ. இலட்சுமி அம்மாள்

# ஆந்திரம் தந்த ஆறுமுக வள்ளல்

இலக்கியத் தென்றல்

**டாக்டர். எ. கு. திருவேங்கடம்**

M A M. Ed., PhD.

பொதட்டூர் பேட்டை–631208

ஆந்திர மாநிலத்தில் சித்தூர் மாவட்டத்தில் நகரியை அடுத்துள்ள புதுப்பேட்டை என்னும் ஊர் இன்று தொழில் துறையில் வளர்ச்சி அடைந்து திருமகள் குடியிருக்கும் குட்டி ஜப்பான் போன்று பொலிவுடன் திகழ் கின்றது. இங்கு வாழும் பெரும் பாலோர் நெசவுத் தொழிலைத் தம் குலத்தொழிலாகக் கொண்ட செங்குந்த இனத்தவர்கள் ஆவர். காலச் சூழலுக்கு ஏற்ப கைத் தறிகளுக்குப் பதிலாக விசைத்தறி களை அமைத்துக் கொண்டு முன்னேறி வருகின்றனர். இந்த முன்னேற்றத் திற்கு வழிகாட்டியாகத் திகழ்பவர் தான் கொடைவள்ளல் திரு. பா. கா. ஆறு முக முதலியார் ஆவார்.

இவர் 1925 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 10ஆம் நாள் பா. காளத்தி முதலியார், முனியம்மை தம்பதியருக்கு மூன்றாம் மகவாகப் பிறந்தவர். இளம் வயதிலேயே தம் தந்தையை இழந்து மிகச் சிரமத்திற்கு இடையே ஆறாம் வகுப்புடன் தம் பள்ளிப் படிப்பை முடித்துக் கொண்டு தம்பதினாறாம் வயதில் கைத்தறி நெசவுத் தொழிலை மேற்கொண்டார் தம் இருபத்தியோராம் வயதில் இலட்சுமியம்மாள் என்னும் மங்கை நல்லாளை மணந்து இல்லறம் என்னும் நல்லறப்பயனாய் சஞ்சீவி, இராஜேந்திரன் சீனிவாசன் என்னும் மூன்று புதல்வர்களையும் இரண்டு புதல்விகளையும் பெற்றுள்ளார். கொடிது கொடிது வறுமை கொடிது, அதனினும் கொடிய இளமைக்கால வறுமைக் கொடுமையை உணர்ந்தவர். ஆன்மீக உணர்வால் உந்தப்பட்டு இறையின் புகழ்பாடும் புனிதப்பணியை மேற் கொண்டு வாழ்ந்தார். நாடகக்கலையை வளர்க்க வேண்டி 'சூரசம்ஹாரம்' என்னும் நாட கத்தைத்தயாரித்துச் சூரனாகத்தானே வேடம் புனைந்து நடித்தும், 'தூக்கு மேடை' என்னும்

சமூக நாடகத்தில் நடித்தும் புகழ் பெற்றார். இசைத்துறையில் ஆர்வம் கொண்டு, தேவாரம், திருப்புகழ், அருட்பா ஆகியவற்றை இசையுடன் பாடும் ஆற்றல் பெற்றுள்ளார். இவை களுக்கிடையே செய்யும் — நெய்யும் தொழிலே தெய்வம் எனக்கொண்டு அல்லும் பகலும் அயராது உழைத்து இன்று உள்நாட்டு, அயல் நாட்டு ரகங் களைத் தயார் செய்து தொழிலதிபர் களில் ஒருவராகத் திகழ்ந்து வருகின்றார்.



**'இலக்கியத் தென்றல்'**
**டாக்டர் ஈ. கு. திருவேங்கடம்**

செல்வந்தர்களும், சொல்வந்தர் களும் பலர் வாழ்ந்தாலும் கொடுக்கும் இயல்பு இல்லாத இந்தக் கலிகாலத்தில் கலிகாலக் கர்ணனாக, பார் போற்றும் பாரியாக, உதார குணம் கொண்ட ஊருக்கு உதவும் உபகாரியாக இருந்து வருகின்றார். 1988 ஆம் ஆண்டி லிருந்து இன்று வரை ஆந்திர மாநில செங்குந்தர் தலைவராக இருந்து, செங்குந்த குலக்காவலராக இருந்து வருகின்றார். திருத்தணியில் உருவாகி யுள்ள செங்குந்தர் திருமணமாளி கைக்கு இவரின் பங்கு பாராட்டுக் குரிய ஒன்றாகும். இத்துடன் 1989 ஆம் ஆண்டு புதுப்பேட்டை பேரூராட்சி மன்றத் தலைவராகத் தேர்ந் தெடுக்கப் பட்டு ஐந்து ஆண்டு களில் இமாலயச் சாதனைகளைச் செய்து அவ்வூர் மக்களின் அமோக ஆதரவைப் பெற்றுத் திகழ்கின்றார்.

மன்றத்தின் தலைவராகப் பொறுப் பேற்றவுடன் நீண்ட நாளைய குடிநீர் பிரச்சனையைத் தீர்க்க வேண்டி இரண்டு ஆழ்குழாய்க் கிணறுகள் அமைத்து இரண்டு பெரிய நீர் கொள் தொட்டிகள் கட்டி வீதிதோறும் குழாய் கள் வைத்து 24மணி நேரமும் தண்ணீர் கிடைக்கும்படிச் செய்து சாதனை செய்து காட்டினார். பழைய பள்ளிக்கட்டடங்களைப் புதுப்பித்த துடன், பல புதிய கட்டடங்களைப் பள்ளிக்காகக் கட்டித் தந்துள்ளார். புதிய சாலைகள் அமைத்து இருபுறங் களிலும் நிழல்தரும் மரங்களை அமைத் தார். வீதிதோறும் மெர்குரி விளக்குகள் போட்டு இருளைப் போக்க முயற்சிகள் செய்துள்ளார். வேறு எங்கும் இல்லாதபடி தம் ஊர் சுடுகாட்டுக்குச் சாலை அமைத்து நீர்த் தேக்கத் தொட்டி அமைத்து ஒரே நேரத் தில் சுமார் 500பேர் குளிப்பதற்கு வசதி செய்து தந்துள்ளார். பல ஏழைத் தொழிலாளர்களுக்குத் தமது தொழிற் கூடத்தில் வேலை தந்து எழைப் பங்காளராக இருந்து வருகின்றார். பல ஊர்ப் பள்ளிகளுக்கும், கோயில் களுக்கும் வாரி வழங்கி உதவுவதுடன், பல ஆன்மீகப் பணிகளில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டு பல கோயில்கள் அறச்சாலைகள் உருவாகக் காரண மாய் இருந்து வருகின்றார். தம் ஊரில் ஆறுமுகப் பெருமான் திருக்கோயிலைக் கட்டி அதன் சரியான பராமரிப்புக்கு ஏற்பாடு செய்துள்ளார். 1990 ஆம் ஆண்டு தமிழ் நாடு திரு முறைமன்றத் தின் தலைமையை ஏற்றுப் பலரிடம் நன் கொடைகள் பெற்று வங்கி நிலுவைத் தொகையில் கிடைக்கும் வருவாயைக் கொண்டு ஆண்டுதோறும் டிசம்பர் 31 ஆம் நாள் சுமார் 2000 பேருக்குத் தணிகையில் அன்ன தானம் செய்ய ஏற்பாடு செய்துள்ளார்.

இவரின் கொடை வளத்தைப் பாராட்டி நடமாடும் முருகனாக, தமிழ்த் தாயின் தலைமகனாகத் திகழும் அருள் மொழியரசு திருமுருக கிருபானந்த 'வாரியார் சுவாமிகள் இவருக்குக் 'கொடை வள்ளல்' என்ற பட்ட மளித்துப் பாராட்டியுள்ளார்.

இவர் ஊராட்சி மன்ற தலைமைப் பொறுப்பில் ஆற்றிய ஐந்தாண்டு சேவையைப் பாராட்டி 7 3. 93 அன்று நகரி கணபதி ரங்கா திருமண மாளிகையில் ஒரு மாபெரும் பாராட்டுவிழா நடத்தப்பட்டது. அதில் எண்ணற்ற தமிழ் அறிஞர்கள் சமுதாயத் தலைவர்கள் மற்றும் அரசியல் தலைவர்கள் கலந்து கொண்டு புகழாரம் சூட்டிப் பாராட்டினர். இவரின் ஆன்மீகப் பணிகளுக்காக ஆன்மீக உலகு இவருக்கு ஆன்மீகமணி என்ற பட்டமளித்துப் பாராட்டுகின்றது.

''ஊருணி நீர் நிறைந்தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு''

என்ற வள்ளுவரின் குறள் நெறிக்கு இலக்கணமாய் வாழ்ந்து வரும் இவர் ஆந்திர மண்ணில் பிறந்தாலும் தமிழார்வம் கொண்டவராய்த் தமிழில் சிறந்த புலமை உடையவராய் தமிழகமெங்கும் சென்று, ஆன்மீக உரைகள் நிகழ்த்தி வருகின்றார்கள். இவர் ஓர் சமுதாயச் சுடர்விளக்கு, கலங்கரை விளக்கம். இவரைப் போன்று நம் சமுதாயமக்களும் உழைப்பால் உயர்ந்து உபகாரியாக வாழ வேண்டும் என்பதற்காகவே இவரின் வரலாறு இந்த மலரில் இடம் பெறுகின்றது.

இப்படிச் சிறந்த ஆன்மீக மணியாக, சமுதாயச் சிற்பியாக, வாரி வாரி வழங்கும் வள்ளலாக, இனக் காவலராகத் திகழும் திரு பா. கா. ஆறுமுக முதலியார் அகிலம் போற்றும் கொடை வள்ளலாகப் புகழ்பெற்று நீடு வாழ எல்லாம் வல்ல ஆறுமுக வள்ளல் தணிகை நாயகனை வேண்டுகின்றோம்.

---

# அரனுக்கு விளக்கிட்ட அருமைச் செங்குந்தர்

## [கல்வெட்டுச் செய்தி]

தெய்வத் திருப்பணிகளில் திருக்கோயில்களில் திருவிளக்கிடுதல் சிறந்தது அந்தத் தீபங்கள் சந்தியா தீபம் (மாலை நேர விளக்கு) நந்தா தீபம்(அணையா விளக்கு) எனப் பிரிவு பெறும். தீபத்திற்கு முதற் பொருளாகப் பசுக்களை விட்டு அதன் மூலம் கிடைக்கும் நெய் கொண்டும், பொன் கொடுத்து அதிலிருந்து வட்டி பெற்றுத் தீபம் இடுதல் உண்டு. அவ்வாறு முதலாக வைக்கும் பசுக்களுக்குச் ''சாவா மூவாப் பசு ' எனவும், பொன்னுக்கு'' முதல்வாடாக் கடமை'' (Fixed deposits) எனவும் கூறுவர்.

கி. பி. 11ஆம் நூற்றாண்டில் பேரூரில் உள்ள பட்டீச்சுரப் பெருமானுக்கு அவ்வூரில் வாழ்ந்த சூலையன் பொத்தியான செல்வஞான சம்பந்தன் என்ற செங்குந்தர் சந்தியா தீபம் எரிக்க எண்ணுகின்றார். அவர் கோயிலில் உள்ள சிவப்பிராமணர் வசம் அச்சு (பொன்காசு) ஒன்று கொடுத்து சூரிய சந்திரர் உள்ளவரை விளக்கெரிக்க ஏற்பாடு செய்தார். அதை ஏற்ற நான்கு அந்தணர் எழுதிக் கொடுத்த செய்தி பேரூர்க் கல்வெட்டில் உள்ளது. (தென்னிந்திய சாசனம் Vol-V 236 AR 560 of 1893)

# மகளிர் நோய்களும், மருத்துவ மகிமையும்

டாக்டர். டி. எஸ். மதுராம்பாள்,
M.D., D.G.O., D.C.H., F.I.C., M.C.H.

Egmore, Madras-8.

நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம் என்று நம் முன்னோர்கள் கூறியது முற்றிலும் உண்மைதான். ஆனால் விஞ்ஞானம் வெகுவாக முன்னேறியுள்ள இந்தக் காலத்தில், பல துறைகளிலும் மருத்துவம் முன்னேறியுள்ளது. மலடி என்ற சொல்லுக்கே இடமில்லாமல்—சோதனைக் குழாயின் மூலம் பிள்ளை பெறுகின்ற காலம் இது. ஆராய்ச்சிகள் அதிகமாகி எந்த நோய்களையும் எளிதில் குணப்படுத்தும் காலம் இது. ஒரு காலத்தில் எலும்புருக்கி நோய் என்றாலே தூரம் ஓடுவார்கள்; ஆனால் அந்த நோயை பூரணமாக மற்ற நோய்களைப்போலவே குணப்படுத்த முடியும்.

அதுபோலவே தொழு நோய் மனதாலும் நினைக்க முடியாத நோய்; ஆனால் இப்போது இருக்கும் மருத்துவ முன்னேற்றத்தினால் மருந்தினாலும். அறுவை சிகிச்சையினாலும் பூரண குணமடைய முடியும்.

மனிதனின் பல்வேறு உறுப்புகளை மாற்றி அமைத்து இயந்திரம் போல் இயங்க வைக்கிறார்கள். சிறுநீரகம், கண், கல்லீரல் ஏன் இருதயத்தையே மாற்றி அமைக்கிறார்கள். எத்தனை இடத்தில் எலும்பு முறிவுகள் ஏற்பட்டாலும், ஒரே நேரத்தில் செயற்கை சாதனங்களைக் கொண்டு மாற்றி அமைத்து ஒரு சில நாட்களில் பூரண குணமடையச் செய்கிறார்கள்.

இருதய அறுவை சிகிச்சை (Bi Pass Surgeoy)—மூலம் மனிதன் நீண்ட நாள் வாழ முடிகிறது. மூளையின் உருப்புகளை C.T. Scane வாயிலாக படம் பிடித்து எங்கு என்ன கோளாறுகள் இருந்தாலும் அறுவை சிகிச்சை வாயிலாக நன்கு குணப்படுத்த முடிகிறது மக்களும் ஓரளவிற்கு பயமின்றி இந்த அறுவை சிகிச்சைகளை முன் வந்து செய்து கொண்டு பலனடைகிறார்கள்.

பரம்பரை சொத்துக்களான ரத்தக் கொதிப்பு சர்க்கரை வியாதி போன்ற வியாதிகள் எவ்வளவோ குறைந்து வருகிறது. ஆரம்பக் காலத்திலேயே இவ்வியாதிகளைக் கண்டறிவதால் அதனால் ஏற்படும் விளைவுகளைத் தடுக்க முடிகிறது. காரணம் மக்கள் விழிப்புணர்ச்சியுடன் இருப்பதுதான்.

முன் காலத்தில் அம்மை வியாதிகள் பெரியம்மை, சின்னம்மை, தட்டம்மை போன்றவைகள் ஏராளமாகக் காணப்படும். ஆனால் இந்தக் காலத்தில் அவ்வியாதிகளுக்கான தடுப்பு முறைகளை முற்றிலும் கையாளுவதால் நாம் அந்த வியாதிகளைக் காண முடிவதில்லை. இளம் பிள்ளை வாதம் கக்குவான் போன்ற வியாதிகள் அடியோடு போக்கடிக்கப் பட்டுள்ளன.

பொதுவான வியாதிகளைப் பற்றி நாம் இதுவரை கவனித்தோம். இப்போது மகளிருக்கே உரித்தான சில நோய்களைப்பற்றி கவனிப்போம். பெண்கள் வீட்டிற்கு மட்டுமல்ல நாட்டிற்கும் கண்போன்றவர்கள். குடும்ப தலைவியான பெண் நோய்வாய் பட்டால் குடும்ப நலம் மிகவும் பாதிக்கப்படும். ஆகவே பெண்ணின் நலனைப் பேணுவது மிக மிக அவசியம்.

மகளிரின் முக்கிய உறுப்புகள் ஒன்று கர்ப்பப்பை; மற்றொன்று மார்பகம். மார்பகத்தில் சிறு வயதில் சில கட்டிகள் ஏற்படலாம். அவைகளை எளிதில் கண்டறிந்து அறுவை சிகிச்சை மூலம் நீக்கி விடலாம். 40 வயதிற்குப் பிறகு எந்த கட்டி ஏற்பட்டாலும் அது புற்று நோயா என்பதை கண்டறிந்து அதற்குண்டான சிகிச்சையை ஆரம்பத்திலேயே செய்தால் எத்தனை ஆண்டு காலமானாலும் வாழலாம்.

அடுத்து கர்ப்பப்பை. இது குடியிருந்த கோயிலாகும். இந்த கர்ப்பப்பை நோய்களை இரு வகையாக பிரிக்கலாம்.

1. ஒன்று பேறு காலத்தின் போது ஏற்படும் நோய்கள்

2. மற்றொன்று பேறு காலம் அல்லாத மற்ற நேரங்களில் ஏற்படும் நோய்கள்

## பேறு காலத்தின் போது ஏற்படும் நோய்கள்

நம் முன்னோர்கள் பேறு காலத்திற்கு பிறகு மறு பிறவி என்று கூறுவார்கள். அது முற்றிலும் பொருந்தும். கருவுற்ற தாய்மார்கள் அடிக்கடி உரிய காலத்தில் மருத்துவர்களை அணுகி கவனித்தால் தாய்க்கோ சேய்க்கோ எந்த வித இன்னலும் ஏற்படாமல் பேறுகாலம் நல்ல முறையில் அமையும்.

ஆனால், எத்தனையோ தாய்மார்கள் முக்கியமாக கிராம பகுதிகளில் வசிப்பவர்கள் தங்களைப் பாதுகாக்க தவறி விடுகிறார்கள். பத்து மாதத்தில் தான் பிரசவ வேதனை எடுத்த பிறகு முதல் முறையாக மருத்துவ மனைக்கு வருகிறார்கள்.

கருதரித்த உடனே மருத்துவரை அணுகி கர்ப்பம்தான் என்று உறுதி படுத்தி கொளள வேண்டும். பிறகு மாதம் ஒரு முறை 7 மாதம் வரையும், 15 நாட்களுக்கு ஒரு முறை 9 மாதம் வரையும், வாரம் ஒரு முறை 10—மாதம் வரையும் மருத்துவரை அணுகினால் எந்த வித ஆபத்தும் வராமல் தடுக்கலாம்.

எல்லோருக்கும் சாதாரணமாக வரக்கூடிய நோய் ரத்தசோகை; கருவுற்ற தாய் தனக்காகவும், தன் குழந்தைக்காகவும், பேறு காலத்தில் ஏற்படும் உதிர போக்குக்காகவும், குழந்தை பிறந்த பிறகு பாலூட்டுவதற்காகவும் அதிக இரும்பு சத்துள்ள உணவை உட்கொள்ள வேண்டும். இந்த இரும்பு சத்து சாதாரண கீரை (முருங்கைக் கீரை முளைக்கீரை) பச்சை காய்கறிகள் பால் இவற்றில் எல்லாம் ஏராளமாக உள்ளது.

அடுத்து Toxaemia என்ற கொடிய வியாதி 7—மாதத்திற்குப் பிறகு ஏற்படும். இதன் அறிகுறிகள் கைகால் வீங்குவது, சிறுநீர் சரியாக போகாதது, இரத்த அழுத்தம் அதிகமாக காணப்படுவதாகும். இந்த நோயை ஆரம்பத்திலேயே கவனிக்காவிட்டால் Eclaupsia என்ற இழுப்பு வலி ஏற்பட்டு தாயையும் சேயையும் மிகவும் பாதிக்கும்.

மற்றொரு முக்கிய வியாதி பேறு காலத்தில் ஏற்படும் உதிர போக்கு; குழந்தை பிறக்கு முன்னும் பின்னும் ஏற்படலாம். ஆரம்பத்திலேயே கண்டறிந்தால், தகுந்த சிகிச்சை அளித்து தாயையும் சேயையும் காக்க முடியும்.

அதிகமாக உதிரபோக்கு ஏற்பட்டால் சில சமயங்களில் தேவையான அளவிற்கு ரத்தம் செலுத்த முடியாமல் தாயையும், சேயையும் இழக்க நேரிடும்.

ஆகவே ஒவ்வொரு கருவுற்ற தாயும் அடிக்கடி மருத்துவரை அணுகி ரத்தம், நீர், எடை, ரத்த அழுத்தம், போன்றவைகளை ஒவ்வொரு முறையும் பரிசோதித்துக் கொண்டால் நல்ல உடல் நலமுள்ள குழந்தையைப் பெற்றெடுக்கலாம்.

## பேறுகாலமின்றி மற்ற நேரங்களில் மகளிருக்கு வரக்கூடிய நோய்கள்

1. மாதவிடையில் கோளாறுகள்
2. மலட்டுத்தன்மை
3. கருப்பையில் கட்டிகள்
4. கருப்பையும் புற்றுநோயும்
5. வெள்ளை போக்கு
6. கருப்பை இறங்கி விடுதல்

## 1. மாதவிடையில் கோளாறுகள்

இந்த நோய் 15—வயதிற்குப் பிறகு எந்த வயதிலும் வரலாம். ஒரு பெண் வயதிற்கு வந்தபிறகு, ஒன்று அல்லது இரண்டு ஆண்டு வரை மாதவிடை முன் பின் வருவது சாதரணமாகும். இதை நம் தாய்மார்கள் என்னமோ ஏதோ என்று பயந்து, கவலைப்பட வேண்டியதில்லை. பிஞ்சு நிலையிலிருந்த கருப்பை முதிர்ச்சி அடையும் நிலையில் இம்மாதிரியான மாறுதல் ஏற்படும்.

ஆனால் இம்மாதிரியான உதிர போக்கு நடுவயதில் 20.40 வரை ஏற்பட்டால்—உடனே கவனிக்க வேண்டும். கருப்பை பலவீனத்தினாலும், கட்டிகள் ஏற்பட்டு இருந்தாலும் புற்று நோய் இருந்தாலும் இம்மாதிரி ஏற்படலாம். நன்கு பரிசோதித்து உடனே ஆவன செய்ய வேண்டும்.

20—30 வயதுடையவர்களுக்கு முடிந்த வரை மருந்து மாத்திரைகளினால் குணப்படுத்துவது நல்லது. 40—வயதை நெருங்கியவர்களுக்கும், அதற்கு மேற்பட்டவர்களுக்கும் அறுவை சிகிச்சை மூலம் சர்ப்பப்பையை அகற்றுவது நல்லது. மேலை நாடுகளில 40—வயதானவுடன் தனக்கு புற்றுநோய் வந்துவிடுமோ என்ற பயத்தினால் கருப்பையை எடுத்து விடுவார்கள். அந்த அளவிற்கு நாம் முன்னேற வில்லை என்றாலும், நோய் வந்த பிறகாவது மருத்துவரை அணுகி ஆவன செய்து கொள்ள வேண்டும்.

## 2. மலட்டுத்தன்மை

மலட்டுத்தன்மைக்கு மகளிர் மட்டும் காரணம் அல்ல. ஆண்களுக்கும் சம பங்கு உண்டு. திருமணமாகி ஓரிரண்டு ஆண்டுக்குள் 80% மகளிருக்கு குழந்தை பிறந்து விடுகிறது. மற்ற 20 காரணம் கண்டு பிடித்து குணப்படுத்தலாம். ஸ்கேன் லேப்ராஸ்கோப் போன்ற நவீன கருவிகள் மூலம் காரணத்தைக் கண்டு பிடித்து குழந்தை பெறச் செய்யலாம். சோதனை குழாய் மூலம் குழந்தை பிறக்கும் காலம் இது.

## 3. கருப்பையில் கட்டிகள்

குழந்தை பிறக்காதவர்களுக்கும் ஒன்று இரண்டு குழந்தை உடையவர்களுக்கும் இந்த கட்டிகள் அதிகமாகக் காணப்படும். இந்த கட்டிகள் எப்படி வருகின்றன ஏன் வருகின்றன என்பது பற்றி திட்டவட்டமாக கூற முடியாது. இந்த கட்டியின் அறிகுறி அதிகமான உதிரப் போக்குதான் ஒரு சில கட்டிகள் எந்தவித அறிகுறிகளும் இன்றி வளரக் கூடும். சிறு வயதில் கருப்பையில் இந்த கட்டிகள் ஏற்பட்டால் கட்டியை மட்டும் எடுத்து விடலாம்.

நாற்பது வயதுக்குப் பிறகு இந்த கட்டிகள் ஏற்படுமானால் கட்டியோடு கருப்பையும் எடுத்து விடுவது நல்லது.

## 4. வெள்ளைப் போக்கு

மாதவிடைக்கு முன்னும் பின்னும் வெள்ளை போக்கு ஏற்படுவது ஓரளவிற்கு சாதாரணம். சில நேரங்களில் நோயின் காரணமாக அதிகமாக ஏற்படும். அப்போது காரணத்தைக் கண்டுபிடித்து உரிய சிகிச்சை அளித்தால் பலன் ஏற்படும்.

## 5. கருப்பையும் புற்றுநோயும்

ஆனால் மாதவிடை நிரந்தரமாக நின்ற பிறகு(Menopause) இந்த வெள்ளை போக்கு ஏற்பட்டால் உடனடியாக கவனிக்க வேண்டும். காரணம் இந்த வெள்ளை போக்கு பெரும்பாலும் புற்றுநோயின் அறிகுறியாக இருக்கலாம். கருப்பையில் தோன்றும் இந்த புற்று நோயை ஆரம்ப காலத்தில் கண்டறிந்தால் பூரண குணப்படுத்தலாம் அதனால் நீண்ட காலம் எந்த கவலையும் இன்றி வாழலாம். முற்றிய நிலையில் இந்த நோயை கண்டறிந்தால் செய்ய கருப்பையை எடுத்தும் பலனில்லை. காரணம் இரத்தத்தின் மூலம் எல்லா உறுப்புகளிலும் இந்த நோய் பரவி விடுகிறது.

ஆகையால் ஒவ்வொரு மகளிரும் நாற்பது வயது தாண்டிய பிறகு பொதுவாக எல்லாவித பரிசோதனைக்கும் ஆளாக்கிக் கொள்ள வேண்டும். முக்கியமாக கருப்பையை ஆறு மாதத்திற்கு ஒருமுறை அல்லது ஓராண்டுக்கு ஒரு முறையாவது (general checkup) பரிசோதித்தும் கொள்ள வேண்டும்.

## 6. கருப்பை இறங்கிவிடுதல்

மகளிருக்கு மாதவிடை நின்றபிறகு வரக் கூடிய முக்கியமான ஒரு நோய். இந்த நோய் யாருக்கு ஏற்படும் என்றால் அடிக்கடி இடைவெளியின்றி அதிகம் குழந்தை பெறுபவர்களுக்கும், பேறுகாலத்தின் போது சிக்கல் ஏற்படுபவர்களுக்கும் காலை முதல் மாலை வரை ஓயாது கடின வேலை செய்பவர்களுக்கும் கருப்பை உள்ளிருக்கும் நிலையிலிருந்து சரிந்து கீழே இறங்கி விடுகிறது. இதனால் மலஜலம் கழிப்பதில் சிக்கல்கள் ஏற்படுகின்றன, நடப்பதற்குக் கூட சில சமயங்களில் முடியாமல் போகின்றது. கருப்பையில் புண் ஏற்பட்டு நாளடைவில் புற்று நோயாகவும் மாறக்கூடும். இம்மாதிரி ஏற்பட்டவர்களுக்கு அறுவை சிகிச்சை மூலம் கருப்பையை அகற்றி விடுவது நல்லது. ஒரு சிலருக்கு சிறு வயதில் இந்த நோய் ஏற்படலாம். அப்படி ஏற்பட்டால் கருப்பையை உள்ளே தள்ளி வெளியே வராமல் இருக்க தையல்கள் போடலாம். ஒரு சில ஆண்டுகளுக்கு இது பலனளிக்கும்.

ஸ்விட்ச் போட்டால் விளக்கு எரிவது போல, பட்டனை தட்டினால் எந்திரமே (Robot) அறுவை சிகிச்சை செய்யும் காலமிது. Scan, Computer, Robot போன்ற விஞ்ஞான மகிமையினால் மனிதனுடைய கைகளுக்கே வேலை இல்லாது போகுமோ என்று நினைக்கும் அளவிற்கு மருத்துவம் வளர்ந்துள்ளது. என்னதான் இருந்தாலும், எவ்வளவுதான் விஞ்ஞானம் வளர்ந்தாலும் கடவுள் கொடுத்த காதுகளினால் மக்கள் கூறுவதை நன்றாக கேட்டு நம் கரங்களினால் நன்கு பரிசோதித்த பின் நவீன சிகிச்சை முறைகளை கையாள வேண்டும். மனிதனின் மூளையும் ஒரு பெரிய கம்ப்யூட்டர்தான் என்பதை நாம் மறக்கக் கூடாது இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் வள்ளுவர் பெருந்தகை கூறிய,

நோய் நாடி நோய் முதல் நாடி அது தணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்

என்பதை நாம் மறக்க கூடாது.



# சிந்தித்து வாழுவோம்

சைவ நன்மணி

**புலவர் சரவண சதாசிவம் MA. M.Ed.,**

காஞ்சிபுரம்



சீர்கொண்ட செங்குந்தர் குலதிலக மெனநிலவி
செப்பரிய நமது பொருள் சேர்
செய்யுட் குறட்பாவைக் கொண்டுலக ளந்ததிரு
வள்ளுவர்நம் மரபல்லவா?

பேர்கொண்ட அவர்வழியைப் போற்றிப் பரப்புவது
பெரிதான கடமையலவா?
புண்ணியத் தொழில்நெசவு பூமிக்கு நாம்செய்யும்
பெருமானம் காப்பதலவா?

நீர்கொண்ட மேகமென நீள்கவி உலாப்பாடும்
நிகரிலாப் புலவரான
நேர்மைமிகு இரட்டையர்கள் நம்குலம் அல்லவா
நெடியபுகழ் நமதல்லவா?

தார்கொண்ட வடிவேலன் தம்பியர் எனும்பெருமை
தரணியில் நமக்கல்லவா?
தகவுடைய ராய்நின்று தாரணிம திக்கும்செயல்
தான்செய்தல் கடமையலவா?

செங்குந்தம் ஏந்துமொரு "செங்குந்தர்" என்ற பெயர்
எங்குந்த ழைக்க நின்றோம்
செங்கோல் செலுத்தியதொல் சோழர் முதல் மன்னர்க்குச்
சேனைத்த லைமை ஏற்றோம்

பொங்குங்க டல்சூழ்ந்த புவியதனில் நம்குலப்
பெரியரால் புகழ டைந்தோம்
போற்றும் திறல்வீர பரணிபெறு தரணிபுகழ்
போர்க்களம் கண்டு வென்றோம்.

சிங்கக்க விஞர்பலர் முன்னோரெ னும்பெருமை
சிதையாது காத்து நின்றோம்.
சீர்த்திபெறு கூத்தர்க்கு வாணிதிரு வருளினால்
சிரச்சிங்கா தனம மைத்தோம்.

வங்கமலி மைக்கடலை வளராடை யாய்க் கொண்ட
வண்புலி தழைக்க நின்று
வாழ்ந்தகதை பேசாமல் வாழ்விலுயர் நிலைகாண
வழிமுறைகள் மேற்கொள் ளுவோம்

வான்சுமங் தேவந்த வளர்கங்கை நதியில்வரு
வடிவேலன் துணைவர் என்றே
வருகின்ற நவவீர ரொடுலட்சம் வீரர்தம்
வழித்தோன்றல் நாமல்லவோ?

தேன்சுமங் தேயுலவு கற்பகக் காவிலுறை
தேவர்தம் வாழ்வு தன்னை
திறலவுணர் கைக்கொள்ள தேம்பியழும் அவர்குறை
தீர்த்தருள் குமார னோடு

ஊன்சுமங் துழல்கின்ற ஒளிர்வாளும் வடிவேலும்
உயர்த்தியது நாமல்லவோ?
ஊர்ப்பகையைத் தீர்ப்பதில் உதவிடும் நாம்கொள்ளும்
உட்பகை தவறல்லவோ!

மான்சுமங் தொளிர்கரத் திறைகுமரன் அருள்கொண்டு
மாட்சியுறு நம்கு லத்தோர்
மாட்சிபெறு காட்சிபெற மாண்செயல் புரிந்துபிறர்
மதித்திடும் வகைவாழுவோம்!



# செங்குந்தர்

சைவநன்மணி,

புலவர். சரவண சதாசிவம் M. A., M. Ed,

காஞ்சிபுரம்





மலர்மகளும் வாணியும் மடிமீத ழைத்திடவும்
மலைமகளின் அருகணைந்து
மாசற்ற மொழிபேசும் மயிலோன் கரத்துளது
மாவீர **செங்குந்தமே!**

மலர்மீது உறைஅயனைப் பிரணவப் பொருள்வினவ
மால்மருக னுக்கு முன்னர்
மயங்கிமருள் கொளுமவனை மாச்சிறையி லிடுவித்து
மருட்டியதும் **செங்குந்தமே!**

உலகுபடை பிரமன்முதல் உம்பர்தம் உளம்வெருவல்
உற்றபகை சூர்க்குலத்தை
உதிரக்கடல்தள்ளும் உயர்குமர வேலவனின்
ஒளிர்கையின் **செங்குந்தமே!**

நிலவுலகில் பகைதீர்த்து நெடியபுக ழேபோர்த்து
நேசர்க்க ருள்புரிந்து
நித்தலும் வளர்குமரன் கைத்தலம் பற்றியொளிர்
நெடுவீர **செங்குந்தமே!**





# வாணிபம் செய்வோம்


**எம். எம். சிவஞானம்**

தலைவர் நகர காங்கிரஸ் கமிட்டி

குடியேற்றம்




இன்று குடியேற்றம் நகரில் 17வது உலக, செங்குந்தர் மாநில மாநாடு திருவள்ளுவர் மேநிலைப் பள்ளியில் நடைபெறுவது கண்டு பெரிதும் மகிழ்ந்து வாழ்த்துகிறேன். இந்த மாநாட்டைக் குடியேற்றத்தில் நடத்தியே தீர்வதென. உறுதி மிகக் கொண்டு. செயலாற்றுகின்ற தலைவர் K. M. கோவிந்தராஜனார் அவர்களையும் அவரோடு உறுதியுடன் செயல்படும் திருமிகு K. T. மார்கபந்து செங்குந்தர் திருமிகு. K. ß மார்க்க சகாயம் செங்குந்தர் திரு. P. G. சிவஞானம், தண்டபாணி ஆசிரியர் அவர்களையும் நான் மனமாரப் பாராட்டி வாழ்த்துகிறேன்.

நமது குலத்துக்கு ஆசானாகவும் கவிஞனாகவும் இருந்த ஒட்டக் கூத்தரை நினைவு கூர்ந்து, அவருக்கும் என் நல் வணக்கம். நம் இனத்தைக் கோலர் என்னும் கைக்கோலர் கோலெடுத்துச் சண்டை இடுபவர்கள் அதனால் செங்குந்தர் என்னும் சேனாதிபதி என்றும் அழைக்கிறார்கள். நம் இன மக்கள் ஒன்றுபட வேண்டிய கால கட்டத்தில் இருக்கிறோம். அரசு பல இன மக்களுக்கு மிகவும் பிற்படுத்தவர் பட்டியலில் சேர்த்து விட்டதால் ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு 'இல்லை ஒற்றுமை நீங்கிடில் அனைவருக்கும் தாழ்வு என்ற முதுமொழியைப் பின்பற்ற வேண்டியது மிக மிக அவசியம்.

இந்திய நாட்டில் உழவுத் தொழிலுக்கு அடுத்தபடியாக அதிக அளவில் செய்யப்படும் தொழில் கைத்தறியே. அதனையும் நம் இன மக்கள் தான் அதிகம் பேர் செய்கிறார்கள். கைத்தறியை நம்பி வாழும் செங்குந்தர்கள் சொல்ல முடியாத துன்பங்களும் சிரமமும் அடைகிறார்கள். பொருளாதாரத்தில் மிகமிக பின் தங்கியுள்ளது. காரணம் நாம் கொண்டாடாத விழாக்களே இல்லை எனலாம், பொங்கல், தீபாவளி ஆடி கிருத்திகை கார்த்தி தீபம், உகாதி கைங்கையம்மன் திருவிழா மாரியம்மன் கூழ்வார்த்தல் பொங்கல் போன்ற காலங்களில் ஒருமாதம் விடுமுறையாக எடுத்துக் கொண்டு கைப்பொருள் வீணாக்குவதும் நம் இன மக்கள் தான். இந்த நாட்டின் கலை கலாசாரம் பண்பாடு அனைத்தையும் பேணிக் காப்பதும் வீரவிளையாட்டுகள் 60 அடி உயரக் கம்பத்தின் மேல் ஏறி செய்வதும் நம்மவர்கள். இப்படிப்பட்டவர்கள் இன்று, அரசின் ஆதரவு இல்லாமல் வேலை வாய்ப்புகள், கஷ்டப்படுகிறார்கள், பொருள் இல்லார்க்கு இவ்உலகம் இல்லை. அருள் இல்லார்க்கு அவ்உலகம் இல்லை என்ற முதுமொழிக்கு இணங்க பொருள் தேட வேண்டும் நம் இனிவரும் காலங்களில் செங்குந்த இன மக்களிடம் தான். எப்பொருள் எவ்வேலை வாங்கினாலும் செய்வோம் என்று உறுதி எடுத்துக் கொள்ள வேண்டும். சுமார் 500 மைல்களுக்கு அப்பால் இருந்து இங்கு வந்து வியாபாரம் செய்யும் ஜெயினர்களைப் பாராட்டுகிறேன். காரணம் அவர்கள் ஒருவருக்கு ஒருவர் ஏழைக்குக் குறைந்த வட்டிக்குப் பணம் தருகிறார்கள் வாங்கியவர்களும் ஏமாற்றாமல் நடந்து கொள்கிறார்கள். கொடுக்கும் கடன் பொன் வெள்ளி ஆகியவைகளின் பேரில் ஈடுகாட்டிக் கொடுத்து நல்ல லாபம் சம்பாதிக்கிறார்கள். நாமும் உழைக்கும் பணத்தில் மிச்சம் பிடித்து, பொருள் சேர்த்து வட்டி மற்ற வியாபாரம் செய்ய வேண்டும். அரசை நம்பி இனிப் பயனில்லை. கடின உழைப்பு சேர்ந்த பணத்தை நல்ல வகையில் வியாபாரம் செய்து நம் குலத்தின் கவுரவத்தைக் காப்போம் மாநில மாவட்ட நகர செங்குந்தர் தலைவர்களின் கட்டளைகளை ஏற்போம் எனக் கூறி முடிக்கிறேன். வாழ்க செங்குந்தம்.

தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம் செங்குந்தர் மாளிகை
89, அரண்மனைக்காரத் தெரு, சென்னை. 600 001.

# தலைமைச்சங்க வரலாறு

ச. கு. பா. பழநிவேல்
[துணைத் தலைவர், தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்]

## நமது பழைய ஆட்சி முறை

நாம் முருகக் கடவுளின் தம்பிமார்கள். வீரவாகு தேவர் மற்றும் நவவீரர்களின் வழித் தோன்றல்கள். திருக்கைலாய பாம்பரையினர் என்பது புராணச்சான்றுகள் ஆகும்.

தமிழகத்தில் சேர, சோழ பாண்டியமன்னர்களிடம் படைவீரர்களாகவும் குறுநில மன்னர்களாகவும் வாழ்ந்த நம் முன்னோர் பின்னர் நெசவுத் தொழிலை மேற்கொண்டனர். விஜயநகர சாம்ராஜ்ய காலத்தில் செங்குந்தர்கள் தங்கள் ஒற்றுமை குறையாவண்ணம் அவர்கள் குடியேறிய எழுபத்திரண்டு நாடுகளையும் நான்கு திசை நாடுகளாக வகுத்து அவற்றின் நடுவில் அமைந்த காஞ்சிபுரத்தைத் தலைமை நாடாகக் கொண்டு கிராமம், நாடு, திசைநாடு, காஞ்சிபுரம் மகாநாடு என்று அமைத்துக்கொண்டு நாகரீகத்துடனும், கட்டுப்பாட்டுடனும் கல்வி, இறையன்பு முதலியவற்றில் சிறந்து ஒற்றுமையாக வாழ்ந்து வந்தனர்.

அரசியல் மாற்றங்களால் நமது பழைய ஆட்சிமுறை தளர்ச்சியுற்றது. கிராமம், நாடு, திசை நாடு காஞ்சிபுரம் மகாநாடு என்ற அமைப்புகளை நிர்வாகம் செய்து வந்த தலைவர்கள் செயல்பாடு குன்றியதால் காலத்திற்கு ஏற்பநமது சாதியினரை ஒற்றுமையுடன் பண்டைபழக்க வழக்கங்கள் மாறுபடாமல் செயலாற்றும் பொருட்டு வண்ணக்களஞ்சியம் காஞ்சி நாகலிங்க முனிவர் அவர்கள் முயற்சியால் காஞ்சிபுரம், சென்னை, நாகைபொருள் வைத்தச்சேரி முதலான இடங்களில் செங்குந்தக் கலைவர்கள் ஒன்றுகூடித் திட்டமிட்டனர். 1914 முதல் 1927 ஆம் ஆண்டு வரை பல்வேறு முயற்சிகளை மேற்கொண்டார்கள் அதன் பயனாக கடந்த பிரபவ ஆண்டு] சித்திரை மாதம் 17ஆம் நாள் 29.4.1927 வெள்ளிக்கிழமை 5 மணி அளவில் சென்னை கோவிந்தப்பநாயக்கன் தெருவில் உள்ள சௌந்தரிய மகால் என்னும் மண்டபத்தில் நமது தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம் தோற்றுவிக்கப் பட்டது.

வண்ணக்களஞ்சியம் காஞ்சி நாகலிங்க முனிவர், திருவாரூர் திரு. தி. நா. சபாபதி செங்குந்தர் மயிலாப்பூர் திரு. எல். குமந்தைவேல் செங்குந்தர் மற்றும் நம்குலப் பெரியோர்கள் தொடக்கத்தில் பங்கேற்றுச் செயல்பட்டனர். அன்று சென்னை இந்து அறநிலைய ஆணையர் திரு. பி. வி. நடராஜ செங்குந்தர் அவர்கள் தலைவராகவும், திருவாரூர் நகர் மன்ற உறுப்பினர் திரு. தி. நா. சபாபதி செங்குந்தர் மற்றும் காஞ்சிபுரம் திரு. ம. சண்முகமுகசுந்தர் செங்குந்தர்எம்.ஏ., எல்.டி. இருவரும் செயலாளர்களாகவும் திருவாரூர் திரு. எஸ். முருகைய செங்குந்தர் பொருள் காப்பாளராகவும் மற்றும் பல செயற்குழு உறுப்னர்களும் நியமனம்செய்யப்பட்டுத் தலைமைச் சங்கம் தொடங்கிச் செயலாற்றி இன்று வரை நமக்கு உறுதுணையாக இருந்து வருகிறது.

## செங்குந்த மித்திரன்

1921 ஆம் ஆண்டில் செங்குந்தன் என்ற பெயரால் வார இதழாக வெளிவந்து சில மாதங்களில் மறைந்த பத்திரிக்கையின் ஆசிரியராகிய காஞ்சி நாகலிங்க முனிவர் அவர்களால் 1927 ஆம் ஆண்டு ஜனவரியில் தொடக்சப்பட்டு இன்று அறபத்தி ஏழாம் மலராக மலர்ந்துள்ள செங்குந்தமித்திரனின் முதலாவது ஆசிரியராகப் பொறுப்பேற்றார்கள்.

அன்னாரைத் தொடர்ந்து திருவாளர்கள் காஞ்சிபுரம் ம. சண்முகசுந்தர செங்குந்தர், காஞ்சி மணிமொழியார், சென்னை சி. நடராஜ செங்குந்தர், சென்னை டாக்டர் சி. பாலசுப்பிரமணிய செங்குந்தர், திருமலைராயன்பட்டினம் தி. சே. பழநிவேல் செங்குந்தர் ஆகியோர் மித்திரன் ஆசிரியர்களாகப் பணியாற்றியதைத் தொடர்ந்து 1981ஆம் ஆண்டு மார்ச் மாதம் முதல் இன்றைய செங்குந்தமித்திரன் ஆசிரியர் டாக்டர். தி. ரா. செல்வராசன் எம்.ஏ., எம்.லிட்., பி.எச்.டி. அவர்கள் சிறப்பாகப் பணியாற்றி வருகிறார்கள்.

## நமது தலைவர்கள்

1927ஆம் ஆண்டு தொடங்கிய நமது தலைமைச்சங்கத்தின் முதலாவது தலைவராகச் சென்னை இந்து அறநிலையத்துறை ஆணையர் திரு. பி. வி. நடராஜ செங்குந்தர் பி. ஏ., பி.எல். அவர்கள் 1929 வரையில் இரண்டு ஆண்டு காலம் இரண்டாவது தலைவராகப் பிரஞ்ச் இந்திய முதல்மந்திரி பாண்டிச்சேரி திரு. ஏ. வி. முத்தைய செங்குந்தர் பி.ஏ., பி.எல். அவர்கள் 1936ஆம் ஆண்டுவரையில் ஏழு ஆண்டுகளும், மூன்றாவது தலைவராகத் திருவாரூர் நகராண்மைக் கழகத்துணைத் தலைவர் திரு. தி. நா. சபாபதி செங்குந்தர் அவர்கள் 1953ஆம் ஆண்டு வரையில் பதினேழு ஆண்டுகளும், நான்காவது தலைவராக மதராஸ் பளையகாட் கம்பனி இயக்குனர் மஞ்சக்கொல்லை திரு. இராம. ச. சம்பந்தமூர்த்தி செங்குந்தர் அவர்கள் 1955 வரையில் இரண்டாண்டுகளும், ஐந்தாவது தலைவராகக் குடியேற்றம் திருமகள் நூற்பு ஆலை மேலாண்மை இயக்குனர் திரு. கா. அ சண்முக செங்குந்தர் அவர்கள் 1976ஆம் ஆண்டு வரையில் இருபத்தோரு ஆண்டுகளும், ஆறாவது தலைவராகச் சென்னிமலை கைத்தறிக் காவலர் பத்மஸ்ரீ எம். பி. நாச்சிமுத்து செங்குந்தர் பி.ஏ., பி.எல். அவர்கள் 1987 வரையில் பதினோரு ஆண்டுகளும் இன்றைய நெசவாளர் நேசன் ஈரோடு திரு. ஜெ. சுத்தானந்த செங்குந்தர் பி.எஸ்.சி. அவர்கள் 1987 முதல் சிறந்த முறையில் தென்னிந்தியாவில் அவர்கள் செல்லாத ஊர்கள் இல்லை என்று சொல்லக்கூடிய அளவில் எழுச்சியுடன் பணியாற்றி வருகிறார்கள்.

## பொதுச் செயலாளர்கள்

தொடக்கத்தில் திருவாரூர் திரு. டி. என். சபாபதி செங்குந்தர் அவர்களும் காஞ்சிபுரம் திரு. ம. சண்முகசுந்தர செங்குந்தர் எம்.ஏ., எல்.டி. அவர்களும் காஞ்சி மணிமொழியார் (திரு. பி. செ. மாணிக்கவாசக செங்குந்தர்) அவர்களும், திருவாரூர் திரு. டி. எஸ். எம். முருகையய செங்குந்தர் அவர்களும் கூறைநாடு திரு. வி. ரெத்தின செங்குந்தர் பி.ஏ., பி.எல். அவர்களும் சென்னை சைதாப்பேட்டை திரு. டி. வி. அருணாசல செங்குந்தர் அவர்களும் சென்னை திரு. கே. பி. பசுபதி செங்குந்தர் அவர்களும், ஈரோடு திரு. எஸ். மீனாட்சி சுந்தரசெங்குந்தர் பி.ஏ., எல்.டி. அவர்களும் ஈரோடு திரு. எம். பி. நாச்சிமுத்து செங்குந்தர் பி. ஏ., பி. எல். அவர்களும், மஞ்சக்கொல்லை திரு. ஆர். பிச்சை செங்குந்தர் பி. ஏ., பி. எல் அவர்களும் திருமலைராயன்பட்டினம் திரு. தி. சே. பழநிவேல் செங்குந்தர் அவர்களும் திருவாரூர் திரு. தெ. சேதுராம செங்குந்தர் அவர்களும் செயலாற்றியதைத் தொடர்ந்து 1980ஆம் ஆண்டு முதல் இன்றைய பொதுச்செயலாளர் அயராது பணியாற்றும் கர்ம வீரர் டாக்டர். திரு. தி. ரா. செல்வராசன் எம்.ஏ., எம்.லிட்., பி.எச் டி. அவர்கள் பணியாற்றி வருகிறார்கள்.

## சிறப்பு மிக்க தொண்டர்கள்

செங்குந்தமித்திரன் தொடக்கத்தில் அதிக எண்ணிக்கையில் வெளிவந்தது பிரச்சாரகர்கள் என்ற தகுதியில் திருவாளர்கள் சென்னை தி. அ. சண்முக செங்குந்தர் கல்யாணம் பூண்டி ச. நா. குமரகுரு செங்குந்தர், தேவக்கோட்டை பாலசுப்பிரமணிய செங்குந்தர் மற்றும் கூறைநாடு ச. கு. பா. பழநிவேல் செங்குந்தர் ஆகிய நால்வரும் தமிழ்நாடு முழுவதும் சுற்றுப்பயணம் செய்து, பட்டி தொட்டிகளில் எல்லாம் உறவினர்களைச் சந்தித்து சமூகப் பிரச்சாரமும் செங்குந்தமித்திரன் சந்தா வசூலும் செய்து வந்தனர். இவர்களைத் தவிர நாங்கூர் குலமணி அ. சொக்கலிங்க செங்குந்தர் அவர்களும், கருவிழுந்தநாதபுரம் அமிர்தலிங்க செங்குந்தர் அவர்களும் மித்திரன் சந்தாக்களையும், திருமணங்களில் அரை ரூபாய், ஒரு ரூபாய் நன்கொடை வசூலித்து அனுப்பி அவைகளைச் செங்குந்தமித்திரனில் கூட வெளியிட்டு வந்தார்கள்.

## மாநில மாநாடுகள்

தொடக்கத்தில் 1929ல் ஈரோட்டில் முதலாவது மாநாடும், இரண்டு ஆண்டுகளுக்குப் பின்னர் 1931ல் காஞ்சிபுரத்திலும், அதே ஆண்டில் 1931 ல் மயிலாப்பூரிலும், இரண்டு ஆண்டுகள் கழித்து 1933ல் தஞ்சை திருவாரூரிலும், இரண்டு ஆண்டுகள் கழித்து 1935ல் வடாற்காடு திருவத்திபுரத்திலும், அடுத்த ஆண்டு 1936ல் திருநெல்வேலி அம்பாசமுத்திரத்திலும், அடுத்த 1937 ஆம் ஆண்டில் மதுரையிலும், இரண்டு ஆண்டுகள் கழித்து 1939ல் திருச்சி திருவானைக்காவலிலும். அடுத்த ஆண்டு 1940ல் இராமநாதபுரம்

பரமக்குடியிலும், அடுத்து ஏழு ஆண்டுகள் இடைவெளிக்குப் பின் 1947ல் தென்னாற்காடு குறிஞ்சிப்பாடியிலும், அடுத்து ஒன்பது ஆண்டுகள் இடைவெளிக்குப் பின் 1956ல் சேலம் திருச்செங்கோட்டிலும், அடுத்து நான்காவது ஆண்டில் சித்தூர் திருத்தணியில் 1960ல் நடைபெற்றது. பின்னர் நீண்ட இடை வெளியாகிய பதினாறு ஆண்டுகளுக்கு பின் கோவை ஈரோட்டில் 1976லும் எட்டு ஆண்டுகள் கழித்துச் செங்கல்பட்டு காஞ்சிபுரத் திலும், தொடர்ந்து ஆறு ஆண்டுகளுக்கு பின் சென்னைப் பெருநகரில் 1990இலும் மாநாடுகள் நடைபெற்றன. ஆண்டு தோறும், மாநாடுகள் நடைபெற வேண்டும் என்ற பலர் கருத்துகளுக்கு இணங்க 1991ம் ஆண்டில் தஞ்சை கும்பகோணத்தில் 16 ஆவது மாநாடு நடைபெற்றது. இன்று வடாற்காடு அம்பேத்கார் மாவட்டம் சார்பில் 17 ஆவது மாநாடு குடியேற்றத்தில் சீரும் சிறப்புமாக நடைபெறுகின்றது. மாநாடுகள் நீண்ட இடை வெளிக்கிடையில் நடைபெற்றதாலும் தலைமைச் சங்கம் வளர்ச்சிப் பணிகளில் பல ஆண்டுகள் தீவிர முயற்சிகள் மேற்கொள்ளாத தாலும் சித்தூர் மாநாட்டிற்குப் பின்பு செங்குந்தமித்திரன் வளர்ச்சி குன்றிப் பல மாதங்கள் வெளிவராமல் இருந்தது. பின்னர் பத்மஸ்ரீ அவர்கள் பெரும் முயற்சியால் தொடர்ந்து மித்திரன் வளர்ச்சி பெற்று வரு கின்றது.

## சங்க அமைப்பு

மாவட்ட சங்கம் அனைத்து மாவட்டங் களிலும் தோற்றிவிக்கப்படாமலும் தமிழகம் முழுவதும் உள்ள நமது உறவினர்கள் செயற் குழுவில் பங்கேற்காமலும் இருந்த செயல்பாடு களைச் சீர்திருத்த பத்மஸ்ரீ அவர்களின் பெரும் முயற்சியால் பழைய சட்ட திட்டங்களை மாற்றி அமைக்க 18-07.1982ல் குழு ஒன்று அமைக்கப்பட்டது. 4.12. 83ல் கூறைநாட்டில் நடைபெற்ற தலைமைச்சங்க பொதுக்குழு சட்ட திட்டங்களைப் பரிசீலனை செய்து அங்கீகரித்தது. புதிய சட்டதிட்டங்களின்படி அடுத்து காஞ்சிபுரத்தில் நடைபெற்ற 15வது மாநில மாநாட்டில் ஜனநாயக முறைப்படி தலைவர் மற்றும் பொறுப்பாளர்கள் தேர்ந் தெடுக்கப்பட்டனர். அதன் பின்னர் மாநில சங்கம் எழுச்சியும் வளர்ச்சியும் ஏற்றமும், பெற்றது. தமிழகம் முழுவதும் அனைத்து மாவட்டங்களிலும் மாவட்ட சங்கங்கள் தோன்றின. சென்னையில் நடைபெற்ற செயற்குழுக் கூட்டங்கள் மாவட்டந் தோறும் மாவட்ட சங்கங்களின் ஆதரவில் கூட்டப்பட்டதால் கூட்டங்களுக்கு வருகை தரும் செயற்குழு உறுப்பினர்கள் எண்ணிக்கை யும் பார்வையாளர்கள் எண்ணிக்கையும் அதிகரித்தன. கூட்டங்கள் கூட்டப்படும் மாவட்டங்களில் சமூக எழுச்சியும் ஏற் பட்டுள்ளது.

தலைமைச் சங்கத்தில் ரூ.25 செலுத்தி ஆயுள் உறுப்பினர்களாகப் பதிவு செய்து கொண்டவர்கள் எண்ணிக்கை நமது மக்கள் தொகைக்கு ஏற்ப இல்லை என்பது வருந்தத் தக்கதாகும். நமது உறுப்பினர்கள் எண்ணிக்கையை அதிகப்படுத்தும் நோக்கத் துடன் 18 வயதிற்கு மேற்பட்ட ஆண், பெண் இருபாலரும் கிராமச்சங்கத்திலும் மாவட்ட சங்கத்திலும், மாநில சங்கத்திலும் உறுப் பினராக இருத்தல் வேண்டும் என்ற நோக்கத் தோடு அடிப்படை உறுப்பினர் என்ற தகுதி யுள்ளவர்களாக ரூ. 3 பெற்றுக் கொண்டு சேர்த்து அவர்களுக்கு மாநில சங்கத்திலிருந்து மாவட்ட சங்கத்தின் மூலமாகவும் கிராம கிளைச்சங்களின் வழியாகவும் அடிப்படை உறுப்பினர் அத்தாட்சி அட்டைகளை வழங்கி வருகின்றது. இன்னும் பல்வேறு மாவட்டங் களில் தங்கள் மக்கள் தொகைக்கு ஏற்ப அடிப் படை உறுப்பினர்கள் சேர்க்கப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கதாகும். நம் முயற்சி வெற்றி பெறப்பல லட்சக்கணக்கில் அடிப்படை உறுப்பினர் எண்ணிக்கை சேர்ப்பதற்கு அனைத்துக் கிளைச்சங்கங்களும் மாவட்ட சங்கங்களும் பொறுப்பு ஏற்க வேண்டு மென்பது முக்கியமாகும்.

## தலைமச் சங்கக் கட்டடம்

சென்னை அரண்மனைக்காரத்தெரு 89 கதவு இலக்கம் உள்ள மாளிகையை 15-9- 1938 ல் கிரையத்திற்கு வாங்கி அதற்குச் செங்குந்தர் மாளிகை என பெயர் சூட்டி 15-9-1939 ல் திறப்பு விழா நடைபெற்றுள்ளது. அதில் நமது தலைமைச்சங்க அலுவலகம் இயங்கி வருவதுடன் சென்னைக்கு வருகை தரும் நமது உறவினர்கள் அம்மாளிகையில் தங்கிச் செல்வது மரபில் உள்ளது. அக்கட்டிடம் மிகவும் பழமையானது ஆகும். பல்வேறு இடங் களில் பழுது ஏற்பட்டுள்ளதைச் செங்குந்தர்கள் அனைவரும் மனதிற்கொண்டு ஆவன செய்ய வேண்டியது முதன்மைப் பணி யாகும்.

## வள்ளல் சபாபதி வளாகம்

இன்று சேத்துப்பட்டு ஆரிங்டன் சாலை யில்நமக்குச் சொந்தமாக உள்ளபத்தொன்பது சிரவுண்டும் 1215 சதுர அடியும் உள்ள இடத்தை 1960ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 23 ஆம் நாள் ரூ.35 ஆயிரத்திற்கு கிரையம் வாங்கியிருக்கிறோம். இந்த இடம் திராவிட முன்னேற்றக் கழகத்தாருக்குச் சொந்தமாக இருந்தது; அன்று திராவிட முன்னேற்ற கழகத்தில் முக்கிய பொறுப் பேற்றிருந்த நமது காஞ்சி மணிமொழியார் (அமரர் பி.செ. மாணிக்கவாசக செங்குந்தர்

அவர்கள் அறிஞர் அண்ணா அவர்கள் உறு துணையுடன் நமக்குக் கிரையத்திற்கு வாங்கிக் கொடுத்தார்கள் என்பது பாராட்டத் தக்க தாகும். அன்றைய நிலையில் இந்த இடத்தை வாஙகுவதற்குப் போதிய பணம் நமது சங்கத் தில் இல்லை.

மாணவர்களுக்கு உபகாரச் சம்பளம் கொடுக்கும் பொருட்டு கல்விநிதி என்ற பெயரில மதராஸ் பளையகாட் கம்பெனியா ரிடம்வட்டிப் பொறுப்பில் இருந்த சுமார் இருபது ஆயிரம் ரூபாயுடன் வணக்கத்திற் குரிய தொண்டர்கள் சென்னை தி.அ. சணமுக செங்குந்தர் மா. அ. கனகசபை செங்குந்தர் முதலியவர்கள் தமிழ்நாடு முழுவதும் சுற்றுப்பயணம் செய்து செங்குநதர் பெருமககளிடம் சிறு சிறு தொகையாக வசூலித்த நன்கொடை தொகையும் சேர்த்துக் கொள்ளப்பட்டது என்பது குறிப் பிடத்தக்கதாகும். நமது சங்கத்தின் மூன்றாவது தலைவராகிய திருவாரூர் தி. நா, சபாபதி செங்குந்தர் அவர்களின் நினைவாக மாணவர்கள் இல்லம் கட்டவேண்டும் என்றும் அதற்கு வள்ளல் சபாபதி மாணவர் இல்லம் என்று பெயரிட்டு அவரது நினைவு என்றும் நிலைக்கச் செய்ய வேண்டும் என்றும் அன்றைய தலைவர் திருப்பதூர் அமரர் கா. அ,சண்முக செங்குந்தர் அவர்கள் தலை மையில் தீர்மானிக்கப்பட்டுக் கட்டட நிதி வசூலிக்கப்பட்டது. ரயில் பாதைக்கு அண்மை யில் இருந்ததாய் அதிக ஆழத்துடன அகலமாக அஸ்திவாரம் இட்டு 1966 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 7 ஆம் நாள் திருப்பத்தூர் அமரர் கா. அ. சண்முக செங்குநதர் அவர் களால் அடிக்கல் நாட்டப்பட்டு கட்டத் தொடங்கினார்கள். ஏதோ காரணங்களால் கட்டடம் முற்றுப் பெறாமல் அரைகுறை யாகப் பார்பபதற்குப் பரிதாபப்படும் வகை யில் இருந்தது. காஞ்சிபுரம் மாநாட்டிற்குப் பின்னர் மீண்டும் நன்கொடைகள் பெறப் பெற்று கிழ்ப்புறத்தில் உள்ள அறைகள் நிறைவு பெற்றன. ஆனால் மாணவர்கள் யாரும் தங்க வில்லை. சென்னையில் சிறிய தொழில்களும் உத்தியோகங்களும் பார்க்க வந்த நம் குல இளைஞர்கள் சிலர் தங்கியிருந்தனர்.

இந்நிலையில் பல்வேறு கருத்துக்கள் இருந்த போதிலும் அன்று தமிழகத்தில் அமைப்பில் இருந்த 13 மாவட்டங்களில் ஒன்பது மாவட்டங்கள் விற்பனை செய்யக் கூடாது என்றும் இரண்டு மாவட்டங்கள் நடு நிலைமையிலும் இரண்டு மாவட்டங்கள் மட்டுமே விறபனை செய்ய வேண்டும் என்ற தீர்மானங்களை தங்கள் தங்கள் மாவட்டச் சங்கங்களில் செயற்குழுவில் தீர்மானித்து அனுப்பியிருந்தார்கள்.

அதன்படி வள்ளல் சபாபதி வளாகத்தை விற்பனை செய்வது இல்லை என்றும் கட்ட டத்தை மேலும் சீர்செய்து வள்ளல் சபாபதி நினைவாகப் பள்ளிக்கூடம் தொடங்குவது என்றும் பத்மஸ்ரீ அவர்கள் தலைமையில் தீர்மானிக்கப்பட்டது. வள்ளல் சபாபதி ஆங்கிலப் பள்ளியைச் சென்னைப் பல்கலைக் கழக முன்னாள் பதிவாளர் திரு. சி. கே. குமாரசாமி செங்குந்தர் எம். ஏ அவர்களைக் கௌரவத் தாளாளராக நியமனம் செய்து 1985 ஜூலை 7ஆம் நாள் தொடங்கிய பள்ளி இன்று வள்ளல் சபாபதி மெட்ரிக்குலேஷன் பள்ளியாகச் சிறப்புடன் நடைபெற்று வரு கின்றது. அப்பள்ளியை நமது தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம் தனது பொறுப்பில் நிர்வகித்து வருகின்றது. இன்று மேலபுறம் உள்ள அறைகள் கட்டப்பட்டு மேல் மாடியும் மற்றும் பல இடங்களையும் சீர் செய்து பள்ளி யின உபயோகத்திற்குப் பயன்படுத்தப்படு கின்றது. திரு. சி. கே. குமாரசாமி அவர்கள் பணி போற்றுதலும் உடையது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

## நமது எழுச்சி :

நாம் கடந்த 67 ஆண்டுகளாகச் சமுதாயச் சங்கத்தைக் கட்டுப்பாட்டுடன் அமைதியாக நடத்தி வருகிறோம். நமக்குள்ள சமுதாயக் குறைபாடுகளையும், நெசவாளர்குரிய துயர் களையும் அகற்றிக் கொள்ள அரசுடன் அன்பான முறையில் வேண்டிக் கேட்டுப் பெற்று வருகிறோம். ஆனால் 95 சதவிகிதம் ஏழை நெசவாளர்களைக் கொண்ட நமது சாதியை மிகவும் பிற்படுத்தப்பட்டோர் சாதி யினர் பட்டியலில் சேர்கக வேண்டும் என்று அரசுக்குத் தெரிவிககச் சென்ற 3-12-1988ல் சென்னையில் ஒரு சிறப்புப் பேரணியும் பின்னர் 5-11-1990ல் மாநிலம் தழுவிய உண்ணா விரதப் போராட்டமும் இன்றைய தலைவர் நெசவாளர் நேசன் திரு. ஜெ. சுத்தானந்த செங்குந்தர் அவர்கள் அயராது ஆற்றும் பணி யினால் நடைபெற்றன என்பதை மகிழ்ச்சி யுடன் தெரித்துக் கொள்கிறோம்.

## எதிர்காலம் ஏற்றம் பெற ஏழாவது தலைவரின் எழில்மிகு இளைஞர் பயிற்சிப் பாசறை :

நம் இனத் தலைவர் செயலாற்றும் பல் வேறு திட்டங்களில் எதிர்காலம் ஏற்றம் பெற ஏற்பாடு செய்த எழுச்சி மிகு திட்டமே இளைஞர் பயிற்சியாகும்.

கடந்த 1991 டிசம்பர் 14, 15 சனி ஞாயிறு கிழமைகளில் பெரியார் மாவட்டம் புதுக்கல் புதூரில் திரு. பி. ஏ. சிவக்கொழுந்து செங்கு தரின் எழில்மிகு பண்ணையில முதலாவ

பயிற்சிப் பாசறை நடைபெற்றது 45 இளைஞர்கள் தென்னகத்தின் பல்வேறு மாவட்டங்களிலிருந்தும் கலந்து கொண்டனர். அவர்களுக்கு நமது சங்கத்தின் தொடக்கமும் நோக்கமும் அதை நிர்வாகம் செய்யத் தேவையான கருத்துக்களும் நமது தலைவர்களால் எடுத்துரைக்கப்பட்டன. இளைஞர்கள் ஆர்வத்துடன் சங்கத்தை நடத்திச் செல்ல ஊக்கம் பெற்றனர்.

மீண்டும் அடுத்து 7 மாதங்கள் கழித்து 1992 ஜூலை 18, 19 சனி, ஞாயிறு கிழமைகளில் இயற்கை எழில்மிகு தாமிரபரணியில் கரையில் அழகு மிக்க சோலைகளின் நடுவில் நெல்லை கட்டபொம்மன் மற்றும் சிதம்பரனார் மாவட்டச் செங்குந்த மகாஜன சங்கத்தாரின் நல்லாதரவில் நடைபெற்ற இரண்டாவது பாசறையில் தென்னகம் முழுவதிலிருந்தும் 160 இளைஞர்கள் பங்கேற்றனர். ஊக்கமும் உற்சாகமும் பெற்று முதிர்ந்த ஆலமரத்தைத் தாங்கும் விழுதுகளாய் நமது வயது முதிர்ந்த சங்கத்திற்கு உற்ற தொண்டர்களாய்ப் புத்துணர்வு பெற்று இல்லம் ஏகினர்.

இரண்டு இளைஞர்கள் முகாம்களையும் டாக்டர் திரு. க. சண்முக வேலாயுதம் அவர்கள் பொறுப்பேற்று இளைஞர்கட்குப் புத்துணர்ச்சியும் தொண்டு மனப்பான்மையும் பெறச் செய்தார்கள்.

இளைஞர் பயிற்சி முகாம் ஆண்டுக்கு இரு முறை நடந்தால் நல்ல பயனும் முன்னேற்றமும் காணலாம்.

**நிறைவு :**

1975ல் தலைமை ஏற்ற பத்மஸ்ரீ அவர்கள் ஆட்சியில் சங்கம் துளிர்விட்டுத் தழைக்கத் தொடங்கியது. இன்று தென்னிந்தியா முழுவதும் சுற்றுப் பயணம் செய்து உறவினர்களைக் கண்டு சமூக முன்னேற்றத்திற்கு ஆக்கப்பணி புரியும் தலைவர் நெசவாளர் நேசன் அவர்களும் தலைவருடன் இணைந்து செங்குந்தர்களின் முன்னேற்றமே தமது முதற் கடமையாகக் கொண்டுள்ள மாநிலப் பொதுச்செயலர் டாக்டர் தி. ரா. செல்வராசன் அவர்களும் ஆற்றும் இடைவிடாத உழைப்பினால் பூத்துக் குலுங்கிக் கனி தரும் நிலையில் உள்ளத்தைக் கண்டு நாம் மகிழ்ச்சி அடைகிறோம். செங்குந்தர்களின் வாழ்வு சிறக்கத் தலைவரின் கரங்களை வலுப்படுத்துவோம். வெல்க செங்குந்தம்!

## விரிஞ்சிபுரம்

சிவசுப்ரமணியர் செயுங்கிருபையாலே
விவரமாய்விளங்கும் விரிஞ்சிமாநாட்டி
லுளகிளைநாடெலா முண்மையாப்புகலவே
னஎிமுரன்சோலைசூ ழாமூர்நாடு
வாணியம்பாடி மாநாடதொன்று
நாணயக்கொறட்டை நல்லநாடொன்று
தருமபுரிநாடு வுளாவிலாதோங்கும்
நிருமலபவானி நீண்டநாடொன்று
வழுவிலாதாரா மங்கலநாடு
இழிவிலாநல்லதோ ரேழாநாடு
புகழாரை நாடு பூரதிரைநாடு
திகழ்கின் றநற்டிருச் செங்கோடுநாடு
வாழ்வுகொள்நல்ல வையாபுரிநாடு
தாழ்விலாதவநாசி தனிநாடதொன்று
நஞ்சுண்டவூர்நாடு நலமிகுந்தோங்குங்
கஞ்சமலர்த்தடக் காவல்பாளையநாடு
நத்தத்கருவூர் நாடொன்றுமேலும்
முத்தமநற்கரு கூர்காங்கேயநாடு
நறுமலர்ச்சோலைசூழ் நாமக்கல்நாடு
முறுதியாயிப்படி யுளபதினேழு
முறைத்தனன்மேல்நாட்டிலுறும்வளமெல்லாம்
கருத்தொடுமறிந்துகொள் கன்னிமீனீம்மா

# குமரிச் சங்க வரலாறு


வே. பழனியாண்டி செங்குந்தர்

முதலியார் புதுத்தெரு, கோட்டாறு
கன்னியாகுமரி மாவட்டம்.


பேரன்புடையீர்! வணக்கம்.

தமிழகத்தின் தென்கோடி குமரிமுனையில் அமைந்துள்ள சிறிய மாவட்டமாகிய கன்னியாகுமரி மாவட்டத்தில் நாகர்கோவில் நகரத்தில் கோட்டாறு, வடசேரி, கிருஷ்ணன் கோவில் ஆகிய மூன்று இடங்களில் மட்டுமே வாழும் நம் செங்குந்த குல மக்களின் மக்கள் தொகை ஏறத்தாழ இரண்டாயிரம் மட்டுமே ஆகும்.

தொன்று தொட்டே நம் குலத்தொழிலாகிய நெசவுத் தொழிலில் ஈடுபட்டிருந்தவர்கள் நாளடைவில் வணிகத் துறையில் ஈடுபட்டதால் வடசேரி, கிருஷ்ணன் கோவிலில் மட்டுமே ஒருசிலர் நெசவுத் தொழில் நடத்தி வருகிறார்கள். குலத்தொழிலைவிட்டு வணிகத்துறையில் சீரோடும் சிறப்போடும் வாழ்ந்து வரவே வியாபாரத்தில் ஏற்பட்ட பேரிழப்பால் பெரும்பாலானவர்கள் பொருளாதாரத்தில் பின் தங்கியவர்களான போதிலும் செல்வாக்கிழக்காமல் வாழ்ந்து வருகிறார்கள்.

மாற்றுத் தொழில்களில் வாழ்க்கையை அமைத்துக் கொண்ட காரணத்தால் கோட்டாறு பகுதியைத் தவிர, வடசேரி, கிருஷ்ணன் கோவில் செங்குந்த மக்கள் நெசவுத்தொழிலைக் கூட்டுறவு முறையில் நடத்தி வருகிறார்கள். குமரி மாவட்டத்தில் வாழும் செங்குந்தர்கள் தாம் வாழும் மூன்று இடங்களிலுமே சமுதாயத்தின் பெயரால் விநாயகர் கோவில், அம்மன்கோவில்கள் அமைத்து அதற்கென அறக்கட்டளைகள் நிறுவி ஆலய நிர்வாகங்களை நடத்தி வருகிறார்கள்.

மூன்று இடங்களிலும் நடந்து வரும் அறக்கட்டளைகளில் கோட்டாறு செங்குந்த சமுதாய அருள்மிகு சென்ற திசைவென்ற விநாயகர் சுவாமி சமுத்தாரம்மன் அறக்கட்டளை தொன்மை வாய்ந்ததும் நல்ல வருவாய் உள்ள அறக்கட்டளையாக அமைந்து, தனிச் சமுதாயத்தார் நடத்தும் அறக்கட்டளைகளில் சிறந்த ஒரு அறக்கட்டளையாக எல்லோரும் போற்றும் வண்ணம் வளர்ந்தோங்கி வருகிறது.

அறக்கட்டளை மூலமே பொதுநலன்களைத் தேடி வந்த குமரி மாவட்டம் சமுதாய முன்னேற்றத்திற்குத் தமிழகத்தில் வாழும் செங்குந்தர்களோடு இணைந்து பாடுபட்டுச் சமுதாய முன்னேற்றம் காண விரும்பிப் பல ஆண்டு விரும்பிப் பல ஆண்டுகளுக்கு முன்னரே கோட்டாறு கிளைச்சங்கத்தை ஆரம்பித்து, பதிவு செய்து, சங்க வருவாயைப் பெருக்க "செங்குந்தர் திருமண்டபம்" என ஒரு மண்டபத்தையும் எழுப்பி, மண்டப வேலைகள் பூர்த்தியாகாத நிலையிலும் ஓரளவு வருவாய் பெறத்தக்க நிலை ஏற்பட்டுள்ளது.

வடசேரி, கிருஷ்ணன் கோவிலிலும் கிளைச் சங்கங்கள் நிறுவி குமரி மாவட்ட செங்குந்த மக்களின் நிலை உயர்ந்து முன்னேற்றமடைவதற்கான முயற்சிகள் நடந்து கொண்டிருக்கின்றன.

கோட்டாறு கிளையைத் தவிர மற்ற இரு இடங்களிலுமே கிளைச சங்கங்கள் ஆரம்பித்துச் செயல்படாத நிலையிலும் தலைமைக் கழக ஆணைக்கிணங்க உண்ணவிரதப் போராட்டம் நடத்தியும் செங்குந்தர் குல மாநாடுகளில் குமரி மாவட்டச் சார்பிலும் பெருவாரியாக மக்கள் கலந்து கொள்ளச் செய்தும், இளைஞர் அணி அமைத்துச் சமுதாய முன்னேற்றத்திற்காகப் பாடுபடச் செய்தும் தொண்டாற்றி வருகிறது.

சமுதாய முன்னேற்றத்திற்காக நம் குலப் பெரியார்கள் மாநிலத் தலைவர் நெசவாளர் மேதகு ஜெ. சுத்தானந்தன் B. Sc. அவர்களும் பொதுச் செயலாளர் டாக்டர் தி. ரா. செல்வராசன M.A.M. Lit.Phd. அவர்களும் நம் குலப் பெரியார்கள் பலரும் அல்லும் பகலும் அயராது உழைக்கும் இத்தருணத்தில் ஒவ்வொரு மாவட்டத்தில் வாழும் நம் குலத்தவர் அனைவரும் ஒன்று திரண்டு ஒத்துழைப்பு நல்கிப் பெரியோர்களின் கரத்தை வலுப்படுத்த வேண்டியது அனைத்து மாவட்ட மக்களின் தலையாய கடமையாகும். அவ்வித ஒரு எழுச்சி ஏற்படுமாயின் தலைவர்கள் விரும்புகிற மிகவும் பின்தங்கிய மக்கள் பட்டியலில் நமது குலமும் சேர்க்கப்பட்டு அரசாங்கச் சலுகைகள் பெற்று நமது குலமும் மேன்மையடையும் என்பது திண்ணம்.

அத்தகைய ஓர் பொற்காலம் அமையக் கிளைச் சங்கங்கள் பல உருவாகிட எடுக்கும் முயற்சிகள் நாம் வழிபடும் குலதெய்வமாகிய முருகப்பெருமானின் திருவருளால் வெற்றி பெற்று நல்ல பல திட்டங்கள் நிறைவேற்றிச் சமுதாய முன்னேற்றம் காண்போமாக.

மதுரை மாவட்டச் செங்குந்தர் மகாசன சங்கத்

# தோற்றமும், செயல்பாடுகளும்

## எம். மாணிக்கம் Ex. M.C.

செயலாளர்

மதுரை டவுன் செல்லூர், திருவாப்புடையார் கோவில், கோரிப்பாளையம், தல்லாகுளம், மதிச்சியம், முதலியார் காலனி, குயவர் பாளையம் ஆகிய பகுதிகளிலும் மற்றும் மதுரை டவுனைச் சுற்றியுள்ள 18 ஊர்களிலும் சுமார் 40,000 செங்குந்தர்கள் வசித்து வருகிறார்கள்.

பெரும்பாலான செங்குந்தர்கள் கைத்தறி நெசவாளர்கள். மிகச் சிலர் விவசாயிகள். ஒரு சிலர் கைத்தறி ஜவுளி உற்பத்தியாளர்கள். பொதுவாக மதுரை மாவட்டம் பொருளாதாரத்தில் மிகப் பின் தங்கிய மாவட்டம்.

கிளைச் சங்கங்கள், மாவட்ட சங்கம் என்று முறையான அமைப்புகள் இல்லாத காலத்தில், 1937ம் ஆண்டு ஜனவரி திங்களில் மதுரையில் மாநில மாநாடு மிகச் சிறப்பாக நடைபெற்றிருக்கிறது.

மதுரை மாவட்டச் செங்குந்தர் மகாசன சங்கம் 13-10-74ல் துவக்கப்பட்டது.

மாவட்டச்சங்கத்திற்குச் சட்ட திட்டங்கள் வகுக்கப்பட்டு 19-12-75ல் சங்கம் பதிவு செய்யப்பட்டது. பதிவு எண். 105 : 75

மாவட்டச் சங்கத்திற்கு ஆண்டு, ஆயுள் உறுப்பினர்கள் சேர்த்து, பொதுக்குழு செயற்குழு உறுப்பினர்களைத் தேர்ந்தெடுத்து, செயற்குழு உறுப்பினர்களில் தலைவர், துணைத் தலைவர்கள், செயலாளர்கள், பொருளாளர் ஆகிய நிர்வாகஸ்தர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு, மாவட்ட சங்கம் சமுதாய மேம்பாட்டிற்காகச் செயல்பட்டு வருகிறது.

மாவட்ட சங்கம் ஆரம்பிக்கும் காலத்தில், தற்சமயம் உள்ள திண்டுக்கல் அண்ணா மாவட்டம், மதுரை மாவட்டத்தில் இணைந்து இருந்தது.

15.9.85ல் திண்டுக்கல் — அண்ணா மாவட்டம் துவங்கப்பட்டது. 16.11.86ல் திண்டுக்கல் செங்குந்தர் மகாசன சங்கம் துவக்கப்பட்டு சிறந்த முறையில் செயல்பட்டு வருகிறது.

செங்குந்தர்கள் வாழும் எல்லாப் பகுதிகளுக்கும் சென்று அவர்களுடன் கலந்து உரையாடியும், கூட்டங்கள் நடத்தியும் 'இன உணர்வு' ஏற்படச் செய்திருக்கிறோம்.

மாநிலப் பொதுச்செயலாளர் திரு. டாக்டர் தி. ரா. செல்வராசன் அவர்கள் பல கூட்டங்களில் கலந்து கொண்டு சிறப்புரை ஆற்றியிருக்கிறார்கள்.

மதுரை மாவட்டத்தில் பரவலாகப் பல ஊர்களில் வாழும் செங்குந்தர்கள் ஒருவரையொருவர் தெரிந்து கொள்ளும் வாய்ப்பையும், ஒருவருக்கொருவர் முடிந்த அளவில் உதவியாக இருந்து வரும் அமைப்பினையும், ஒற்றுமைத் திருமணங்கள் நடைபெறவும், பல துறைகளில் அரசு பதவிகளில் நம்மவர்கள் இருப்பதை அறிந்து கொள்ளும் வாய்ப்பையும் மாவட்ட சங்கம் ஏற்படுத்தித் தந்து சமுதாய வளர்ச்சிக்குப் பெரிதும் உதவியிருக்கிறது.

கல்வி, தொழில் நிறுவனங்களில் சேர்ப்பதற்கு, ஜாதிச் சான்றிதழ்கள் வருவாய்த் துறையினரிடம் பெற, மாவட்ட சங்கம் உதவியிருக்கிறது.

வேலை வாய்ப்பு, இடமாற்றம், கலைக் கல்லூரி, தொழில் கல்லூரிகளில் இடம் கிடைக்க, பிற்படுத்தப்பட்டோருக்கு மாநில அரசு தரும் அனைத்துச் சலுகைகளையும் பெற, சமுதாய மாணவர்கள் தலைமைச் சங்கம் தரும் ஊக்கப் பரிசுகள், கல்வி உதவித் தொகை பெற மாவட்ட சங்கம் சமுதாய மக்களுக்கு உதவி வருகிறது. மாவட்ட மாணவ மாணவியருக்கு ஊக்கப்பரிசுகள் வழங்கி வருகிறது.

மாவட்டச் சங்கத்தின் உதவியால் வழக்குகளில் வெற்றியடைந்தவர்கள், மாவட்ட

சங்கத்தின் ஆலோசனைகள், அறிவுரைகள் கேட்டு பல சிக்கலான, சிரமமான பிரச்சினைகள், விவகாரங்களில் சுமுகமான தீர்வுகள், சமரசங்கள் கண்டவர்கள் பலர்.

கிளைச் சங்கங்களின் வளர்ச்சி நிதிக்காக அவர்கள் நடத்திய நிகழ்ச்சிகளுக்கு மாவட்ட சங்கம் மிகுந்த ஒத்துழைப்பு தந்திருக்கிறது.

கைத்தறி துணிகளுக்கு ஆதரவு தரக்கோரி விளம்பரம் செய்திருக்கிறோம்.

கைத்தறி நெசவாளர்களின் பிரச்சினைகளை நிரந்தரமாகத் தீர்ப்பதற்கு, மத்திய, மாநில அரசுகள் தக்க நடவடிக்கைகள் எடுக்கும்படிக் கேட்டுக் கொண்டு தீர்மானங்கள் நிறைவேற்றி சம்மந்தப்பட்டவர்களுக்கு அனுப்பியிருக்கிறோம்.

முதன் முதலாக மாவட்ட அளவில், மதுரை மாவட்ட சங்கம் மதுரையில் 15-6-80ல் மாவட்ட மாநாடு சிறப்பாக நடத்தி மதுரை மாவட்ட செங்குந்தர்களிடையே எழுச்சியும், விழிப்புணர்வும் ஏற்படச் செய்திருக்கிறோம்.

மாநாட்டை மறைந்த தலைவர், கைத்தறிக் காவலர் திரு. எம். பி. நாச்சிமுத்து அவர்கள் துவக்கி வைத்தார்கள். கோயம்புத்தூர் திரு. வி. வி. சி. ஆர். கந்தசாமி அவர்கள் சமுதாயக் கொடியை ஏற்றி வைத்தார்கள். பல மாவட்டங்களிலிருந்து சமுதாயப் பெரியோர்கள் மாநாட்டில் கலந்து கொண்டு சிறப்புரையாற்றினார்கள்.

மலர் ஒன்று வெளியிட்டோம். மலரை மாநிலத் தலைவர் நெசவாளர் நேசன் திரு. ஜெ. சுத்தானந்தம் அவர்கள் வெளியிட மாவட்ட சங்கத்தின் புரவலர் திரு. மா. கன்னையா அவர்கள் பெற்றுக் கொண்டார்கள்

மாநாடு சிறப்புற நடைபெற தஞ்சை மாவட்ட சங்கத்தின் பொதுச் செயலரும், தலைமைச் சங்கத்தின் துணைத்தலைவருமாகிய திரு. ச. கு. பா. பழனிவேலு அவர்கள் எங்களுக்கு உறுதுணையாக இருந்தார்கள்.

திரு. அம்பாசங்கர் தலைமையில் 2வது பிற்படுத்தப்பட்டோர் நலக்குழு 19-9-83, 20-9-83 தேதிகளில் மதுரை வந்திருந்த போது மாவட்டத் தலைவரும், மற்ற நிர்வாகஸ்தர்களும் குழுவிடம் ஒரு அறிக்கை சமர்ப்பித்து செங்குந்தர்களை மிகவும் பிற்படுத்தப்பட்டோர் பட்டியலில் சேர்க்க வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்தி விளக்கினோம்.

1981ம் ஆண்டு டிசம்பர் 12, 13 நாட்களில் சேலத்தில் நடைபெற்ற பொன் விழாவிற்கு மதுரை மாவட்டத்தில் ரூ. 10,000. நன்கொடை வசூல் செய்து கொடுத்தோம். வசூலில் மதுரை மாவட்டம், மாநில அளவில் 3வது இடம்.

சென்னை சேத்துப்பட்டில் நடைபெற்று வரும் வள்ளல் சபாபதி மெட்ரிகுலேஷன் ஆங்கிலப் பள்ளியின் வளர்ச்சி நிதிக்காக தலைமைச் சங்கம் நடத்திய பரிசு சீட்டு விற்பனையில், மதுரை மாவட்டம் ரூ. 10000 பரிசு சீட்டுகள் விற்பனை செய்து வழங்கியது.

3-12-88ந் தேதி சென்னையில் நடைபெற்ற மாபெரும் பேரணி, சிறப்பு மாநாடு நிகழ்ச்சிகளுக்கு மாவட்ட சங்கம் ரூ. 2,000. நன்கொடை அளித்தது.

5-11-90ல் மதுரையில் செங்குந்தர்களை மிகவும் பிற்படுத்தப்பட்டோர் பட்டியலில் சேர்க்கத் தமிழக அரசை வற்புறுத்தவும் மண்டல் குழுவின் பரிந்துரைகளை முழுமையாக அமல்படுத்த மத்திய அரசை வற்புறுத்தவும் உண்ணாவிரதப் போராட்டம் நடந்தது.

பேரணி, உண்ணாவிரதம், சென்னை கும்பகோணம் ஆகிய இடங்களில் நடைபெற்ற மாநில மாநாடுகள் ஆகிய நிகழ்ச்சிகளுக்கு சுவரொட்டிகள், நோட்டீஸ்கள், பிரச்சாரம் மூலம் விளம்பரம் செய்து, மதுரை மாவட்டத்திலிருந்து செங்குந்தர்கள் பெருமளவில் கலந்து கொண்டு நிகழ்ச்சிகளைச் சிறப்படையச் செய்தார்கள்.

28-5-89, 1-6-91 ஆகிய இரு தேதிகளில் மாநில செயற்குழு கூட்டம் மாவட்ட சங்கத்தின் ஆதரவிலும் விருந்தோம்பலிலும் சிறப்பாக நடைபெற்றன.

மாவட்டச் சங்கத்தின் சார்பில் 4-10.92ல் முப்பெரும் விழா நடைபெற்றது. அதில் மாநிலத் தலைவருக்குப் பிறந்த நாள் பரிசாக வழக்கப்பட்ட வெள்ளி முலாம் பூசிய கலைமான் சிலையை ஏலத்திற்கு விட்டு, ஏலத் தொகை ரூ. 1501யைப் பாவேந்தர் பாரதிதாசன் அறக்கட்டளைக்கு வழங்கப்பட்டது. திருப்பூர் திரு. ராஜாமணி வெங்கட்ராமன் அவர்கள் சிலையை ஏலம் எடுத்து அதை மாதர் அணித் தலைவி திருமதி. சந்திராவிற்கு அன்பளிப்பாகத் தந்து விட்டார்கள்.

இந்தப் புதினம் மற்ற மாவட்டங்களுக்கு ஒரு வழிகாட்டியாக அமைய வேண்டும் என விரும்புகிறோம்.

மாதர் அணி அமைப்பு திருமதி. சந்திரா தலைமையில் ஏற்படுத்தப்பட்டு, மாதர் அணி

...யினர் மாவட்டச் சங்கத்துடன் இணைந்து சிறப்பாகச் செயல்பட்டு வருகிறார்கள்.

1989, 1991ல் சென்னையில் தலைமைச் சங்கத்தின் சார்பில் சட்டமன்ற செங்குந்தர் உறுப்பினர்களுக்கு நடைபெற்ற பாராட்டு விழாவில் மாவட்டச் சங்கத்தின் சார்பில் வாழ்த்துக்கள் தெரிவித்து, கைத்தறி ஆடைகள் அணிவிக்கப்பட்டன.

மாவட்ட சங்கத்தின் முழு ஆதரவோடும், ஒத்துழைப்புடனும் மதுரையிலிருந்து நண்பர் திரு. ப. சொக்கநாதன் 'செங்குந்தமணி' என்ற சமுதாய மாதஇதழ் நடத்தி வருகிறார். அந்த இதழுக்கு மாநில அளவில் நல்ல வரவேற்பு இருக்கிறது.

மதுரை மாவட்ட இளைஞர் அணி அமைப்பாளராகத் திரு. மணிசோமசுந்தரம் தேர்ந்தெடுக்கப்பட்டு, எல்லாப் பகுதிகளுக்கும் அமைப்பாளர்கள் நியமனம் செய்து, மாவட்ட சங்கத்தின் செயல்பாடுகளுக்கு இளைஞர் அணியினர் உறுதுணையாக இருந்து வருகிறார்கள்.

மதுரை மாவட்ட சங்கத்தின் வேண்டுகோளை ஏற்று, மாநிலத் தலைவர் அவர்கள், 2.2.92ல் சென்னையில் நடைபெற்ற மாநில செயற்குழு கூட்டத்தில், தென்பாண்டி மண்டலத்தில் செங்குந்த சமுதாய இயக்கச் செயல்பாட்டை ஊக்கப் படுத்துவதற்காக, மாவட்ட சங்கச் செயலாளர் திரு. எம். மாணிக்கம் Ex. M. C. அவர்களை மாநிலச் சங்க அமைப்புச் செயலாளராக நியமனம் செய்தார்கள்.

அதன் பிறகு தென் பாண்டி மண்டலத்தில் பரவலாகப் பல ஊர்களில் கூட்டங்களுக்கு ஏற்பாடு செய்து மாநிலத் தலைவர் அவர்கள் நிறைய நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டு, சமுதாயப் பணியில் தொய்வு ஏற்பட்டிருந்த தென் மாவட்டங்களில் புதிய உற்சாகத்தையும் உத்வேகத்தையும் கண்டு மிகவும் பெருமிதம் அடைந்தார்கள்.

1992ம் ஆண்டு ஜுலைத் திங்கள் 28, 29 தேதிகளில் நெல்லை மாவட்டம் பாபநாசத்தில் நடைபெற்ற 2வது இளைஞர் பயிற்சி முகாமில் கலந்து கொண்ட 2100 இளைஞர்களுக்கு மதுரை மாவட்டம், அண்ணா மாவட்டம், பசும்பொன் தேவர் மாவட்டம், ஆகியவைகளின் சார்பில் கைப்பைகள் அன்பளிப்பாக வழங்கப்பட்டன.

மாவட்ட சங்கத்தின் தலைவர் திரு. சி. காந்திதாஸ்., எம்.ஏ.பி.எல் அவர்கள் 1984 முதல் மாநிலச் சங்கத்தின் துணைத் தலைவராக இருந்து வருகிறார்.

உ.—2

மாவட்டச் சங்கத்தின் புரவலர் திரு. மா. கன்னய்யா அவர்கள் செல்லூரில் கன்னைய்யா—முத்தம்மாள் என்ற பெயரில் ஒரு திருமண மண்டபம் கட்டி 18-11-86ல் திறப்பு விழா நடைபெற்றது.

மாவட்ட நிகழ்ச்சிகளுக்குத் திருமண மண்டபத்தை இலவசமாகத் தந்து உதவி வருவதுடன், மாவட்ட சங்கத்தின் வளர்ச்சிக்கு எல்லா வகையிலும் புரவலர் அவர்கள் உதவியாக இருந்து வருகிறார்கள்.

செங்குந்தர் சமுதாயம் கல்வி, பொருளாதாரம், சமுதாயம், அரசியல் ஆகிய எல்லாத் துறைகளிலும் மேம்பாடு அடைய முடிந்த அளவு செயல்பட்டு வருகிறோம்.

மாவட்டச் சங்க வளர்ச்சிக்கு ஆரம்பம் முதல் ஒத்துழைப்பு தந்து உதவியாக இருக்கும் அனைவருக்கும் நன்றி கூறக் கடமைப்பட்டிருக்கிறோம்.

## தற்பொழுது உள்ள நிர்வாகஸ்தர்கள் :

**புரவலர்கள் :**

1. திரு. மா. கன்னையா
2. திரு எ. சடையாண்டி

**தலைவர் :**

திரு. சி. காந்திதாஸ், எம்.ஏ.பி.எல்.,

**துணைத் தலைவர்கள் :**

1. திரு. கு. அழகு
2. திரு. மணி. சோமசுந்தரம் பி.ஏ.,

**செயலாளர் :**

திரு. எம் மாணிக்கம் Ex M. C.

**துணைச் செயலாளர்கள் :**

1. திரு. பா. ராமகிருஷ்ணன்
2. திரு. க. மு. நடராஜன்

**பொருளாளர் :**

திரு. எஸ். சாலை பி.ஏ.,





# ஒன்றுபடுவோம் போராடுவோம் வெற்றி பெறுவோம்

கே சந்திரசேகரன்,
மாவட்ட துணைத்தலைவர்,
வ. ஆ. அ. மாவட்டம்,
குருவராயப்பேட்டை



குந்தர்குல மாநிலமாநாடு குடியேற்றம் நகரினிலே
கோலாகலமாய் கொண்டாட கூடிடுவோம் நாம்எல்லாம்
குறைகளெல்லாம் நீங்கிடவே, குடும்பத்தோடு-அனைவரும்
கொடிபிடித்து ஆர்ப்பரித்து கூட்டமாக சென்றிடுவோம்.

கல்வித்தொழில் வேலைவாய்ப்பு பொருளாதாரம்
அத்தனையும்
பேசப்படும் மாநாட்டில் பெருந்திரளாய்—கூடிடுவோம்
கற்றவர்கள் பலர்கூறும் கருத்துகளைக் கேட்டிடுவோம்
கைப்பாவையாய் இருந்த பழைய காலத்தை மாற்றிடுவோம்

சாதிசங்கம் வேண்டாமென்று சாற்றியது அக்காலம்
அச்சங்கம் வேண்டுமென்று கூறுவது இக்காலம்
தங்கம் செய்யா வேலைகளைச் சங்கம செய்யுமென்றே நாம்
பொங்கிஎழுந்து புறப்படுவோம் போர்முரசு கொட்டிடுவோம்

பிற்பட்ட வகுப்பினிலே பிறந்துவிட்ட நம்மவர்க்கு
பிறரைப்போல போட்டியிட முடியாமல் தவிக்கின்றோம்
மிகவும்

பிற்பட்ட வகுப்பினிலே பிறந்தவராய் ஆக்கிடவே
பீடுநடைபோட்டு நாமும் கூடிடுவோம் மாநாட்டினிலே

மின்விசையின் ஏற்றத்தால் மீளத்துயர் கொண்டு—நம்
விசைத்தறியின் தொல்லைகளும் நீங்கிடவே அன்று—
கும்பகோணம்
மாநாட்டில் ஒருமித்துக் குரல்கொடுத்தோம் அதன்—விளைவு
ஓரளவுமின் விலையைக் குறைத்திட்ட அரசுக்கு நன்றி
சொல்வோம்.

நம்குலத்துக் காவலனாம் உத்தியோகரத்தினமாம்
நெசவாளர் நேசன்
தானைத்தலைவர் தன்னிகரில்லா ஈரோடு சிங்கமாம்
தென்னிந்திய மாநிலத்தில் தெரியாத ஆளில்லைதீரன்
ஜெ. சு. அவர்களை
அவர் உரையைக் கேட்டிடவே நாட்டமுடன் சொன்றிடு
வோம்.

கைக்கோளர் ஒற்றுமையைக் கண்டுபலர் போற்றுகின்ற
பொற்காலம் தன்னில்நாமும் பிறந்துவிட்ட பெருமைகளை
பறைசாற்றும் மாநாட்டில் புகுந்திடுவோம் திரளாக
கைகட்டி நில்லாமல் குடிபுகுவோம் குடியேற்றம்.

செங்குந்தர் பேரணியில் பெருந்திரளாய் கூடுடிவோம்—அங்கு
நாம் எழுப்பும் கோஷங்களை நாடாளும் மன்றத்திலே
நம்நாட்டு தூதுவர்கள் நலமாக எடுத்துரைக்க
அணிவகுத்தே சென்றிடுவோம் அல்லல்பல நீங்கிடவே.

தமிழகத்தலைவர் ஜெ. சு. அவர்கள் ஆந்திரத்தலைவர்
வள்ளல் பா. கா வும்
கேரளத்தலைவர் அருணாசலம் கன்னடத்தலைவர்
அரங்கசாமி
மேலையநாட்டு நம் உறவினர்கள்வருகைதரும் காட்சியினை
வரலாற்று சிறப்புமிக்க மாநாட்டில் கண்டிடுவோம்.

கைத்தறியாளர் வீட்டுக்கு இலவச மின்சாரம்— அவர்தம்
சிறார்களுக்கு கல்விவேலைவாய்ப்பில் முன்னுரிமை—
வயதான
நெசவாளிக்கு ஓய்வூதியம்மருத்துவமனையில் தனிப்பிரிவு
விசைத்தறிக்கு வங்கிக்கடன் 5. எச். பி. வரை சலுகையில்—
மின்சாரம்

மேலைநாட்டு ஏற்றுமதிக்கு விசைத்தறியின் ஆடைகளை
விரைந்துநாமும் செய்வதற்கே தடையேதும் இல்லாமல்
தலைவர்களை அழைத்து நாம் கோரிக்கை மனுக்களையே—
அன்று
கொடுத்திடவே குடும்பத்தோடு கூடிடுவோம்,
குடியேற்றம் மாநாட்டில்.

வருக, வருக என வரவேற்கும் அன்பர்.



# இராமநாதபுரம் மாவட்டம் — ஓர் அறிமுகம்


மு. முனியசாமி, எம்.ஏ., பி.எட்.,
செயலாளர், இராமநாதபுரம் மாவட்டச் செங்குந்த மகாஜன சங்கம்,
105 நடுத்தெரு, மண்டலமாணிக்கம் (அஞ்சல்), 623 605.


காலத்தால் அழியாத பெருமை பெற்ற புண்ணிய பூமி ''சேது சமஸ்தானம்'' என்று வழங்கப்படும் இராமநாதபுரம் மாவட்டம். நம் தாய் மொழியாம் செந்தமிழ் வளர்ச்சிக்கு எத்தகைய தொண்டு செய்தார்களோ அதற்குச் சற்றும் குறையாத விதத்தில் நமது இந்து மதத்திற்கும் பெருந் தொண்டாற்றிய பெருமைக்குரியவர்கள் இராமநாதபுரம் சேதுபதி மன்னர்கள். ''குடத்திலிட்ட விளக்காக'' இருந்த விவேகானந்தரை ''குன்றின் மேல் இட்ட விளக்காக்கி'' அகிலமெல்லாம் நமது இந்து மதத்தின் பெருமையை உணர வைத்தவரும் ஒரு சேதுபதி மன்னரே!

அதனால்தான், வடநாட்டவர் இராமேஸ்வரம் வந்து புண்ணிய நீராடி இராமநாதரை வழிபட்டபின் இராமநாதபுரம் வந்து சேதுபதி மன்னர் அரண்மனையில் உள்ள அம்மன்னர்களின் திரு உருவப்படங்களையும் சிலைகளையும் வணங்கிப் போற்றி வருகின்றனர்.

தேசியக்கவியின் ''சேதுவை மேடுறுத்தி வீதி சமைப்போம்'' என்ற கனவை நமது நடுவண் அரசு நனவாக்கி இருந்தால் இன்று இலங்கையில் நம்மவர் அல்லல்பட நேர்ந்திருக்குமா?

உலகப் புகழ்பெற்றுத் திரும்பிய விவேகானந்தர் இந்திய மண்ணில் காலடி எடுத்து வைக்குமுன் சேதுபதி மன்னரின் தலைமீது பாதம் பதித்துப் பின் இறங்கியது இம் மண்ணில்தான்!

''இராமேஸ்வரம்'' ''திரு உத்திரகோசமங்கை'' ''நயினார் கோவில்'' ஆகிய சிவத் தலங்களும், ''திருப்புல்லணை'', ''தேவி பட்டணம்'' போன்ற வைணவத் தலங்களும் ராமநாதபுரத்தின் அருகிலேயே உள்ளன. இவைகள் அனைத்தும் சேதுபதி மன்னர்களாலேயே கட்டப்பட்டன.

'தென்னிந்திய செங்குந்த மகாஜ
சங்கம்' என்ற தொடங்கப் பெற்றதோ
அன்றிலிருந்தே தலைமைச் சங்கத்தோ
நெருங்கிய தொடர்பு கொண்டு வந்திருக்கிற
எங்கள் மாவட்டம். மாநிலப் பொறு
பாளர்கள் பலர் அவ்வப்போது மண்ட
மாணிக்கம், அபிராமம், பரமக்குடி போன்
ஊர்களுக்கு வந்து பல்வேறு நிகழ்ச்சிகளி
கலந்து கொண்டு சிறப்பித்திருக்கின்றனர்.

செங்குந்த மகாஜன சங்கத்தின் ஒ
தாவது மாநில மாநாடு 1940 ஆம் ஆண்
டிசம்பர் 26, 27 தேதிகளில் பரமக்குடி
காலம் சென்ற திரு. ம. பா. ரா. இருளான்
முதலியார் அவர்களை வரவேற்புத் த
வராகக் கொண்டு சிறப்பாக நடைபெற்ற
அம்மாநாட்டில் கலந்து கொண்டவர்
எங்கள் மாவட்டத்தின் விருந்தோம்
சிறப்பை இன்றும் நினைவு கூர்வர். 195
ஆண்டு வரை நல்ல வளமான செல்வர்
பலர் இவ்வூர்களில் வாழ்ந்து வந்தனர்.

## இன்றைய நிலை

குறைந்த மக்கட்தொகையும், பொரு
தார நிலையும் உள்ள செங்குந்தர்கள் வா
மாவட்டமாக இன்று இருக்கிறது. க
மிகக்குறைந்த நிலையில் உள்ளது. அறியா
யும், ஒற்றுமை குறைவும் நம் இனத்தில் பு
யோடிக் கிடக்கிறது.

## நம்மவர் வாழுமிடங்கள்

இம்மாவட்டத்தில் இராமநாதபு
பரமக்குடி, கமுதி, முதுகுளத்தூர்
வாடனை ஆகிய 5 வட்டங்களிலும் உள்ள
ஊர்களில் மொத்தம் 3000 பேர் வ
கின்றனர். சில ஊர்களில் ஒன்று அல்
இரண்டு குடும்பங்கள் மட்டுமே இருக்கின்

ரெகுநாதபுரம் என்ற ஊரைத் தவிர மற்ற ஊர்களில் 50க்கும் குறைவான குடும்பங்களே வாழ்கின்றன.

## தொழில் :

நமது குலத்தொழிலான நெசவுத் தொழில் மண்டல மாணிக்கம் என்ற ஊரில் மட்டும் தான் நடைபெறுகிறது. மற்ற ஊர்களில் நம்மவர்கள் வேளாண்மை, ஓலைத் தொழில் சிறிய அளவில் வணிகம் போன்றவற்றில் ஈடுபட்டுள்ளனர். அரசு அலுவலர்களாகவும், ஆசிரியர்களாகவும் இருப்பவர்கள் ஒவ்வோர் ஊரிலும் விரல்விட்டு எண்ணத்தக்க அளவிலேயே உள்ளன.

## பொருளாதாரமும் வாழ்க்கைத் தரமும் !

1950-ஆம் ஆண்டுக்குப் பிறகு இம் மாவட்டத்திலிருந்து தொழில், பொருளாதார நலிவின் காரணமாக வெளியேறி பல்வேறு மாவட்டங்களுக்குச் சென்றுவிட்டனர். தற்போது சிறுபான்மை இனத்தவர் ஆக வாழும் நம்மவர்கள் ஆங்காங்கே உள்ள பெரும்பான்மை இனத்தவர்களின் ஆதிக்கத்திற்கும் நெருக்கடிக்கும் ஆளாகி பல்வேறு வகையிலும் அமைதியற்ற மனநிலையில்தான் வாழ்ந்து கொண்டிருக்கின்றனர். கடற்கரை ஊர்களான அழகன்குளம், ரெகுநாதபுரம் போன்ற ஊர்களைச் சேர்ந்த இளைஞர்கள் ஒரு சிலர் தற்போது வெளிநாடுகளில் சென்று தொழில் செய்கின்றனர்.

## மாவட்டச் சங்க அமைப்பு :

இம்மாவட்டத்தில் வாழும் நம்மவர்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தத் தன்னம்பிக்கையையும், ஒற்றுமையையும், கல்வி அறிவையும் பெருக்க மாவட்ட அமைப்புத் தேவை என்பதை உணர்ந்தனர். 1984ம் ஆண்டு காஞ்சிபுரம் மாநில மாநாட்டுத் திடலிலேயே தற்போதைய நமது மாநிலத் துணைத் தலைவர்களான மதுரை திரு. காந்திதாஸ், எம். ஏ. பி. எல், மயிலாடுதுறை பெரியவர் திரு. ச. கு. பா. பழனிவேலு ஆகியோர் வழிகாட்டுதலின் படி 'இராமநாதபுரம் மாவட்ட செங்குந்த மகாஜன சங்கம்' அமைக்கப்பட்டது. மாவட்டத் தலைவராக பரமக்குடி உயர்திரு. இ. தனசீலன், பி. ஏ. அவர்களும், செயலாளராக மண்டல மாணிக்கம் திரு. மு. முனியசாமி, எம். ஏ. பிஎட் அவர்களும் மற்றும் நிர்வாகக் குழுவினரும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

மாநில சங்கத்தின் ஆணைகளுக்கேற்ப அவ்வப்போது செயற்குழுக் கூட்டங்கள் நடத்தப் பெற்று மாவட்ட நிர்வாகம் சிறப்புற இயங்கி வருகிறது. தலைவர், செயலாளரின் இடைவிடாத பணியின் காரணமாக 15 கிளைச் சங்கங்கள் அமைக்கப்பட்டு மாவட்டத்தில் வாழும் அனைவரையும் ஒருங்கிணைத்துள்ளோம்.

இடையிடையே நடைபெற்ற மாநில மாநாடுகள், சிறப்புப் பேரணி, மண்டல் அறிக்கை அமல் நடத்தக் கோரி நடத்தப்பட்ட ஆர்ப்பாட்டங்கள், நமது இனத்தை மிகவும் பிற்பட்ட இனமாக அறிவிக்கக் கோரி நடத்தப்பட்ட உண்ணாவிரதம் இயக்கம், செங்குந்தர் இளைஞர் பயிற்சி முகாம்கள், சென்னையில் நமது குலச்சிறப்புற்றோருக்கு நடத்தப்படும் பாராட்டு விழாக்கள் போன்ற அனைத்துச் சமுதாய நிகழ்ச்சிகளிலும் எங்கள் மாவட்டம் சிறப்பான பங்கு கொண்டிருக்கிறது.

கடந்த 20-9-92 அன்று மாநிலத் தலைவர் உத்தியோக ரத்னா உயர்திரு. ஜெ. சுத்தானந்தன் அவர்கள் எங்கள் மாவட்டத்தில் பல ஊர்களிலும் சுற்றுப்பயணம் செய்து இது வரை மற்ற மாநிலத் தலைவர்கள் செய்யாத அரிய சாதனையைச் செய்துள்ளார்கள். தலைவரின் சுற்றுப்பயணத்தின் போது பல அரிய அனுபவங்களை அவருடன் பயணம் செய்த நானும், எங்கள் மாவட்ட உறவினர்களும் பெற முடிந்தது. தலைவர் மனதில் எங்கள் மாவட்டம், எவ்வளவு ஆழமான பாதிப்பை ஏற்படுத்தி உள்ளது என்பதை அவ்வப்போது அவருடைய பேருரைகள் கட்டுரைகள் மூலம் அறியலாம்.

இராமேஸ்வரம் வந்து வழிபட விரும்பும் மற்ற மாவட்டங்களில் வாழும் நம் உறவினர்களுக்கு அவ்வப்போது மாவட்ட சங்கம் தக்க வசதிகளைச் செய்து தருகிறது.

## மாவட்டச் சங்கத்தின் முயற்சி :

ஆயுள் உறுப்பினர் சேர்க்கை சுமார் ஆயிரம் குடும்பங்களே வாழ்ந்து வரும் எங்கள் மாவட்டத்தில் இதுவரை செங்குந்தமித்திரனுக்காக 100 ஆயுள் உறுப்பினர்களும், ஆண்டு சந்தாதாரர்கள் 200 பேரும், தலைமைச் சங்க ஆயுள் உறுப்பினர்களாக 100 பேரும் சேர்க்கப் பட்டுள்ளனர்.

## அடிப்படை உறுப்பினர் :

இதுவரை 250 அடிப்படை உறுப்பினர்கள், இரண்டு கிளைச் சங்கங்களான மண்டல மாணிக்கம், ரெகுநாதபுரம் என்ற ஊர்களில்

மட்டும் சேர்க்கப்பட்டு உறுப்பினர் அட்டைகள் தலைமைச் சங்கத்தால் வழங்கப்பட்டு உள்ளது. இந்த ஆண்டுக்குள் அனைத்துக் கிளைகளிலும் உள்ள வயது வந்த ஆண், பெண் அனைவரையும் உறுப்பினர்களாக்கிவிட முயற்சி எடுக்கப்பட்டு வருகிறது.

## எதிர்பார்ப்பு

எங்கள் மாவட்டத்தில் கல்வி அதிகம் பெற்றவர்கள் மிகவும் குறைவு. அதிலும் நமது இனத்தவர் மிகமிகக் குறைவு. பொருளாதார நிலையில் மிகவும் பின் தங்கிய நிலையில் இருந்தும் பத்தாம் வகுப்பு, பன்னிரெண்டாம் வகுப்பு தேர்ச்சி பெற்றவர் வேலை வாய்ப்பின்றி அல்லல் படுகின்றனர். ஆர்வம், உழைப்பு, நேர்மை ஆகியவை இருந்த போதிலும் எதிர்காலத்தை எண்ணி ஏக்கப் பெருமூச்சு விட்டுக்கொண்டிருக்கின்றனர்.

நமது எதிர்காலம் இம்மாவட்டத்தில் இளைஞர்களது வாழ்க்கைத் தர உயர்வைப் பொறுத்துத்தான் இருக்கிறது. பொருளாதார உயர்வுதான் மற்ற சமூகத்தினர் முன் தன் மானத்துடனும், தலை நிமிர்ந்தும் வாழ வழி செய்யும்.

ஆகவே, இம்மாவட்டத்தில் நமது இனத்தவர்களுக்கு முன்னுரிமை அளிக்கும் விதத்தில் ஒரு தொழிற்சாலை அல்லது நூற்பு ஆலைகள் அமைவதற்கும், அமைப்பதற்கும், ஆலோசனையும், தொழில் நுட்ப உதவியும் குறிப்பிட்ட அளவு மூலதனத்தில் பங்கும் கொடுத்து உதவும் பிற மாவட்டங்களில் வாழும் நம் குலப்பெரியோர்களை இரு கரங்கூப்பி வேண்டுகிறேன்.

அவ்வாறு அமையும் ஆலைகளுக்கு ஆகும் மூலதனத்தில் ஒரு பகுதியை இங்கு அத்தொழிற்சாலைகளில் பணிபுரிய இருக்கும் நம் உறவினர்களிடம் பங்குகளாகப் பெற்றுத்தர தயாராக உள்ளோம். இதுபோன்று இரண்டு அல்லது மூன்று ஆலைகள் அமைந்தால் இம்மாவட்டத்தில் வாழும் நம் உறவினர்கள் அனைவரும் வேலை வாய்ப்பும், பொருளாதார வளர்ச்சியும் பெற்று இழந்த மதிப்பையும், செல்வாக்கையும் மீண்டும் பெற முடியும்.

## தலைவரின் பொன் விழா உறுதிமொழி

அன்பிற்குரிய நமது மாநிலத் தலைவரின் பொன்விழா நடைபெற இருக்கும் இவ்வாண்டிற்குள் ஒரு தொழிற்சாலையை அமைத்து அவர்களாலேயே தொடக்கி வைக்கப்பட வேண்டும் என்று உறுதி கொண்டிருக்கிறோம்.

## தொழிற்சாலைக்கேற்ற வசதிகள் :

1. மிகக் குறைந்த விலையில் ஆலைகள் அமைக்க இடவசதி கிடைக்கும்.
2. பருத்தி போன்ற மூலபொருட்கள் உற்பத்தியும் அதிகம் இருக்கிறது.
3. குறைந்த ஊதியத்தில் பணியாற்ற தொழிலாளர்கள் உள்ளனர்.
4. நிலத்தடி நீர் மிக அதிக அளவில் கிடைக்கும்.
5. சீதோஷ்ண நிலையும், பஞ்சாலைத் தொழிலுக்கு ஏற்புடையது. ஏற்கனவே மாநில அரசு, மத்திய அரசுகளின் இரு பஞ்சாலைகளும், தனியார் பஞ்சாலையும் நல்லமுறையில் இயங்கி வருகின்றன.
6. இங்கு மூலதனத்தில் பங்கு பெறும் உறவினர்களின் குடும்பத்தவர்களே ஆலையில் பணிபுரிபவர்களாக இருப்பர்.

எனவே, பல்வேறு மாவட்டங்களில் தொழிலதிபர்களாக வாழும் நமது உறவினர்கள் எங்கள் மாவட்டத்தில் வாழும் நமது உறவினர்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்திட ஒத்துழைப்புத் தர இருகரம் கூப்பி வேண்டி வரவேற்கிறோம்.

குடியேற்றத்தில் 17 வது மாநில மாநாட்டைச் சிறப்புற நடத்தித்தரும் வட ஆற்காடு மாவட்டச் செங்குந்த மகாசன சங்கத் தலைவர் திரு. கே. எம். கோவிந்தராஜன் அவர்களுக்கும் மற்றும் மாவட்ட நிர்வாகக் குழுவினருக்கும் எங்களது மாவட்டச் செங்குந்த சொந்தங்களின் சார்பில் பாராட்டினையும் நன்றியினையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

# பெரியார் மாவட்டச் செங்குந்தர் சங்கம்

## வளர்ச்சிப் பணிகள்

ஆர். ஏ. என். முத்துசாமி முதலியார்
தலைவர், பெரியார் மாவட்டச் செங்குந்த மகாசன சங்கம்.

"இந்திரன் அயன்மால் தேவர் யாவர்க்கும்
முதன்மையாக
வந்தபான் மையினால் குலமழுப்படை
அந்தனார்க்கு
முந்திய நாமம் தானும் முதலியார்
ஆகையால் செங்
குந்தர்சந்ததிக்கு மப்பேர் முதலியா
ரென்பதாகும்"

என்று ஒட்டக்கூத்தரும்,

**"கையில் அவனருள் உண்டு கண்டாய்;
கந்தன் படைச்செங் குந்தர் களாய்த்
துயர் ஒழித் தெழுவோ மினிமேல்
பயமிலை குலம் உய்யும் உய்யும் உய்யும்''**

என்று பாவேந்தர் பாரதிதாசனும் செங்குந்தர்களின் மாண்பினையும், உயர் வினையும் பெருமையையும் எடுத்துக் கூறு வார்கள்.

இந்தப் பெருமைகளை என்றும் காத்திட உருவானதே தென்னிந்தியச் செங்குந்தர் மகாசன சங்கம். வள்ளல் சபாபதி, எம். பி. நாச்சிமுத்து செங்குந்தர் போன்றோர் களால் செங்குந்தப் பயிர்கள் செழித்து, வளர்க்கப்பட்டன.

செந்தமிழ் நாட்டின் சீரினமான செங் குந்தப் பேரினத்தின் முன்னேற்றம் கருதி, தென்னிந்தியச் செங்குந்தர் மகாசன சங்கத் தின் நல்லாசியோடு, பெரியார் மாவட்டச் செங்குந்தர் மாகாசன சங்கம் பத்மஸ்ரீ எம். பி. நாச்சிமுத்து செங்குந்தர் அவா களின் முன்னிலையில் 15-4-1984-ஆம் ஆண்டில் ஈரோட்டில் உருவாக்கப்பட்டது.

செங்குந்த இனமக்களின் வளர்ச்சியைக் கருதி, செங்குந்தர்சங்கத்தின் வளர்ச்சியைக் கருதி, பெரியார் மாவட்டத்தில் உள்ள ஒவ் வொரு ஊருக்கும் பலமுறை மாவட்டத் தலைவர், பொதுச் செயலாளர், பொரு ளாளர், செயலாளர்கள் ஆகியோர் நேரில் சென்று, நம் இன மக்களிடையே உணர் வினை — உற்சாகத்தை — ஒற்றுமையை ஏற்படுத்தியதுடன், 7 வட்டச் சங்கங்களை யும், 10 ஒன்றியச் சங்கங்களையும், 2 நகரச் சங்கங்களையும், 135 கிளைச் சங்கங் களையும் தொடங்கி வைத்தனர். இம்முயற்சி, பெரியார் மாவட்டச் செங்குந்தர் சங்க வளர்ச்சியின் அடிநாதமாக விளங்கு கின்றது.

தங்கம் செய்யாததைச் சங்கம் செய்யும் என்பது முதுமொழி.

**''சங்கங்களால்—நல்ல
சங்கங்களால்—மக்கள்
சாதித்தல் கூடும் பெரும்பெருங்காரியம்"**

என்று பாவேந்தர் பாரதிதாசன் சங்கத்தின் ஆற்றலை எடுத்துக் கூறுவார். இனமக் களின் ஒற்றுமைக்காக—ஊக்கம் தருவதற் காகப் பெரியார் மாவட்டச் சங்கம் இன்று வரை சீரிய முறையில் ஆண்டு விழாக்கள் டத்த்6 வந்துள்ளது பெரியார் மாவட்டத் தில் ஆயுள்உறுப்பினர்களாக 2000பேர்கள் சேர்க்கப்பட்டனர். சந்தாத் தொகை வைப்பு நிதியாகவங்கியில் வைத்துள்ளது. வைப்பு நிதிமூலம் கிடைக்கும் வருவாய் கொண்டு, பெரியார் மாவட்டத்தில் ஒவ்வொரு வட்டம் வாரியாக 7வட்டமும், எஸ். பி. பி. ஒரு வட்டமும் ஆக 8 வட்டங்களுககு எஸ். எஸ். எல். சி. தேர்வில் வெற்றி பெறும் 24 நம் குல மாணவ மாணவியர்க்கு ஒவ்வொரு ஆண்டு விழாவிலும், முதல் பரிசாக ரூ. 200—யும் இரண்டாம் பரிசாக

ரூ. 150—மூன்றாம் பரிசாக ரூ. 100வழங்கப் பெற்று, சிறப்பு செய்யப்படுகிறது.

மேலும், 1991ஆம் ஆண்டில் மாவட்டச் சங்கத்தில் 5ஆம், 6ஆம் ஆண்டு விழாவில் 1986-ஆம் ஆண்டிற்குப் பிறகு கல்வித் துறையில்-ஆராய்ச்சித் துறையில் டாக்டர் பட்டம் (Ph. D) பெற்றவர்களுக்கும், மத்திய மாநில அரசினரால் விருது பெற்ற வர்களுக்கும், இந்தியக் குடியரசுத் தலைவரின் விருது பெற்ற குடும்ப நலத்திட்டக் கிராம சேவகிக்கும், தஞ்சைச் சரசுவதி மகால் நூலகத்தில் இயக்குநர் பொறுப்பு ஏற்றவாகளும் பாராட்டும் பரிசும் வழங்கப் பெற்றது பெருமைமிக்க நிகழ்ச்சியாகும்.

நம் மாநிலத் தலைவர் உயர்திரு ஜெ. சுத்தானந்தன் அவாகட்கு 'உத்தியோக ரத்னா' என்ற உயர்பட்டம் இந்திய அரசினரால் 1985 ஆண்டில் வழங்கப்பெற்றது. அவர்க்குச் சிறப்பு செய்யும் வகையில் பெரியார் மாவட்டம் மாபெரும் விழா எடுத்து, பொன்னாடை போர்த்தி, நினைவுப் பரிசுகள் வழங்கப்பட்டது குறிப்பிடத் தகுந்த நிகழ்ச்சியாகும். இதனைப் போன்றே, ஜப்பான் போன்ற வெளிநாடுகளுக்குச் சென்று திரும்பிய ஈரோடு கலைக —கல்லூரியின் செயலாளர் & தாளாளர்— தொழில் அதிபர்—வள்ளலுமான திரு ராணா கே. வி. இலட்சுமணன் அவர்கட்கு விழா எடுத்து, பொன்னாடை போர்த்தி, நினைவுப் பரிசு வழங்கிப் பாராட்டிக் கௌரவிக்கப்பட்டார்.

9-2-86ஆம் நாளிட்ட மாவட்டச் சங்கத்தின் தீர்மானத்தின்படி, மாவட்டச் சங்கத்தின் சார்பில், நம் குல வழக்கப்படி, இலவசத் திருமணம செய்யப் பெற்று, பரிசும் பாராட்டும் தந்து, திருமண மக்களை நம் சங்க உறுப்பினாகளாகச் சேர்க்கப் பெற்றனர்.

2-3-86 ஆம் நாளில், பஞ்சாயத்து, ஊராட்சிதேர்தல்களில வெற்றி பெற்ற 169 ஆடவர்களுக்கும், 27 பெண்களுக்கும் பொன்னாடை போத்த்தி, நினைவுப் பரிசுகள் வழங்கி, அவர்களின்தொண்டுகள் நம் குல மக்களுககுப் பயனபடுமாறு வேண்டப்பட்டனா.

நம் குல மக்களில் ஏழ்மையுடையவர்களின் உடல் நலம் அற்றவாகளின் உடல் நலம் பேணும் வகையில், நம் இனத்தைச் சேர்ந்த 65 மருத்துவ வல்லுனாகளை ஒன்று சேர்த்து, ஓர் அமைப்பு உருவாக்கப் பட்டது. அந்த அமைப்பின் மூலம் இலவச மருத்துவ உதவிகள் செய்ய ஏற்பாடுகள் செய்யப்பட்டன. இதனால் நூற்றுக்கணக் கான நம்குல ஏழை மக்கள் பயன் பெறறனர்; பயன் பெற்று வருகின்றனர்.

மாநிலச் சங்கத்தின் தீர்மானத்தின்படி, சென்னை வள்ளல சபாபதி கட்டட அமைப்புப் பொறுப்புகள் பெற்றபோது, இன்முகததுடன் பெரியார் மாவட்டத் தலைவா ஏற்றார். ஏற்றதோடு மட்டுமன்றி தென்னாாக்காடு, தஞ்சை, திருச்சி, மதுரை, காஞ்சிபுரம், பாண்டிசசேரி, இராமநாதபுரம் ஆகிய 7 மாவட்டங்களுக்கு, மாவட்டத் தலைவர், பொதுச் செயலாளா, பொருளாளர், செயலர்கள் ஆகியோா சுற்றுப்பயணம் மேற்கொண்டு, மாநிலச் சங்கத்தின் வளர்ச்சிககு உறுதுணையாக இருநதது பெரியார் மாவட்டச் செங்குந்தா சங்கம.

நம் குல மக்களின் ஏழ்மை நிலையை அரசுக்கு உணர்த்தவும், அமைதியாகச் செங்குநத இனம தமிழகத்தில வாழ்நது வருவதைத் தமிழகம உணரும முறையிலும், மாநிலச் சஙகத்தின் தீாமானததின படியும், சென்னையில 4-12-1988ல் நடை பெறற 'எழுசசிப் பேரணிக்குப்' பெரியாா மாவட்டத்தின் சார்பில் 106பஸகள், லாரிகள் வேன்கள் ஏற்பாடு செய்யப்பட்டு, 'எழுசசிப் பேரணி' வெற்றி பெற உறுதுணையாக விளங்கியது பெரியாா மாவடடம. மேலும், பேருந்துச செலவுகள் அனைததும மாவட்டச் சங்கமே ஏற்றுக் கொண்டது.

பெரியார் மாவட்டச் செங்குந்த மக்களிடம உணர்வினை ஊட்ட ஒற்றுமையை ஏற்படுத்த எழுச்சியினை உருவாக்கம் பெரியாா மாவட்டச சங்கம 10-3-90இல ஈரோட்டில மாநாடு நடததியது; பெருமைக்கு உரியதாகும். மாநாடு வெற்றி பெற, செஙகுந்த மககளை நேரில கணடும், சங்க பொறுப்பாளாகளை நேரில் சந்திதது, சங்க வளாசசிககு ஆக்கம் தேடும் வகையில கலந்துரையாடலகள் நிகழ்ததப்பட்டன. மாவட்டப பெரு முயற்சிகளால 20000ககு மேறபட்ட மககள் மாநாட்டில் கலநது கொண்டனர்.

மாவட்டத் தலைவரும், வள்ளல் ராணா கே. வி, இலட்சுமணன் அவர்களும் இணைந்து மாவடட மாநாட்டிற்கு வந்த நம் குல மககள் அனைவாகளும் உணவு

வழங்கினர். நம் குல மக்கள்பால் அவர்களுக்குள்ள பற்றினையும் மதிப்பினையும் இது உணர்த்துவதாகும்.

மாவட்ட மாநாடு நடந்த முடிந்த வேளையிலே மாநில சங்கத்தின் தீர்மானத்தின்படி 5-11-60ல் பெரியார் மாவட்டத் தலைநகரில் ஈரோட்டில் நம் இனத்தை மிகவும் பிற்பட்டோர் பட்டியலில் சேர்க்கக் கோரி ஒரு நாள் அடையாள உண்ணா விரதம் மாவட்டத் தலைவர் தலைமையில் நடைபெற்றது. ஈரோட்டில், மாவட்ட ஆட்சியர் அலுவலகம் முன்பு சுமார் 1 கிலோ மீட்டர் தூரத்திற்கு 3000 செங்குந்தர்கள் கலந்து கொள்ள உண்ணா விரதப் போராட்டம் வெற்றி பெற்றது. சுமார் 2000 கார்டுகள் செங்குந்த இனத்தை மிகவும் பிற்படுத்தப்பட்டோர் பட்டியலில் சேர்க்கக் கோரி, தமிழக முதல்வருக்கு அனுப்பி வைக்கப் பெற்றது மேலும், உண்ணாவிரதத்தில் கலந்து கொண்ட பலரிடம் இரத்தக் கையொப்பம் வாங்கிய பட்டியல் மாநிலச் சங்கத்தினர் மூலம், தமிழக அரசிற்கு அனுப்பப்பட்டன.

மாவட்டச் சங்கத்தின் முயற்சியால் ஈரோடு அருகில் 'செங்குந்தர் நகர்' என்னும் பெயரில் ஏறக்குறைய 200 வீட்டுமனைகள் செங்குந்தர்களுக்குஉரிமை யாக்கவும், அதில் வீடுகள் உருவாவதற்கும் தகுந்த நடவடிக்கைகள் 'செங்குந்தர் முன்னேற்றச் சங்கம்' எனும் அமைப்பின் கீழ் முயற்சிகள் மேற் கொள்ளப்பட்டு வருகின்றன.

செங்குந்தர் குல இளைஞர்களுக்கு சமுதாய இயக்கம்' பற்றிய இரண்டு நாள் பயிற்சி முகாம் 13-12-91 — 14-12-91 நாட்களில் கோபியில்- புதுக்கரை புதூரில் நடைபெற்றது. அதில் மாவட்டத் தலைவர் கலந்து கொண்டு ஆக்கப்பூர்வமான சிந்தனைகள் வழங்கினார்.

28-4-92 ஆம் நாளில் பெரியார் மாவட்டச்செங்குந்தர் மகாசன சங்கத்தின் சார்பில் உத்தியோக ரத்னா ஜெ. சுத்தானந்தன் அவர்களின் தலைமையில், மாண்புமிகு டி. என். சிங்காரவேலு, டாக்டர் தி. ரா. செல்வராசன் போன்ற நம் குலத் தலைவர்கள் பலர் கலந்து கொண்டு சிறப்பு செய்ய, பத்மஸ்ரீ எம். பி. நாச்சிமுத்து செங்குந்தர் அவர்களின் 80 ஆம் பிறந்த நாள் விழா மாநிலத்தில் முதன் முதலாக ஈரோட்டில் சிறப்பாக நடத்தப் பெற்றது. இது பெரியார் மாவட்டத்திற்குக் கிடைத்த பெருமை என்று கூறலாம்.

பெரியார் மாவட்டத்தில் நெசவாளர்களுக்கும் பிற இனத்தவர்க்கும் பாவடிப் பிரச்சனைகள் பல உள்ளன. பாவடிப் பிரச்சனைகள் தீர, மாவட்ட ஆட்சியரை அணுகி, பேசி, பிரச்சினைகள் தீர பெரும் முயறசிகள் மேற்கொள்ளப்பட்டன.

பல செங்குந்தச் சான்றோர்களின் பெரு முயற்சிகளால் மேல்நிலைப் பள்ளிகள், கலைக் கல்லூரி, தொழிற் பயிற்சி கல்லூரி, தொழிற் பயிற்சிப் பள்ளி போன்ற கலவி நிறுவனங்கள் ஏற்படுத்தப் பெற்று சிறப்பாக நடைபெற்று வருகின்றன.

எதிர்காலத்தில் நம் இன மக்களின் நல் வாழ்விற்கும், முன்னேற்றத்திற்கும், மாநிலச் சங்கத்தின் வழிகாட்டுதலின் பேரில், பெரியார் மாவட்டம் மனம் தளராமல் பாடுபடும் என்று உறுதி கூறுகிறது.

ஒழுங்கினைக் காப்போம்!

உதவிகள் செய்வோம்!

உறவினை வளர்ப்போம்!

கல்விப்பணி, இறைப்பணி,

மருத்துவப்பணி ஆற்றுவோம்!

# சென்னைப் பெருநகர் செங்குந்த மகாஜன சங்கத் தலைவர்

## திரு. எஸ். டி. பொன்னுசாமி செங்குந்தர்

## சமூக மக்களுக்கு வழங்கும் நல்லுரை

செங்குந்தர் பண்டு தொட்டுச் செந்தமிழும்
சிவநெறியும் சிறக்க வாழ்த்து
மங்காத புகழ்ச்சோழ மன்னர்களின்
நல்லரசை மக்கள் தம்மைத்
தங்கள்தவ வீரத்தால் தகுதிமிகு
நெசவுநற் றொழிலால் மானம்
பங்கமுறா வகைகாத்த வரலாற்றுச்
சிறப்புடையார்! வளர்க! வாழ்க!

செந்தமிழ் நாட்டுப் பழங்குடி மரபினருள் கீர்த்தி மிக்கவர்களாக விளங்கும் நம் செங்குந்தர்கள் கல்வி, கலை, கலாச்சாரம், அறிவுநுட்பம், அறவுணர்வு, வீரம் செய் தொழில் நேர்த்தி முதலிய பல வகைகளிலும் வழிவழியாகச் சிறந்திருந்தார்கள் என்பதற்கு ஏராளமான வரலாற்றுச் சான்றுகள் இருக்கின்றன.

பண்டைக் காலத்தில் சோழ மன்னர்களின் நம்பிக்கைக்குரிய மெய்காப்பாளர்களாகவும், நெஞ்சத்தில் உயர்ந்த குறிக்கோளும் கையில் ஈட்டி (குந்தம்)யும் ஏந்திய கைக்கோளர், செங்குந்தர் என்னும் சிறப்புப் பெயர்களுடன் அரசர்களுடன் செல்லும் வலங்கை இடங்கைப் படைவீரர்களாகவும், சேனைத் தலைவர்களாகவும், மக்கள் மானம் காக்கும் ஆடைகளை உற்பத்தி செய்து அரசன் முதல் ஆண்டி வரை எல்லோருக்கும் வழங்கும் நேர்த்தி மிக்க நெசவுத் தொழில் வல்லவர்களாகவும், உணவுத் தானியங்களை விளைவிக்கும் உழு தொழிலாளர்களாகவும், கடல் கடந்து சென்று வாணிபம் செய்யும் வணிகர்களாகவும், ஒப்பற்ற பெரும்புலவர்களாகவும், அருள் நெறித் தலைவர்களாகவும், அண்மைக் காலத்தில் அந்நியர் ஆட்சிக்கு உட்பட்டுவிட்ட நாட்டை மீட்பதற்கான விடுதலைப் போராட்ட வீரர்களாகவும், தியாகிகளாகவும், தொண்டர்களாகவும் விளங்கியவர் விளங்கி வருபவர்கள் நமது மரபினராவர்.

நாடு முழுவதும் நம்மவர்கள் சார்பில் பற்பல கோயில்களும், சத்திரங்களும், திருமடங்களும், அறநிலயங்களும் இருந்து வருகின்றன. தமிழகம் முழுவதும் ஆந்திர, கர்நாடக, மகாராஷ்டிரா மாநிலங்களிலும், ஈழ நாட்டிலுமாக ஏறத்தாழ ஒன்றரை கோடிப் பேர் இருக்கிறார்கள். என்றாலும் நம்மவர்களுக்குள் ஒருங்கிணைப்பு முயற்சிகள் இல்லாமற் போய்விட்டன. தாம் வாழும் இடங்களை ஒட்டி வட்டார வாரியாகத் தனித்தனி வகையறாவாக நம்மவர்கள் பிரிந்து வாழத் தலைப்பட்டு விட்டனர். ஒரே மரபினராக இருந்தும் நாங்கள் காஞ்சிபுரம் வகையறா, அவர்கள் மானாம்பதி வகையறா, செம்பாக்கம் வகையறா எனச் சொலலிக் கொண்டு தமக்குள் பெண் கொடுக்கல் வாங்கல்கள் செய்து உறவு கொள்ளாமல் இருந்துவிட்டனர். அத்தகைய நிலை இப்போது மாறி வருவது பாராட்டுகுரியது. செங்குந்தர்கள் எங்கிருந்தாலும் வட்டார உணர்ச்சிகளைக் கடந்து உறவு கொண்டு ஒன்றுபட்டு வாழ்ந்தால்தான் மக்களாட்சியில் அரசுடன் போராடி உரிய உரிமைகளை, நன்மைகளைப் பெற்று முன்னேற முடியும்.

நாடு அந்நியர் ஆட்சிக்கு உட்பட்ட பிறகு பல காரணங்களால் மக்களிற் பெரும்பாலோர் கல்வி, தொழில், கலை, பொருளாதாரம் முதலிய துறைகளில் பின்

தங்கிவிட்டனர். நம் மரபினர் மிக மிகப் பிற்படுத்தப்பட்டு விட்டனர். பண்டைய சிறப்புகள் குன்றிவிட்டன. தத்தம் நிலையை உயர்த்திக் கொள்ள, பல்வேறு மரபினர்களும் தம் சமூகப் பெயரால் சங்கங்கள் அமைத்துக்கொண்டு முன்னேற முயற்சிகளைச் செய்து வருகிறார்கள். நாமும் அப்படி முயற்சி செய்தால்தான் முன்னேற முடியும்.

“சாதி, குலம் என்று பேசுவது முற்போக்குக் கொள்கை ஆகுமா?” என்று அறிவிற் சிறந்த நம் இளைஞர்களில் சிலர் எண்ணுகின்றார்கள். மற்றவர்களுக்கு இடையூறு இல்லாமல், தத்தம் குடும்பத்தைச் சேர்ந்தவர்களைக் காப்பாற்ற வேண்டுவது எப்படிக் கடமையாகுமோ, அது போலத்தான் தத்தம் மரபினர் முன்னேற ஒன்றுபட்டு முயல வேண்டுவதும் கடமையாகும். அக்கடமையைச் செய்யும் போது மற்ற மரபினர்களை மதிப்பதும், எல்லோரிடமும் அன்புடன் பழகுவதும்தான் உண்மையிலேயே முற்போக்காகும்.

நாடு விடுதலை பெற்ற பிறகு மற்ற மரபினர்கள் பெற்றுள்ள முன்னேற்றங்களை நம் மரபினரும் பெற வேண்டும் என்று முயல வேண்டுவது நம் கடமை அல்லவா? பல துறைகளிலும் நம் மரபினர் முன்னேற்றத்துக்குத் தடையாக இருப்பன யாவை? என்று ஆராய்ந்து அவைகளைக் கடந்து முன்னேற முயல வேண்டாமா? அதற்கு நம் இனத்தவர்கள் அனைவரும் ஒரு தலைமை அமைப்பின் கீழ் ஒன்றுபட வேண்டாமா? இவ்வகையில் சிந்தித்து, நாடு விடுதலை பெறுவதற்கு முன்னரே, 65 ஆண்டுகளுக்கு முன்பே 1926ல் நம் குலப் பெருமக்கள் தென்னிந்திய செங்குந்த மகாஜனசங்கத்தை நிறுவித் தமிழகத்தின் எல்லா மாவட்டங்களிலும் உள்ள செங்குந்தர்கள் ஒன்றுபடுத்த முற்பட்டார்கள். ‘செங்குந்த மித்திரன்’ என்ற மாத இதழையும் தொடங்கினார்கள். பெரிதும் முயன்று செங்குந்தர் மாநாடுகளை நடத்தினார்கள். அதனால் படிப்படியே சில பல நன்மைகள் ஏற்பட்டன. என்றாலும் மற்ற மரபினர்களிடம் ஏற்பட்டுள்ள அளவு விழிப்பும் ஒற்றுமையும் நம்மவரிடையில் ஏற்படவில்லை என்று வருத்தத்துடன் குறிப்பிட வேண்டியிருக்கிறது என்றாலும் நாம் சோர்வடையாமல் மேலும் மேலும் முயற்சி செய்தல் வேண்டும்.

கடந்த 65 ஆண்டுகளில் நம்மவர்களின் மாநில மாநாடுகள் 16 முறையே நடைபெற்றிருக்கின்றன. ஆனாலும் 1990 மே, 1991 சூலை என அடுத்தடுத்து நடைபெற்ற 15—16வது மாநில மாநாடுகள் நம்மவர்களுக்கு ஊக்க மட்டத்தக்கவகையில் மிகவும் எழுச்சியுடன் நடைபெற்றன. 17-வது மாநில மாநாடு இப்போது குடியேற்றத்தில் மிகச் சிறப்பாக நடக்கிறது. இந்நிலையில் நம்மிடையே உள்ள குறைகளையே அடிக்கடி சுட்டிக் காட்டிச் சலிப்படையாமல், ஏற்பட்டுள்ள நல்ல சூழ்நிலைகளை எடுத்துக்காட்டி மேலும் மேலும் நம்மவர்களுக்கு உணர்ச்சி ஊட்டி ஒன்றுபடுத்தி நம குல முன்னேற்றப் பணியில் ஈடுபடச் செய்தல் வேண்டும்.

பழங்கால முதல் நாடு முழுவதும் நம்மவர்கள் பொறுப்பில் உள்ள திருக்கோயில்கள், திருமடங்கள், சத்திரங்கள் மற்றுமுள்ள அறக்கட்டளைகள் அண்மைக் காலத்தில் நிறுவப்பட்டு நடைபெற்றுவரும் கல்விக்கூடங்கள், பாடல் பெற்ற பெரிய திருக்கோயில்கள் நம்மவர் சார்பில் நடைபெறும் விழாக்கள் முதலியவற்றின் பட்டியலைத் தொகுத்து வெளியிட்டாலே நமக்கு மிக்க மலைப்பும் மகிழ்ச்சியும் உண்டாகும். காலப்போக்கில் கவனிக்கப் படாமல் இருக்கும் பழைய சத்திரங்களைப் புதுப்பித்து இக்கால சூழலுக்கேற்றபடி அவற்றைக் கொண்டு வருவாயைப் பெருக்கி நம் இனமக்களின் கல்வி-கைத் தொழில் நல்லறச் செயல்களுக்குப் பயன் படுத்தலாம்.

நம் இன நலச் சங்கங்கள் புதுவை உட்படத் தமிழகத்தின் எல்லா மாவட்டங்களிலும் அமைக்கப்பட்டுள்ளன. ஆந்திரா, கர்நாடகா, மகாராஷ்டிரா மாநிலங்களிலும் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. இலங்கையிலுள்ள ஈழநாட்டுச் செங்குந்தர்களும் நம்முடன் தொடர்புபட்டுச் செயலாற்ற விழைகின்றனர். அந்தந்த மாவட்டச் சங்கங்களுக்குச் சில பல கிளைச் சங்கங்களும் ஏற்பட்டு, பாராட்டத் தக்கவகையில் இப்போது செயல்பட்டு வருகின்றன. இவ் விவரங்களை எல்லாம் நம்மவர் எல்லோரும் அறியும்படி செய்தால் எல்லா ஊர்களில் கிளைச்சங்கங்கள் ஏற்பட்டுவிடும். சிற்றூர் பேரூர் சங்கங்கள் மாவட்டச் சங்கங்களுடனும், மாவட்டச் சங்கங்கள் நம் மாநில மகாஜன சங்கங்களுடன் தொடர்பு கொண்டுஒருங்கிணைந்து செயலாற்றினால்

நாம் சாதிக்க முடியாத செயல் என்று ஒன்றும் இருக்காது. அரசாங்கத்திடம் இருந்து மிகமிகப் பிற்பட்டவர்களுக்குப் பெற வேண்டிய சலுகைகளை எல்லாம் பெற்று முன்னேறலாம் என்பதில் ஐயமில்லை.

நம் தலைமைச் சங்கச் சார்பில் நடைபெறும் 'செங்குந்த மித்திரன்' இதழ் நம்மவர் குடும்பம் ஒவ்வொன்றுக்கும் செல்ல வேண்டும். குடும்பத்துக்கொரு சந்தா செலுத்தி அனைவரும் அவ்விதழ் சிறப்பான நடைபெற உதவ வேண்டும். நம்மவர்கள் சங்கங்கள் சார்பில் ஆங்காங்கு நடைபெறும் நற்செயல்கள் முன்னேற்ற முயற்சிகள் அனைத்தும் அவ்விதழில் வெளி வர வேண்டும்.

இனி, எங்கள் சென்னை பெருநகர் செங்குந்த மகாஜன சங்கத்தின் செயல்கள் சாதனைகளை அழுத்தமாகப் பெருமிதத்துடன் குறிப்பிட விழைகின்றேன். எல்லா மாவட்டச் சங்கத் தலைவர், செயலர்களும் தத்தம் சங்கச் செய்திகளை போட்டி போட்டுக் கொண்டு விளக்க வேண்டும். அப்போதுதான் நம்மவர்களுக்குள் மேன் மேலும் உணர்ச்சியும் ஊக்கமும் உண்டாகும்.

எங்கள் சங்கம் 26-3-1972ல் திருமயிலையில் நம்மவரின் ஆட்சியில் உள்ள அருள்மிகு வெள்ளீச்சுவரர் கோயில் தொடங்கப்பட்டது. பின்னர் அச்சங்கம் 1977-ல் சென்னை செங்கை மாவட்ட செங்குந்தர் மகாஜன சங்கமாகி, 1989-ல் சென்னை பெருநகர் செங்குந்த மகாஜன சங்கம் எனப் பெயரிடப்பட்டுள்ளது அதன் முன்னால் தலைவர் அமரர் பொ. சி. பாலசுப்பிரமணிய செங்குந்தர், செயலர் திரு. சரவண பழனிவேலு. இப்போது இதன் தலைராக அடியேன் இருக்கின்றேன். செய[...] திரு. பொ. க. சுவாமிநாத செங்குந்[...] அதன் செயலகம் என் இல்லத்திலே[...] (76, கூத்தாடும் பிள்ளையார் கோயி[...] தெரு, திருக்காரணி, சைதை, சென்னை-1[...] இயங்கி வருகிறது. 53 செயற்கு[...] உறுப்பினர்கள் இருக்கிறார்கள்.

கடந்த பல ஆண்டுகளா[...] எஸ். எஸ். எல். சி., பிளஸ் இரண்[...] தேர்வுகளில் 60 விழுக்காடுகளுக்கு மே[...] மதிப்பெண்கள் பெறும் பிற மாவட்ட[...] களைச் சார்ந்த மாணவர்களாக இருந்[...] சென்னைப் பெருநகர சங்க எல்லைக்கு[...] வெற்றி பெறும் மாணவர்களுக்[...] பரிசளித்து வருகிறோம். இந்த ஆண்[...] விழாச் செலவும், மாணவர்களு[...] பரிசளித்ததும் சேர்த்து ரூ. 16,500.[...] மேலாகிவிட்டது. இத்தொகை நாங்[...] வைப்பு நிதியாக வைத்துள்ள [...] 1,65000-ல் இருந்து வரக்கூடிய வட்[...] பணமேயாகும். முதலீட்டைப் பெருக்[...] வேண்டுமென்பதே எங்கள் நோக்[...] அதிலிருந்து எக்காரணத்திற்கும் பண[...] எடுக்கக்கூடாது என்பதும் எங்[...] கொள்கை. எங்கள் சங்கத்திற்கென சை[...] வாத்தியார் சுப்பராய முதலி தெரு[...] ரூ. 2, 05,000- (ரூபாய் இரண்டு இலட்ச[...] ஐந்தாயிரம் மட்டும்) மதிப்புள்ள வீட[...] சைதை திரு. எஸ். நடராச செங்[...] தரிடமிருந்து சலுகை விலையில் பெற்றி[...] கிறோம். தற்போது இக்கட்டிடத்[...] புதுப்பிக்கும் முயற்சியில் ஈடுபட்[...] ளோம். இதில் வெற்றி பெறுவோம் என[...] நம்பிக்கையும் எங்களுக்குண்டு.

வாழ்க செங்குந்தர்! வளர்க செங்கு[...]
மகாஜன சங்கம்!
வெல்க முன்னேற்ற முயற்சிகள்!

# அண்ணாவின் ஆற்றல் மிக்க தமிழும் அளவுகடந்த சமுதாயப் பற்றும்

து பழனிபாண்டி
சங்க அமைப்புச் செயலாளர்
தென்னிந்திய செங்குந்த மகாசன சங்கம்



## 1. முன்னுரை

செங்குந்தர் குலச் செல்வங்களாம் அன்பு உடன்பிறப்புகளே! வணக்கம்.

நம் குலத்தலைவர் அண்ணன் சுத்தானந்தம, அண்ணன் பொதுச் செயலாளர் டாக்டர் செலவராஜ், அம்பேத்கார் மாவட்டத் தலைவர் அண்ணன் கோவிந்தராஜன் ஆகியோர்களின் ஆசியோடு என் மனதில் பட்ட அறிஞர் அண்ணாவின் பழைய வரலாறுகளை புரட்டிப் பார்த்து, அவைகளில் சிலவற்றை நமது இளைய சமுதாயத்தினர் புரிந்து கொள்ள வேண்டுமென்று இம்மலர் மணம் கமழ என் பங்கினையும் செலுத்தியுள்ளேன் என்பதைத் தெரிவித்துக் கொள்ள ஆசைப் படுகின்றேன். இம்மாநாடு ஒரு வரலாற்றுச் சிறப்பு மிக்க மாநாடாக அமையும் என்பதை நான் அறிவேன். ஒரு சில ஆண்டுகளுக்கு முன்பு இந்த மாவட்டத்தில் கிளைச்சங்கங்கள் திறப்பு விழா நிகழ்ச்சிகள் நடைபெறுவதற்கு, நம்குலத் தலைவர் திரு. ஜெ. எஸ். அவர்கள், பொதுச் செயலாளர் டி. ஆர். எஸ். அவாகள் மற்றும் என்னையும் வட ஆற்காடு அம்பேத்கார் மாவட்டத் தலைவரும் குடியாத்தம் திருவள்ளுவர் மேனிலைப் பளளியின் தாளாளர் திரு. கே. எம். கோவிந்தராஜன் அவர்கள், இளைஞர் அணித்தம்பிமார்கள் நடத்திய எழுச்சிமிகு ஊர்வலம் என் கண்களில் இனறும் நிழலாடுகின்றது.

அண்ணாவின் ஆற்றல்மிகு தமிழை, சிறப்பை, குறிப்பிடுவதற்குச் சில சான்றுகளை முன் வைக்கின்றேன். ஆரம்ப கால அரசியல் வரலாற்றில் மக்கள் சக்தியை எநத தலைவரும் ஈர்க்கவில்லை. ஈர்ககவும் முடியவில்லை.

இதை அண்ணா அவர்களே எழுதியதை நினைவு படுத்துகின்றேன. பேரறிஞர் அவர்கள் பழைய நீதிககட்சி மாநாட்டைக் குறிப்பிடும்போது,

''மாநாடு நடக்கும், இருபது கார்கள் வரும், இருபது சீமான்கள அதிலிருந்து இறங்கி வருவார்கள். அந்தச் சீமானகள் மேடைப் பேசசைக் கவனிப்பதைவிட, கார் ஓட்டிவந்த கார் டிரைவர்கள்தான பேச்சைக் கவனிப்பார்கள்'' என்பார்.

## 2. அண்ணாவின் தமிழில் மக்கள் சக்தி

அறிஞர் அண்ணாவின் ஆற்றல் மிகு தமிழ்ச் சொற்கள் தமிழ் மக்களைக் கவர்ந்தன. தூங்கிக் கிடந்த இதயத்தைத் தட்டி எழுப்பின அண்ணாவின் தமிழப் பேச்சைக் கேட்டுப் பொறாமைப்பட்டவர்கள் உண்டு.

அடுக்கு மொழியில் அண்ணாத்துரை இளைஞர்களைக் கவர்கின்றார் என்றார்கள். அதற்கு அண்ணா அவர்கள் நாசூக்காகப் பதிலளித்தார்.

அடுக்கு மொழியால் பேசினால்தான் தமிழ் மொழி அழகு பெறும் என்பதில்லை. வண்ணக் கலாபம் படைத்த மயிலுக்கு வான் கோழியின் சிறகைத் தோகையாகத் தரத் தேவையில்லை, முல்லைக்கு மணமும் தேனுக்கு இனிப்பும் ஏற்றத் தேவையில்லை. தமிழ் இயல்பாகவே இனிமையானது என்று தனக்கே உரிய தன்னடக்கத்தோடு குறிப்பிட்டார்கள். அதே குற்றச்சாட்டை மீண்டும் சொன்னபோது அண்ணா அவர்கள்,

"நான் பேசுகின்ற வார்த்தைகளிலே, வாக்கியங்களிலே இருக்கிற அடுக்குத் தொடர்களைவிட திருப்புகழிலே அதிகமாக இல்லையா? அடுக்குத் தொடர்கள் மேலேதான் மக்களுக்கு ஆர்வம் உண்டு என்றால் திருப்புகழ் பாடும் பஜனை மடத்தில் அல்லவா கூட்டம் கூடியிருக்க வேண்டும்? நான் பேசுகின்ற மாநாட்டிற்கும், பொதுக் கட்டத்திற்கும் ஏன் கூட்டம் கூடுகின்றது?" என்றார்கள் அண்ணா.

## 3. குடியாத்தம் நிகழ்ச்சி

அண்ணாவின் ஆற்றல் மிகு தமிழை, சிறப்பைக் குறிப்பிடுவதற்கு முன்னால் அண்ணாவிற்கும் குடியாத்தத்திற்கும் என்ன தொடர்பு இருந்தது என்பதை எண்ணிப் பார்த்தேன். ஒரு காலகட்டத்தில் பச்சைத் தமிழர் காமராஜர் முதன் முதலில் குடியாத்தம் சட்டப் பேரவைத் தொகுதி வேட்பாளராகப் போட்டியிடுவதற்குப் பயந்தாராம். ஏன் என்றால் நான் நாடார் சமுதாயத்தைச் சார்ந்தவன். ஆனால் அத்தொகுதியில் மிகப்பெரும்பான்மையோர் முதலியார் வகுப்பைச் சார்ந்தவர்கள், ஆதலால் வெற்றி வாய்ப்பு எனக்குக் குறைவாக இருக்குமென்று காமராசர் தந்தை பெரியார் அவர்களிடம் கூறினாராம்.

தந்தை பெரியார் அவர்கள் காமராசர் அவர்களைத் தட்டிக்கொடுத்து நீ கவலைப்படாதே, என் கருஞ்சட்டைப் படையின் தளபதி அண்ணாத்துரை இருக்கிறார். அவர் படை உங்கள் வெற்றியை உறுதி செய்யும், வெற்றி முகத்தோடு நீ வருவாய் எனக் காமராசரை வழி அனுப்பி வைத்தாராம்.

அந்த நேரம் அண்ணா தலைமையிலான தி.மு.கழகம் தேர்தலில் ஈடுபடாத நேரம். அப்பொழுது பெரியார் அவர்கள் அண்ணாவை அழைத்து காமராசரை வெற்றி பெறச் செய்வது உன் கடமை என்றார். தந்தையின் கட்டளையை ஏற்ற அண்ணா தம் தம்பியர்களைக் கலந்தாலோசித்து மறுநாளே செய்தித்தாளில் எழுதுகின்றார்.

"மணாளா! குணாளா! குலக் கொழுந்தே சென்று வா, குடியாத்தம், வென்று வா கோட்டைக்கு" என்ற அண்ணாவின் ஆற்றல் மிகு அருந்தமிழச் சொற்கள் அனைத்துச் செய்தித்தாள்களிலும் தலைப்புச் செய்தியாக வெளிவந்தது. மக்கள் உள்ளங்களில் தமிழன் வெற்றி பெற வேண்டுமென்ற எண்ணம் வளர்ந்தது.

காமராசர் வெற்றி பெற்றார். முதலமைச்சர் பொறுப்பைக் காமராசர் ஏற்றார். பச்சைத் தமிழன் ஒருவனை முதலவராக்கிய பெருமை அண்ணாவைச் சார்ந்தது.

குடியாத்தம் மக்களுக்குத் தமிழக அரசியலில் தமிழனை முதல்வராக்கிய பெருமையும் சேர்ந்தது, என்பதை இந்த மலரின் மூலம் நினைவு படுத்துகின்றேன்.

## 4. காமராசருக்கு அறிஞரின் பதில்

பிறகு ஒரு காலகட்டத்தில் அண்ணாவால் மணாளா, குணாளா, குலக்கொழுந்தே என்று அழைக்கப்பட்ட

பெருந்தலைவர் காமராசர் அவர்கள், முதலமைச்சராக, அகில இந்திய காங்கிரஸ் கட்சித் தலைவராக, உயர்ந்த நிலையில் உலகமெல்லாம் அண்ணாந்து பார்க்கக் கூடிய பொறுப்பிலே இருந்த நேரத்தில் அடுத்து நடந்த தேர்தலில் அண்ணாதுரை யின் கட்சிக்கு மரண அடி கொடுப்பேன் எனச் சாடினார்.

அண்ணா அவர்களும் அதே பாணியில் பதில் சொல்லியிருக்க முடியும். நிதானத் தோடு எழுதுகின்றார், "காஞ்சி" பத்திரிகையில்! இன்னும் கல்வெட்டாக என் மனதில் நிற்கின்றது.

"பெரிய இடத்திலிருக்கும் காமராசர் அவர்கள் ஒரு குத்துச் சண்டைப் பயில் வானைபோல மரண அடி கொடுப்பேன் என்று பேசலாமா?" என்று சொல்லிவிட்டு, அருந்தமிழ் உவமைகளைப் பயன்படுத்தி உவமைகளின் வங்கியாகத் திகழ்ந்த அண்ணா அவர்கள் அதற்கு விடை தந்தார்.

## 5. அறிஞர் அண்ணாவின் சமுதாய பற்று

ஆற்றல் மிகு தமிழ் நடை ஒரு செங்குந் தனுக்குத்தான் வரும் என்று நான் எண்ணியதுண்டு. அந்த வகையிலேதான் பல மேடைகளில் அண்ணா நமது சமுதாயத்தைச் சார்ந்தவர் என்று நான் பேசியதுண்டு; பேசியும் வருகின்றேன். இப்படிப் பேசிய காலகட்டத்தில் தான் சேலத்தில் நமது செங்குந்த மகாசன சங்கப் பொன்விழாவில் அண்ணாவின் திருவுருவப் படத்தை முன்னாள் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் சி. பா. அவர்கள் திறந்து வைத்துப் பேசும் போது அண்ணா அவர்கள் தம்மை ஒரு செங்குந்தன் என்று சொல்லிக் கொண்ட தில்லை. காரணம் அவர் ஒரு சமுதாயச் சீர்திருத்தவாதியாகவும், மிகச் சிறந்த அரசியல் மேதையாகவும் வாழ்ந்தவர். எனவேதான் அவர் தம் ஜாதியைச் சொல்லியதில்லை. ஆனால் அண்ணா பச்சையப்பன் கல்லூரியில் படித்தபோது பள்ளியில் சேருவதற்கான சான்றிதழில் தாம் ஒருசெங்குந்தர் (கைக்கோளன்) என்று குறிப்பிட்டிருக்கின்றார் என்று சி. பா. அவர்கள் கூறினார்கள்.

## 6. நெசவுத் தொழிலாளி நமது இயக்கத்தின் முதுகெலும்பு

ஒரு காலகட்டத்தில் அதே சேலத்தில் தான் கைத்தடியையே நம்பி வாழ்ந்து கொண்டிருந்த நமது மக்கள் தயார் செய்த கைத்தறி துணி தேங்கிவிட்டது. தமிழகத்தில் உள்ள கைத்தறி நெசவாளர்கள் பலநாள் வேலை கிடைக் காமல் கூலி கிடைக்காமல், தத்தம் ஊரிலிருந்து பிழைப்பு தேடி வெளியூர் செல்ல ஆரம்பித்தார்கள். இந்த நிலையைப் பார்த்த அண்ணா அவர்கள் அன்றைய ஆட்சியாளரின் கவனத்தை ஈர்க்கும் பொருட்டு கஞ்சித்தொட்டி திறந்து வைத்து ஏழை நெசவாளர்களுக்குக் கஞ்சி ஊற்றி கைத்தறித் துணிகளை வாங்கி உடுத்தி நெசவாளர்களுக்கு வாழ்வு கொடுங்கள் என்று கோட்டுக் கொண்டதுடன், "நெசவாளிதான் நமது இயக்கத்தின் முதுகெலும்பு," என்றுகுறிப்பிட்டார். நமது இயக்கத் தோழர்கள் அனைவரும் கைத்தறித் துணியையே உடுக்க வேண்டு மென்று சபதமேற்கொள்ள ஆணையிட் டார். பிறகு அண்ணா அவர் தன் தம்பிமார்களை ஒவ்வொருவரும் ஒவ்வொரு மாவட்டத்திற்குச் சென்று கைத்தறித் துணியைமூட்டை கட்டி எடுத்துக்கொண்டு வீதி. வீதியாகச் சென்று, 'மானம் காக்கும் நெசவாளர்களை வயிறு பிழைக்கக் கைத்தறி துணியை வாங்குங்கள்?' என்று பிரச்சாரம் செய்யச் செய்தார். அதன் பிறகே அரசாங்கத்திடமிருந்து கைத்தறி யாளருக்குப் பல சலுகைகள் கிடைத்தன தான் ஆடாவிட்டாலும் சதை ஆடும் என்பதற்கு அண்ணா இலக்கியமானார்.

## 7. நம்மவர்களால் என்றும் மறக்க முடியாத அண்ணா

உடன்பிறப்பே!

இன்றைக்குச் சென்னை, சேத்துப்பட்டு பகுதியில் உள்ள ஹாரிங்டன் சாலையில் நமது வள்ளல் சபாபதியார் அவர்களின் பெயரால் அமையப் பெற்ற மாணவர் இல்லம் ஒரு காலத்தில் சீர்கெட்டுப் போய்க் கிடந்தது. அப்படிக் கிடந்த அந்த இடம் இன்று மாங்குயில் பாடும் பூஞ்சோலை என்ற பாவேந்தரின் பாட்டுக்கொப்ப அழகு பெற்று விளங்குகிறது. அந்த இடத்தில்

ஒரு ஆங்கிலப்பள்ளியைச் சென்னை பல் கலைக்கழகத்தின் முன்னாள் துணைப் பதிவாளர் அண்ணன் திரு. சி. கே. குமாரசாமி அவர்கள் நடத்தி வருகின்றார்கள். அந்த இடம்,

அண்ணா காலத்தில் திராவிட முன்னேற்றக் கழகத்திற்காக வாங்கப்பட்ட ஓர் இடத்தை ஏதோ ஒரு சூழ்நிலை காரணமாக விற்க வேண்டுமென்று நினைத்தார். ஒரு செண்ட் நிலமாக இருந்தாலும், எந்த விலையாக இருந்தாலும், நாடார் சமுதாயத்தினர் வாங்கத் துடித்துக் கொண்டிருந்த நேரம். தாம் விற்க வேண்டுமென்று நினைத்த அந்த இடத்தை யாரிடமும் விற்க மனம் இல்லாமல் காஞ்சி மணிமொழியாரை அழைத்துத் தம் விருப்பத்தை அண்ணா கூறினாராம். நமது சங்கத்தற்காக அந்த இடத்தை வாங்கிக் கொள்ள அண்ணா கூறியதும் காஞ்சி மணி மொழியார் சங்கத்தின் தலைவரிடம் கூறி அந்த இடத்தைச் சங்கத்திற்காக வாங்கினார்கள். இந்த இனிமையான செய்தியை அண்ணா அவர்களோடு இளம் வயது முதல் பழகிவந்த அம்பேத்கார் மாவட்டத் தலைவர் கோவிந்தராஜன் அவர்களும்; அண்ணாவின் நேர்முக உதவியாளராக இருந்த சென்னை செங்கை மாவட்டச் செயலர் பி. கே. சாமிநாதன் அவர்களும் அடிக்கடி நினைவு படுத்துவார்கள். அண்ணா தாம் பிறந்த சமுதாயத்திற்குத் தம் பங்கையும் செய்துள்ளார்.

இந்தச் செங்குந்தர் இனம் அரசாண்ட இனம் என்பதையும் அண்ணா அவர்கள் முதலமைச்சராகப் பொறுப்பேற்றுப் பெருமை சேர்த்துள்ளார். அரசியல் வரலாற்றில் அழியாத புகழ்பெற்ற அண்ணா ஒரு செங்குநதர் என்பதில் எத்துணை பெருமை'

சுதந்திரப் போர்த் தியாகத்தில் திருப்பூர்க்குமரன், தில்லையாடி வள்ளியம்மை, கவிப்போரில் பாவேந்தர் பாரதிதாசன், மொழிப்போரில் கீழப்பழூர் சின்னச்சாமி ஆகியோர்களும் அண்ணாவைப் போல் நம் குலத்திற்குப் பெருமை சேர்த்தார்கள். செங்குந்தர் குலத்தில் தாம் தெய்வத் திருமகனார் முருகனுடைய பெயரைத் தாங்கிய திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள் அவர்களும் தோன்றினார்கள்.

இந்த அரும் பெருந் தலைவர்கள் தோன்றி நம் குலத்தைப் பெருமை படுத்தினார்கள் என்பதை எண்ணும் போது உள்ளம் பூரிக்கின்றது. மற்றும் இன்று திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள் நம்மோடு இருந்து நம்மை ஆசிர்வதித்து நம் குலத்திற்குப் பெருமை சேர்த்துக் கொண்டுள்ளார்கள் என்பதையும் நினைவூட்டுகிறேன்.

## 8. முடிவுரை

உடன்பிறப்பே!

எந்த மக்கள் சக்தியை அண்ணா அவர்கள் பெற்றாரோ அதைப் போலவே நம் குலததின் தலைவர் திரு. ஜே. சுத்தானந்தன் அவர்களும் சற்று ஏறக் குறைய அறுபதாண்டுகளுககுப் பின்னால் நம் சமுதாய மக்களின் ஒன்றுபட்ட சக்தியை ஈர்த்த பெருமை தலைவருக்குச் சாரும். இளங்குருத்துகளே! ஏற்றமிகு தலைவர் காட்டுகின்ற பாதையைப் பின் பற்றுவோம் என நம் சமுதாய நெஞ்சங் களை அழைத்து முடிக்கின்றேன்.

வாழ்க தலைவர்! வெல்க செங்குந்தம்!

### செங்குந்தர் தந்தவை

நிலைதந்தார் புவியினுக்கும் யாவருக்கும்
அபிமானம் நிலைக்கத் தந்தார்
கலைதந்தார் வணிகருக்குச் சீவனம்செய்
திடஎன்றே கையில் தந்தார்
விலைதந்தார் தமிழினுக்குச் செங்குந்தர்
என்கவிக்கு விலையதாகத்
தலைதந்தார் எனக்கொட்டக் கூத்தன்
எனப் பெயரினையும் தாம்தந்தாரே.

—ஒட்டக்கூத்தர்

# சமுதாயமும் — பெண் கல்வியும்

திரு சி காந்திதாஸ், M.A., B.L.

[தலைவர், மதுரை மாவட்ட செங்குந்தர் மகாஜன சங்கம்; துணைத்தலைவர், தலைமைச்சங்கம்]

வசந்த காலம் — இது ஆண்டிற்கு ஒரு முறை வரும். வாழ்வில் என்றோ ஒரு முறை வரும். சமுதாயப் பெண்கள் வாழ்வில் வசந்த காலம் என்றென்றும் நிலைத்து நிற்கவும், பொதிகைத் தென்றலின் புது மணத்துடன் நல்வாழ்வு நடத்திடவும் வேண்டும் என்பது செங்குந்தர் இனத்தைச் சேர்ந்த அனைவரது நெடுநாள் விருப்பமாகும்.

ஒரு சமுதாயம் முன்னேற வேண்டுமென்றால் அந்தச்சமுதாயத்தின் அங்கமான மக்கள் முன்னேற வேண்டும். 'விழித்த விழிதனில் மேதினிக்கு ஒளி செய்' என்பது பாவேந்தர் பாரதிதாசன் அவர்களின் கவிதை. அவ்வாறு ஒளி படைத்த கண்களோடு மக்கள் மிளிர வேண்டுமெனில் அவர்கள் உள்ளத்தில் உள்ள அறியாமை என்னும் இருள் அகற்றப்பட்டு 'கல்வி' என்னும் ஒளி விளக்கு ஏற்றப்பட வேண்டும். மக்களை மாக்களிடமிருந்து பிரிப்பது கல்வி. மக்களிடம் விழிப்புணர்ச்சி ஏற்படுத்துவது கல்வி. அவையில் பெருமைத் தேடித் தருவது கல்வி. கல்வி ஒன்றுதான் நம் இனத்தை உயர்த்தவல்லது.

மகளிர்க்கு கல்விதர மறுத்தது ஒரு காலம். அந்தக் கால கட்டத்தில்தான் அடுப்பூதும் பெண்களுக்கு படிப்பெதற்கு என்ற சொற்றொடர்கள் உருவாகியிருக்க வேண்டும். குழந்தை மணம் செய்வித்தல், பெண் குழந்தைகள் பிறந்தால் சாகடித்தல், இளம்விதவைகளின் பரிதாபமான வாழ்வு, உடன் கட்டை ஏறுதல் போன்றவைகள் தவறாகக் கருதப்படவில்லை.

ராஜாராம் மோகன்ராய், அன்னி பெசண்ட் அம்மையார் போன்ற சீர்திருத்தவாதிகளின் அரிய, சீரிய முயற்சியால், பெண்களுக்கு சமூகத்தில் ஒரு சிறப்பான இடம் உண்டு — இடம் தரப்படல் வேண்டும் என்ற எண்ணங்கள் மலரலாயின.

பெண்கள் தங்களுக்குரிய உயர்ந்த இடத்தை சமூக அமைப்பில் பெற வேண்டுமெனில் அதற்குத் தகுதியுடையவர்களாக வேண்டும். அந்தத் தகுதியை அவர்களுக்குப் பெற்றுத் தருவது கல்வி. கல்வி — கல்வியே ஆகும். இதனை உணர்ந்துதான் பெண் கல்வி நிலை பற்றி நாட்டுப் பற்று உள்ள நல்லவர்கள் எல்லாம் பேச ஆரம்பித்தனர். தமிழ்த் தென்றல் திரு.வி.க அவர்கள் பெண்ணின் பெருமை பற்றி எழுதிய எழுத்துக்கள் என்றும் நினைவில் வைத்துப் போற்றத் தக்கவை. வைக்கம் வீரர் தந்தை பெரியார் அவர்கள் தமிழ்ப் பெண்கள் மேம்பாடு அடைய அவர்கள் அனைவரும் கல்வி அறிவு பெற வேண்டும் என்று அயராது உழைத்ததையும் நாம் எண்ணிப் பார்க்க வேண்டும்.

'பழையன கழிதலும், புதியன புகுதலும் வழுவல — கால வகையினானே' என்று கூறியது நன்னூல் ஆசிரியர். அவ்வாறு பழைய எண்ணங்கள் கழிந்து புதுமைப் பெண்கள், புரட்சிப் பெண்கள் உருவாகத் தொடங்கி 40—50 ஆண்டுகள் கழிந்தும், நம் இனப் பெண்களின் நிலை இன்னும் கற்காலத்து நிலையிலேயே நிற்கின்றது. இன்றும் 'இவ பள்ளிக்கூடத்துக்கு போய்ப் படிச்சது போதும். போய் தார் சுத்தச் சொல்லு நாலு காசாச்சும் கிடைக்கும்', என்கின்ற வார்த்தைகள் நம் இன மக்கள் வாழ்கின்ற இடங்களில் எல்லாம் தினந்தோறும் ஒலித்துக் கொண்டு உள்ளன. நம் செங்குந்தர் இனம் முன்னேறாமல் முடங்கிக் கிடப்பதற்குக் காரணம், நமது இனப் பெண்களுக்கு உரிய கல்வி தராமல் இருப்பதேயாகும்.

ராணுவத்தில் பெண்கள், பெண் விமான ஓட்டிகள், ஐ.ஏ.எஸ். பெண் அதிகாரிகள், பெண்போலீஸ் அதிகாரிகள், மருத்துவர்கள், பொறியியல் வல்லுனர்கள், அரசு அலுவலகங்களில் பணி புரிபவர்கள் என்று படித்துப்பட்டம் பெற்று பதவியிலிருக்கும் பெண்களில் நம் இனப் பெண்கள் ஒரு விழுக்காடாவது இருக்குமா என்பது சந்தேகம். ஏன் இந்த அவல நிலை? நம் இனத்தவர் அனைவரும் பொருளாதாரச் சூழ்நிலையில் மிகவும் உயர்ந்து விட்-

டார்களா? அதுவும் இல்லையே. நம் சமுதாயப் பெண்கள் படிப்பதற்கு உரிய வாய்ப்பினை முழுமையாகத் தரப்படவில்லை, இன்று வரை.

குடும்பத் தலைவனும், தலைவியும் சேர்ந்து பொருள் ஈட்டுகின்ற குடும்பத்தில் எவ்வளவு வசதிகள் உள்ளன. இதை எண்ணிப் பார்த்தாயினும் பெண்களுக்குக் கல்விதர நம் இனத்தவர் முன் வர வேண்டாமா?

கல்வி கற்று நல்லதொரு வேலையில் இருக்கும் பெண்களினால் பொருளாதாரப் பிரச்சினைகள் தீரும் என்பது மட்டுமல்லாமல் கல்வி கற்ற பெண்களால் மேலும் பல சிறப்பான நன்மைகள் உண்டாகும். படித்த பெண்கள் தங்களது குழந்தைகளின் கல்வியில் மிக்க அக்கறை செலுத்துவார்கள். அவர்களை நல்ல பண்பாடுடைய, ஒழுக்கமுள்ளவர்களாக வளர்ப்பதில் மிகவும் கண்ணும் கருத்துமாய் இருப்பார்கள். நல்ல பொறுப்புணர்வுடன் வளர்க்கப்படும் சிறுவரும் சிறுமியரும் நாளைய நல்ல மக்களாய் உருவாகும் போது நமது சமுதாயம் முன்னேறும். நாடு முன்னேறும். படித்த பெண்கள் குடும்பத் தலைவிகளாக இருக்கும் குடும்பம், நல்லதொரு பல்கலைக்கழகமாக அமையும் என்பதில் சந்தேகமில்லை.

தமிழக அரசு பெண்களின் மேம்பாட்டிற்காகப் பல நல்ல திட்டங்களை அறிவித்திருக்கிறது. ஆரம்பக் கல்விக் கூடங்களில் இனிப் பெண்கள் மட்டுமே ஆசிரியர் பணியில் அமர்த்தப்படுவர் என்பது ஒன்றாகும். சுய வேலை வாய்ப்புத் திட்டங்கள். தனியாகத் தொழில் தொடங்க மகளிர் முன்வந்தால் அவர்களுக்கு முன்னுரிமை என்பன போன்ற பல அரிய வாய்ப்புகளை போதிய கல்வித் தகுதி இல்லாத காரணத்தினால் நம் சமுதாய மகளிர்கள் நழுவ விடுகின்றனர். இது மட்டுமல்ல. அரசு வேலைகளில் 30 விழுக்காடுகள் மகளிர்க்கென்றே ஒதுக்கப்படும் இந்த தருணத்தில் அந்த வாய்ப்பினை நாம் பயன்படுத்திக் கொள்ள வேண்டாமா?

'நாய் என்று பெண்ணை நவில்வார்க்கு இப்புவிக்குத் தாய்' அவள் என்பதை நாம் புரிந்து கொள்ள வேண்டும். தங்களது கடமைகளை மட்டும் செய்து வரும் மகளிர் தங்களது உரிமைகளைப் புரிந்து கொள்ள அவர்களுக்கு கல்வி அறிவு அவசியமாகும். பெண்கள் விழிப்புணர்வு பெற வேண்டும். உறங்கிக் கிடக்கும் நம் இன மகளிர் பட்டப் படிப்பு, தொழில் கல்வி, மருத்துவம், அறிவியல் போன்ற எல்லாத் துறைகளிலும் உயர்மட்டப் படிப்பு பெறுதல் வேண்டும். இனிப் பூமியில் பட்டங்கள் ஆள்வதும், சட்டங்கள் செய்வதும் பாரினில் பெண்கள் நடத்த வேண்டும் என்ற பாரதியின் புதுமைப் பெண்கள் கூறும் மொழி, நம் குலப் பெண்களின் மொழியாக மாற வேண்டும்.

முன்னோடிகள், மூத்தோர்கள் இதை எடுத்துக் கூறலாம். ஏட்டில் எழுதலாம். ஆனால் அதை நடைமுறைப்படுத்துவது இளைஞர்கள் கையில் உள்ளது. உணவு, உடை உறைவிடம் போன்றே கல்விக்கும் உரிய இடம் நமது வாழ்வில் தரப்பட வேண்டும்.

சமுதாயப் பெரியவர்கள் வாழ்க்கை நதியில் கரை புரண்டு வெள்ளம் ஓடிய காலங்கள் உண்டு. அவர்கள் எதிர் நீச்சல் போட்டுக் கரையேறி ஒதுங்கி நிற்கின்றார்கள். ஆற்றினில் வெள்ளம் வடிந்து ஓய்ந்து, நதியின் மத்தியில் சுரக்கின்ற ஊற்று நீராக அவர்கள் தற்சமயம் இருக்கின்றார்கள். நமது சமுதாயத்திற்கு நிழல் தந்த பல ஆலமரங்கள் விழுந்து விட்டன. இனி எதிர்காலம் இளைஞர்கள் கையில்.

கனவுகள் கற்பனைகள் சிலருக்கு சாதனை புரிய வேண்டும் என்கின்ற கனவுகள்; பலருக்கு கோடி, கோடியாய் பொருள் ஈட்ட வேண்டுமென்கின்ற கனவுகள்; மகான்கள், மகாத்மாக்கள் கனவு கண்டார்கள். உலகம் உயர்ந்தது.

சமுதாய முன்னோடிகள், மூத்தோர்கள் நமது சமுதாயப் பெண்கள் படித்து வாழ்வில் சகல துறைகளிலும் முன்னேற வேண்டும் என்கின்ற கனவுகளைக் காண்கின்றோம்.

இந்தக் கனவு நனவாக மலர வேண்டும். இளைஞர்களே! வீறு கொண்டு எழுங்கள். துடிப்புடன் செயல்படுங்கள்; துள்ளி வரும் வேல்களாகவும், ஆவேசத்தை அள்ளிவரும் வாள்களாகவும் செயல்படுங்கள். சிட்டுக் குருவிகளாய், சிங்கக் குட்டிகளாய் சிறந்த முறையில் திட்டம் வகுத்துக் கொண்டு செயல்படுங்கள். உங்கள் பணிகள் சிறந்தோங்க சமுதாயப் பெரியவர்கள் வாழ்த்துகிறார்கள். அவர்கள் செவி குளிரும் செய்திகளைத் தாருங்கள்.

வீழ்ந்த சமுதாயம் வீறு கொண்டு எழட்டும். எழுந்திடும். எழுந்தே தீரும். ★

# திருப்புமுனை...

எஸ். பி. முனுசாமி எம்.ஏ., எம்.எட்.
திருப்பத்தூர்

இன்று நம் முன் நிகழ்வதைச் செய்தி என்பர், அன்று நடந்ததை வரலாறு என்பர், தொன்று விளைந்ததைப் புராணம் என்பர் அறிஞர் பெருமக்கள்.

புராணப் பழைமையும், பெருமையும் இல்லாத நாடு, உயிர் இல்லாத வெற்றுக் கூடு போன்றதாகும். செங்குந்தர்களின் தோற்றமும், ஏற்றமும் பற்றிப் பேசும் "கந்த புராணமே" நமது சொந்தப் புராணமும் ஆகும். கந்தக் கடவுளே நம் சொந்தக் கடவுள். செங்குந்தமும், ஈட்டியும் ஏந்திய வீரவாகுத் தேவரின் வழித் தோன்றல்களே பிற்காலச் செங்குந்த மரபினர் ஆவர்.

ஒரு நாடு முன்னேற்றமடைய வேண்டுமானால் சிறந்த அரசியல் அமைப்பு வேண்டும். அது போலவே முற்கால மக்கள் ஒற்றுமையுடன் வாழவும், தங்களின் தேவைகளைப் பெருக்கிக் கொள்ளவும், ஒவ்வொரு சமுதாய மக்களும் தங்களுக்குப் பாடுபடுகின்ற சான்றோர்கள் அடங்கிய குழுக்களை அமைத்துக் கொண்டனர். அக்குழுக்களே பிற்காலத்தில் அந்தச் சமுதாயத்தின் சங்கமாக மாறியது.

ஆன்மீக அறிவைப் பெருக்கவும், ஒழுக்கத்தைக் கற்பிக்கவும் மக்கள் மத அடிப்படையில் ஓரினமாக இணைந்தனர். மொழியாலும், பழக்க வழக்கங்களாலும் பல பிரிவுகள் தோன்றின. அப்பிரிவுகளில் ஒன்றுதான் "செங்குந்தர் மகாஜன சங்கம்."

செங்குந்தர் சமுதாயம் வேங்கடம் முதல் குமரி வரையுள்ள தமிழ் கூறும் நல்லுலகம் மட்டுமல்ல இந்தியாவின் பல பகுதிகளிலும், இலங்கை, பர்மா, சிங்கப்பூர் போன்ற நாடுகளிலும் பரவியுள்ளனர். இச்சமுதாய மக்கள் வீரத்திற்கும், அறிவுக்கும் தகுதியுடையவர்கள். ஆம், இத்தனையும் இது பண்டைக் கால நிலை, இன்று பெரும் பகுதி செங்குந்தர் வறுமையாலும், கல்வியறிவின்மையாலும் வாடி, வதங்கி, வருந்தி அலைகின்றனர். இந்நிலையிலுள்ள இப் பழம் பெரும் சமுதாயத்தை ஒரு சிறந்த சமுதாயமாக உயர்த்துவது யார்? எவர் இப்பொறுப்பினை ஏற்பர்? அஃது இளைஞர்களின் கைகளில் இருக்கிறது; பெரியவர்களின் அனுபவத்தைக் கொண்டும் அவர்களை வழிகாட்டியாகக் கொண்டும் இளைஞர்களால் இச்செயலை நிறைவேற்ற முடியும். அதற்குரிய வழிதான் என்ன?

கல்வியறிவு இல்லாத எந்தச் சமூகமும் தொழில்துறை, கல்வித்துறை, பொருளாதாரத் துறை, அரசியல்துறை போன்ற எந்தத் துறையிலும் முன்னேற்றம் அடைய முடியாது. ஆகவே செங்குந்த மகாஜனப் பெரியவர்கள் கல்வியின் பயனை உணர்ந்து, அறிவாளிகளையும் — கல்விமான்களையும் — பிற துறை வல்லுனர்களையும் உருவாக்க மாணவ—மாணவிகளைத் தயார்ப்படுத்தப் பொறுப்பேற்றுக் கொள்ள வேண்டும். அதற்கு அனைவரும் ஒத்துழைப்பு தர வேண்டும்.

தவிர்க்க முடியாத கட்டத்தில் நம் குல இளைய செல்வங்கள் நெசவுத் தொழிலில் புக நேர்ந்தாலும்வருத்தப்படக்கூடாது. இன்றைய அறிவியல் வளர்ச்சிக்கு ஏற்ப நெசவுத் தொழிலை நவீனப்படுத்த வேண்டும். குறிப்பிட்ட சில துணி ரகங்களைக் கைத்தறி நெசவிற்கே ஒதுக்க அரசை நம் சங்கம் வற்புறுத்த வேண்டும். காலில் ஒரு முள் தைத்தால், உடல் முழுமையும் அவ்வலி பிரதிபலிப்பதைப் போல, யாதேனும் ஓரிடத்தில் நம் இன மக்களுக்கு ஏற்படும் துன்பத்தினைப் போக்க, நம் அனைவருக்கும் பரிவுணர்வு ஏற்பட வேண்டும்.

அடுத்து நம்மவர்களிடையே ஒற்றுமை உணர்வைப் பெருக்கிக் கொள்ள வேண்டும். பட்டம் — பதவி — தொழில்நுட்பம் பெற்ற நம்குல அறிஞர் பெருமக்கள் தாமாகவே முன் வந்து மற்றவர் ஏற்றம் பெற உதவி செய்ய வேண்டும். அதற்கு நம் சங்கம் பாடுபட வேண்டும்.

தொழில்நுட்ப, மருத்துவக் கல்லூரிகளில் சேர்க்கை மற்றும் வேலை வாய்ப்பு ஆகியவற்றில் அறிவு மிகுந்த, முற்பட்ட சாதியின

ரிடம் போட்டியிட நம்குல மாணவச் செல்வங்களை சிறு வயதிலிருந்தே தயார் செய்வதற்கு, நம் சங்கம் ஒவ்வொரு ஊரிலும் ''அமைப்பு'' ஒன்றை ஏற்படுத்த வேண்டும். அதில் பெற்றோர்கள், ஆசிரியர்கள், பிற தொழில் நுட்ப வல்லுனர்கள் பங்கு பெறச் செய்ய வேண்டும். இவை எல்லாம் நமது நெஞ்சங்களில் குறிக்கோளாக இடம் பெற வேண்டும். அதற்கு நம்மிடையே அரசியலுக்கு அப்பாற்பட்ட ஒற்றுமை இருக்க வேண்டும்.

திருப்பத்தூரில் செங்குந்தர் : எங்கள் திருப்பத்தூர்ப் பெருநகரம் ஒரு திருப்பத்தை ஏற்படுத்தி வருகிறது. இங்கு சிறப்புடன் வாழ்ந்து வரும் குணமிகு திரு. வே. கணபதி செங்குந்தர் தலைமையில், ''செங்குந்த சங்கம்'' பெருமையுடனும், நன்முறையிலும் இயங்கி வருகிறது.

செங்குந்தர் கல்விச் சங்கம் என்னும் அமைப்பின் மூலம், நம்குல ஏழை மாணவ—மாணவிகளுக்கு ஆண்டுதோறும் நோட்டுப் புத்தகம், எழுது பொருள்கள் முதலிய தேவைகளை இலவசமாகக் கொடுத்து உதவி புரிந்து வருகிறார்கள். இக்கல்விச் சங்கம் அன்புமிகு டி. சுப்பிரமணியம், திரு. வே. கணபதி முதலியார், திரு. ஈ. சுப்பிரமணி, திரு. என். கே. தண்டபாணி ஆகிய சான்றோர் பெருமக்களின் சேவையில் 1980ஆம் ஆண்டு முதல் இயங்கி வருகிறது.

செங்குந்தர் இளைஞர் அணி என்னும் அமைப்பில் திரு. கு. சம்பத்குமார் தலைமையில் இவ்வூரில் நடைபெறும் திருவிழா மற்றும் நமது சமூக நிகழ்ச்சிகள் சிறப்புடன் நடைபெற அரும்பணி ஆற்றி வருகிறது.

செங்குந்த மாணவர் சிறப்புப் பயிற்சி கல்விச் சங்கம் என்னும் அமைப்பு செங்குந்தர் தலைவர் திருமிகு வே. கணபதி செங்குந்தரைப் புரவலராகவும், நல்லாசிரியர் பட்டம் பெற்ற திரு. ப. கனகசபாபதி எம்.ஏ., எம்.எட். ஓய்வு பெற்ற தலைமையாசிரியர் அவர்களைத் தலைவராகவும், ஆற்றல் மிகு திரு. துரை. மணி பி.எஸ்.சி., எம்.எட். அவர்களைச் செயலாளராகவும், திருமிகு ப. அச்சுதன் அவர்களைப் பொருளாளராகவும் கொண்டு இயங்கி வருகிறது. திருப்பத்தூர் மற்றும் அதன் சுற்றுப்புறக் கிராமங்களில் படித்துக் கொண்டிருக்கும் 10, +2 வகுப்பு நம்குல மாணவ—மாணவிகளை வரவழைத்து, மாலை நேரத்தில் ஸ்ரீராம நிலையத்தில் அறிவும், ஆற்றலும், சேவையும், சுறுசுறுப்பும் நிறைந்த நம்குல ஆசிரியர்களைக் கொண்டு சிறப்பு வகுப்புகளை நடத்தி வருகின்றது. இதற்கு ஆகும் செலவை நம் குலச் செல்வர்களும், வள்ளல்களும் பெருநிதி வழங்கி ஓர் அறக்கட்டளை ஏற்படுத்தி ஈடுகட்டுகிறார்கள்.

''அன்பு மனம் அறிவுநலம்,
ஆர்வத்தின் தனிப்பிறவி!
பொங்கும் நல்லாற் றலினால்
பொதுப்பணிக்குத் தனை ஈந்த
எண்ணற்ற செயலவீரர் பலர்உளர்
அவர்களுக்குக் காவலராய்! புரவலராய்!
செங்குந்தர் பெருந் தலைவராய்
விளங்குபவர் பெருவணிகர்
திருவே. கணபதி முதலியாரே!''

மேலும் இந்நகரில் ''செங்குந்தர் இன அரசு அலுவலர் கூட்டமைப்பு'' ஒன்று தொடங்கப் பட்டுள்ளது. இக்கூட்டமைப்பு இரண்டு மாதங்களுக்கு ஒரு முறை கூடி முக்கிய செய்திகளைப் பறிமாறிக் கொள்கிறது.

இந்நகரில் சங்கம் வளரவும் நம்குல மக்களின் மேன்மைக்காகவும் அரும்பெரும் தொண்டுகள் புரிந்து புகழ் படைத்தோர் பலர்.

அவர்களுள், தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் தலைவராகப் பொறுப்பேற்று 23 ஆண்டுகள் அரும்பணிகள் பல புரிந்தவர் பெரும்புலவர் அமரர் திரு. கா. அ. சண்முக முதலியார். அன்னாரின் திருமகனார் அருட்செல்வர் அமரர் திரு கா. அ. ச. பத்மநாப முதலியார் அவர்கள் ''தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் துணைத் தலைவராகவும், வடஆர்க்காடு மாவட்ட செங்குந்த சங்கத்தின் தலைவராகவும், இருந்து அரும் பெரும்பணிகளைச் சிறப்புடன் செய்துள்ளனர். முன்னாள் சட்ட மன்ற உறுப்பினர் அமரர் திரு. V. சண்முக முதலியார் அவர்களும் நம்குல மக்களின் மேன்மைக்காக அரும்பணி புரிந்தவர்களுள் குறிப்பிடத்தக்கவர்.

தற்பொழுது முன்னாள் சட்டமன்ற உறுப்பினர் அன்புமிகு திரு. S.P. மணவாளன் அவர்களும், இன்னாள் சட்டமன்ற உறுப்பினர் அன்பு மிகு திரு A. K. C. சுந்தரவேல் அவர்களும் மற்றும் பலரும் நம்குல மக்களின் மேன்மைக்காகவும் வளர்ச்சிக்காகவும் அரும் பெரும் பணிகளைச் சிறப்புடனும், மகிழ்ச்சியுடனும் செய்து வருகின்றனர்.

இது போன்ற அமைப்புக்களை ஏற்படுத்தி நம்குல மக்கள் வசிக்கும் பிற நகர, கிராமங்களில் கடைப்பிடிக்க நாம் அனைவரும் ஒன்றுபட்டு நடவடிக்கை எடுக்க வேண்டும்.

விழிப்படைவோம்! வெற்றி பெறுவோம்!

# திருவண்ணாமலை சம்புவாரயர் மாவட்ட செங்குந்தர் சங்க வரலாறு

## புலவர். கோ. இளையபெருமாள்

கொள்கை விளக்கச் செயலாளர், ஆரணி,



வடார்க்காடு மாவட்ட செங்குந்தர் சங்கம் 21-1-1984 அன்று திருப்பத்தூர் அமரர் கே. ஏ. எஸ். பத்நாப முதலியார் அவர்கள் தலைமையில் குடியேற்றம் வேதாந்த தமிழ் வாசக சாலையில் தொடங்கப்பட்டது. தென்னிந்திய செங்குந்த மகாசன சங்கத்தின் விதிமுறைகளைப் பின்பற்றிப் பிரிவினையற்ற இம்மாவட்டத்தில் தலைவர் மற்றும் பொறுப் பாளர்கள் சுற்றுப் பயணம் செய்து கிளைச் சங்கங்களை நிறுவி சமுதாய மேம்பாட்டுக்குரிய ஆக்கப் பணிகளைச் செய்து வந்தனர். மாநில சங்கத்தின் முன்னாள் தலைவர் கைத் தறிக் காவலர் பத்மஸ்ரீ எம்.பி. நாச்சிமுத்து அவர் களின் வேண்டுகோளின்படி மாவட்ட முழுதும் செங்குந்தர் மக்கள் தொகைக் கணக்கெடுப்புப் பணியை இனிது முடித்துத் தலைமைச் சங்கத் திற்கு அனுப்பப்பட்டது.

உ.—5

தமிழக அரசு ஆணைப்படி 1984-ல் அம்பா சங்கர் ஐ. ஏ. எஸ். அவர்கள் தலைமையில் அமைக்கப்பட்ட குழுவினர் பிற்படுத்தப்பட்ட மக்களைச் சந்திக்க மாவட்டத் தலைநகருக்கு வருகை தந்த போது செங்குந்த மரபினரை மிகவும் பிற்படுத்தப்பட்டவர் பட்டியலில் சேர்க்க வேண்டுமென மாவட்ட சங்கத்தின் சார்பில் கோரிக்கை மனு கொடுக்கப்பட்டது.

எஸ். எஸ். எல். சி. மற்றும் (+2) அரசு பொதுத் தேர்வில் உயர்ந்த மதிப்பெண் பெற்ற முதல் மூன்று மாணவ மாணவியருக்குத் தனித்தனியே ஊக்கப் பரிசு வழங்கப்பட்டு. தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் முன்னாள் தலைவர் பெரியவர் கா. அ. சண்முக முதலியார் அவர்களின் நூற்றாண்டு விழாவைத் திருப்பத்தூரில் இம்மாவட்ட சங்கத்தின் சார்பில் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது.

30-9-1989 முதல் வடார்க்காடு மாவட்டம் இரண்டாகப் பிரிக்கப்பட்ட பின், திருவண்ணா மலை சம்புவாராயர் மாவட்ட செங்குந்தர் சங்கமும் தனியேபிரிக்கப்பட்டது. ஆரணி ஆர். என். சாமி ஜவுளி அதிபர் திருவாளர் ஆர். நாராயணசாமி அவர்கள் தலைமையில் சங்கப் பொறுப்பாளர்கள் தேர்ந்தெடுக்கப் பட்டன.

இம்மாவட்டத்தில் ஆறு வட்டங்கள் உள்ளன.

1. ஆரணி, 2. செய்யாறு, 3. வந்தவாசி, 4. செங்கம், 5. திருவண்ணாமலை, 6. போளூர் கிளைச்சங்கங்களின் எண்ணிக்கை 56 அடிப்படை உறுப்பினர்களின் எண்ணிக்கை 4333. அவ்வப்போது சங்கப் பொறுப்பாளர் கூட்டமும் செயற்குழு கூட்டமும் கூட்டி மாவட்ட தலைவர் திரு. ஆர்.என்.சாமி அவர்கள், ஆக்கமும் ஊக்கமும் ஊட்டி வருகின்றார்.

மண்டல் குழு அறிக்கையை நடைமுறைப்படுத்தவும் செங்குந்தரை மிகவும் பிற்பட்டோர் பட்டியலில் சேர்க்கவும் மத்திய மாநில அரசினை வற்புறுத்தி 5-11-1990ல் தலைமைச் சங்கத்தின் அறிக்கையின்படி திருவண்ணாமலையில் மாவட்ட ஆட்சித் தலைவர் அலுவலகத்தின் முன் எழுச்சிப் பேரணி நடத்தி ஒரு நாள் அடையாள உண்ணாவிரதம் இருந்து மாவட்ட ஆட்சித் தலைவரிடம் மாவட்டத்தின் சார்பில் கோரிக்கை மனு கொடுக்கப்பட்டது.

1991ஆம் ஆண்டு தமிழக அரசு பொதுத் தேர்தலில் வெற்றி பெற்ற நம் இன சட்டமன்ற உறுப்பினர்களுக்கும் நல்லாசிரியர் விருது பெற்ற ஆசிரியர்களுக்கும் பாவேந்தர் நூற்றாண்டு விழா கவிதைப் போட்டியில் வெற்றி பெற்ற காஞ்சி புலவர் இரா. சுப்பிரமணியன் அவர்களுக்கும் பாராட்டு விழா நடத்தப்பட்டது. எஸ்.எஸ்.எல்.சி. மற்றும் (+2) தேர்வில் உயர்ந்த மதிப்பெண் பெற்ற மாணவ மாணவிகளுக்கு ஊக்கப் பரிசும் சான்றிதழும் வழங்கப்பட்டன. 30-11-91ல் மேற்படி விழா நிகழ்ச்சிக்கு செய்யாறு வட்டம் அசனம்மாப்பேட்டை கிளைச் சங்கமும் சமுதாயமும் ஏற்பாடு செய்து மாநிலத் தலைவர் திரு. ஜெ. சுத்தானந்தம் அவர்களையும் மாவட்டத் தலைவர் திரு. ஆர்.என். சாமி அவர்களையும் மற்றும் மாவட்ட சங்கப் பொறுப்பாளர்களையும் வரவேற்றுச் சிறப்புச் செய்தமை குறிப்பிடத்தக்கது.

இம்மாவட்ட சங்கத்திற்குக் கௌரவத் தலைவராகவும் புரவலராகவும் இருக்க நம் குலகுரு அருள்மொழி அரசு திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள் அன்புடன் இசைந்து அருளாசி வழங்கியுள்ளார்.

தலைவர் :

திரு. ஆர். நாராயணசாமி
(ஆர். என். சாமி)
ஆர். என். சாமி ஜவுளி ஸ்டோர்,
ஆரணி-632 301.

பொதுச் செயலாளர் :

திரு. அ. குப்புசாமி,
94-95, பெரியகடை வீதி,
திருவண்ணாமலை-606 601.

பொருளாளர் :

திரு. பி. டி. அருணாசலம்,
முள்ளிப்பட்டு-632 316.

வாழ்க நம் இன மக்கள்!
வளர்க செங்குந்த மகாஜன சங்கம்



# இல்லாமையைப் போக்க இருப்பதைக் காப்போம்

**K. S. கல்யாணசுந்தரம், பி.காம்**
மண்டலச் செயலாளர்

கயிலாயப் பரம்பரையைச் சேர்ந்த வீரபாகுத் தேவர் உள்ளிட்ட நம் வீரர்கள் வழிவந்தோரும், திருமுருகப்பெருமானைக் குலக் கடவுளாகக் கொண்டு தொண்டுள்ளத்துடன் வாழ்ந்து வருவோருமான செங்குந்தர் இன மக்கள் உழைப்பாலும், நேர்மையாலும், "செய்யுந் தொழிலுக்கு நிகரில்லை" என்பதைக் கருத்திற் கொண்டு நாடு முழுவதுமாக கிராமம், நகரங்களிலெல்லாம் பரவியுள்ளனர் என்றால் அது மிகையாகாது. எண்ணிக்கையில் இது போது எழுபது லட்சம் பேர் இருக்கலாம் என்றாலும், அதைத் துல்லியமாகக் கணக்கெடுத்துக் கூற இயலாமலுள்ளது.

தென்னிந்திய செங்குந்த மகாசன சங்கம் தொடங்கி அறுபத்தி ஆறு ஆண்டுகளாகியும், செங்குந்தர்கள் வாழும் இடங்களை முழுமையாக அறிந்து அளவிட முடியவில்லை. சமுதாய மக்களிடையே விழிப்புணர்வையும், ஒற்றுமையையும் வளர்க்க குரலோசை எழுப்பி வரும் செங்குந்த மித்திரன் மாத இதழ் அனைத்து இடங்களுக்கும் பயணமாகாமல் உள்ளதே காரணமாகும். குறிப்பாகத் தமிழ் நாட்டில் மட்டும் ஆயிரத்து இருநூறுக்கு மேற்பட்ட சிற்றூர், பேரூர்களில் வாழ்ந்து வரும் செங்குந்தர்கள் அனைவரும் அவர்கள் பகுதியில் தங்களுக்கெனச் செங்குத்தர் சமுதாயச் சங்கங்கள் ஏற்படுத்திக் கொண்டு தென்னிந்திய செங்குந்த மகாசன சங்கத்தில் இன்னமும் இணைத்துக் கொள்ளாமல் உள்ளனர். சங்க அமைப்பின் அவசியத்தை உணராமல் இருப்பதே இதற்குப் பொருளாகும்.

ஈரோடு தந்த எங்களின் எழுச்சி மிகு வீரர், நெசவாளர் நேசன், செங்குந்த மக்களின் தளபதி திருமிகு. ஜெ. சுத்தானந்தன் அவர்கள் மாநில சங்கத்தின் தலைமைப் பொறுப்பேற்ற பின்னர் அவருடைய ஆர்வத்தினாலும் சமுதாயப் பற்றுடன் பழகும் பேராற்றலாலும், அவர் மேற்கொண்டு வரும் அயராத பயணத்தினாலும் நிறைய கிளைச் சங்கங்கள் துவக்கப்பட்டு, செங்குந்தமித்திரன் மாத இதழ் வாங்குவோர் பட்டியலும் பெருகி வருகிறது. செங்குந்தர்கள் இருபத்தைந்து குடும்பங்களுக்குக் குறையாமல் இருக்கும் இடங்களிலெல்லாம் எல்லோரையும் உறுப்பினராகக் கொண்டு சங்கக் கிளைகள் ஆரம்பிக்கப்பட வேண்டும். கிராமமாக இருந்தால்கிராமத்திற்கு ஒன்றும்,நகரமாக இருந்தால் வார்டுக்கு ஒன்றுமாக கிளைகள் அமைத்துச் செயல்படலாம். பதினேழாம் மாநாடு காணும் குடியாத்தம் நகரம் இதற்கு முன்னுதாரணமாக உள்ளது என்பதைப் பெருமையுடன் கூறலாம்

ஒவ்வொரு கிளைச் சங்கத்திலும் பொறுப்பு ஏற்கும் சங்க நிர்வாகிகள் மற்றும் செயற்குழு உறுப்பினர்களில் பத்து பேருக்கு குறையாமல் செங்குந்தமித்திரன் இதழ் பெறும் ஆயுட் சந்தா தாரர்களாக ஆக வேண்டும். அத்துடன் அவர்கள் மாநில சங்கத்தின் ஆயுள் உறுப்பினராவதும் விரும்பத்தக்கது. ஆயுள் சந்தா கட்டுவதற்கு வசதியில்லாத உறுப்பினர்களிடம் 'மித்திரன்' இதழ் பெற ஆண்டுச் சந்தா செலுத்துமாறு செய்ய லாம்.கிளைச் சங்கங்களின் செயல்பாடுகளை வட்டம் மாவட்டம் மற்றும் தலைமைச் சங்கத்திற்கு தவறாமல் தெரிவித்து வரு வதுடன் மாவட்ட, மாநில சங்க செயற்குழுக் கூட்டங்களில் பங்கேற்கவும், நிர்வாகிகளை ஊக்குவிக்கவும் வேண்டும்.

செங்குந்தரின் குலத் தொழிலாகவுள்ள நெசவுத் தொழில் போதிய வருவாய் கிடைக்காமையால் இயந்திரமாக மாறி வரு வதையும், வசதி வாய்ப்பற்றோர் பெருமளவில் பழைய நிலை யிலேயே இருப்பதையும் காண்கிறோம். இத் தொழிலில் ஈடு பட்டோரின் குடும்பங்கள் ஒன்று சேர்ந்து செயல்படுவதற் கேற்ப நம் முன்னோர்களின் பெரு முயற்சியினால் பாவடி நிலங்கள் ஒதுக்கித் தரப்பட்டுள்ளன. இந்நிலங்களின் விஸ்தீரணம் மற்றும் சர்வே எண் விவரங்கள் ஆங்காங்குள்ள நம் பெரியோர்களிடமும், அரசு பதிவுத் துறை அலுவலகத் திலும் இருக்கும்.

பெருகிவரும் மக்கள் தொகைக்கேற்ப வாகனப் போக்கு வரத்துக்கும் சாலை உபயோகிப்பாளருக்கும் எவ்வித இடை யூறும் ஏற்படக் கூடாது என்பதை நம் முன்னோர்கள் பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே எண்ணி, அரும்பாடுபட்டு நமக்குப் பெற்றுத் தந்துள்ள பாவடி தோப்பு (அ) பாவடி நிலங்களை நம் சமுதாயப் பெருமக்களும், இப்போது அமைக் கப்பட்டு அப்பகுதிகளில் செயல்பட்டு வரும் கிளைச் சங் நிர்வாகிகளும், இளைஞர்களும், ஒற்றுமையுடனும் உறுதி யுடனும் பிறர் கைப்பற்றிக் கொள்ளாமல் காப்பாற்ற வேண்டி யது அவசியமாகிறது.

கைத்தறி நெசவுத் தொழில் செய்வோர் எண்ணிக்கையில் குறைந்து வருவதனால் எல்லோரும் வசதி படைத்தவராகி விட்டதாகக் கருதுவதற்கில்லை, அனைவருக்கும் பயன்படக் கூடிய அளவில் கூட்டுறவு முறையில் விசைத்தறிகளும், வீடில்லாதவர்களுக்கு வீட்டுமனை போட்டு வீடு கட்டிக் கொள் ளவும், பள்ளிக்கூடங்கள், சமுதாய கூடங்கள் மற்றும் திரு மண மண்டபங்கள் கட்டுவதற்கும் அந்த இடங்களைப் பயன் படுத்தலாம் அதன் மூலம் பொருளாதார ரீதியாக நலிவுற்ற நம் செங்குந்த மக்களுக்கு நல்ல பல உதவிகள் செய்யலாம். மேலும் படித்துவிட்டு வேலையில்லாமலிருக்கும் இளைஞர் களுக்கு நம் சங்க நிர்வாகிகள் முன்னின்று அரசு மற்றும் வங்கி நிதியுதவி வாங்கி பல தொழிற்கூடங்களை அமைத்து அதன் வழி பயிற்சி மற்றும் வேலை வாய்ப்புக்கும், வருவாய் ஈட்டவும் வழிவகை செய்யலாம்.

எனவே இது குறித்துச் செங்குந்தர்கள் எங்கிருந்தாலும் ஏற்றத்தாழ்வு பாராமல் ஒற்றுமையுணர்வுடன் நம் மாநில மற்றும் மாவட்டத் தலைமையின் கருத்தறிந்து உறுதியுடன் செயல்பட வேண்டும். இல்லை என்ற நிலையை நீக்கி இனி வரும் இளைஞர்களின் வளமான வாழ்வுக்கு இருப்பதைக் காப் போம்! வாழ்க செங்குந்தம்!



# திருச்சி மாவட்டத்தில் செங்குந்தம்!

**டாக்டர் மு. கருணாநிதி** எம்.பி.பி.எஸ்., டி.சி.எம்.,
பொதுச் செயலாளர், திருச்சி மாவட்டச் செங்குந்த மகாசன சங்கம்

சமுதாய உணர்விற்கும், இளைஞர்களின் எழுச்சிக்கும் கட்டுப்பாடு மிக்க ஆக்கப் பணிகளுக்கும் உதாரணமாக விளங்கும் திருச்சி மாவட்டத்தில் 2-9-1939ல் திருவானைக்காவல் நகரில் செங்குந்தாகளின் நினைவில் நீங்கா இடம் பெற்றிருக்கும் விளந்தை ஏ.என்.கே. சிவசிதம்பர செங்குந்தர் அவர்களும் பொன்பரப்பி கே.ஆர். வேலாயுத செங்குந்தர் அவர்களும முன்னின்று 8வது மாநில மகாநாட்டினைச் சிறப்புற நடத்தினர்.

சுமார் 30 ஆண்டுகள் உறங்கிக் கிடந்த சமுதாய உணர்வைத் தட்டி எழுப்பும் எண்ணம் கொண்டு கிராமம் கிராமமாக சைக்கிளில் பயணம் செய்து, சமுகாய சொற்பொழிவுகள் நடத்தி 21-6-1970ல் (புலவர் பெ. நடனசிகாமணி எம்.ஏ.பி.டி., திரு. எம். சுவர்ணலிங்கம் எம்.ஏ.பி.டி., ஆகியோரது பெரும் முயற்சியால்) 'அரியலூர் கோட்ட செங்குந்தர் கல்வி வளர்ச்சிக் கழகம்' தோற்றுவிக்கப்பட்டது. திரு. ஏ.வீ. இரத்தினம் எம். ஏ. பி. எல். (தலைவர்) திரு. டி.ஈ. ஆறுமுகம் (செயலாளர்) திரு. எஸ். வீ. குமாரசாமி (பொருளாளர்) ஆகியோரது பெரும் முயற்சியால், சமுதாய பெரு மக்களின் ஒத்துழைப்பால் சேகரிக்கப்பட்ட ரூ. 25 ஆயிரத்தையும், நிரந்தர வைப்பு நிதியில் போட்டு வைத்து, கிடைக்கும் வட்டித் தொகையை மாணவர்களுக்கு உதவித் தொகையாகவும் ஊக்கப் பரிசளிப்பாகவும் வழங்கி, நமது குலக் கொழுந்துகளை உற்சாகப்படுத்தி வருகின்றனர்.

சமுதாயம் ஒன்றுபட்டு உயர வேண்டிய அவசியத்தை வலியுறுததும் பெருநோக்கோடு டாக்டர் மு. கருணாநிதி எம்.பி. பி.எஸ்., டி.சி. எம். அவர்களை அழைப்பாளராகவும் திரு. பி.வி. இராமலிங்கம் பி.எஸ்.ஸி. பி,எல். அவர்களைத் தலைவராகவும், திரு.து. பழனியாண்டி அவர்களைச் செயலாளராகவும் திரு. ப. செல்வராசு பி.ஏ. அவர்களைப் பொருளாளராகவும் கொண்டு 20-5-1979ல் இலையூர் கிராமத்தில் 'திருச்சி மாவட்டச் செங்குந்த மகாசன சங்கம்' உருப்பெற்றது. அந்நால்வரும் ஒவ்வொரு கிராமமாகச் சென்று கிளைகளைத் தோற்றுவித்து, சமுதாய உணர்வைத் தட்டி எழுப்பியதன் காரணமாக 15-12-79ல் மீன்சுருட்டியில் நடைபெற்ற திரு. ச.கு.பா.ப. மணிவிழாவும், 25-5-1980ல் மேலணிக்குழியில் நடைபெற்ற முதலாவது ஆண்டு நிறைவு விழாவும் மாநில மகாநாடுகளுக்கு இணையாக அமைந்துள்ளதாகக் குலப்பெரு மக்கள் பாராட்டி உற்சாகப்படுத்தினர். மாநில மகாநாடு நடத்த வேண்டுமென குலப் பெருமக்களும் இளைஞர்களும் மிகவும் ஆர்வத்தோடு மாநிலச் சங்கத்தை அணுகியதும், மாநில மகாநாடு நடத்துவதில் உள்ள ஒழுங்குமுறை தெரியவந்தது. எனவே, 27-7-80ல் (திருவானைக்காவலில் 8வது மாநில மகாநாடு கண்ட அமரர் ஏ.என்.கே. சிவசிதம்பர செங்குந்தர் அன்பாட்சி செய்த) சீர்மிகு விளந்தையில் இன்று சமுதாயத்தில் பொங்கும் எழுச்சிக்கு காரணமான, மாவட்ட மகாநாடு;--மாவட்ட நிர்வாகிகள் நால்வரும் எடுத்துக்கொண்ட பெரும் முயற்சியிலும் விளந்தை பெருமக்கள் (குறிப்பாக திரு.ஏ.வீ. முருகேச செங்குந்தர், நினைவில் நிற்கும் திரு. பி.சி. தர்மலிங்க செங்குந்தர் மற்றும் ஏ.என்.கே எஸ். தியாகராஜன்) மற்றும் இளைஞர்கள் ஆற்றிய க்டும் பணியாலும்—மாநில மகாநாடுகளை மிஞ்சும் அளவில் அமைந்தது.

மகாநாட்டில் பெற்ற உற்சாகம் தொடர்ந்து 5 இலவச மருத்துவ முகாம்களையும், செங்குந்தபுரத்தில் 4 ஏக்கர் நிலத்தையும், ஜெயங்கொண்டம் நகரில் திருமண மண்டபம் கட்ட அடிமனையையும வாங்குவதற்கும், உரமாக அமைந்தது. பல இலட்சம் ரூபாய் பெறுமானமுள்ள அடிமனையை சில ஆயிரம் ரூபாய்கள் செலவில் வாங்கிட, மாவட்டச சங்ம் நிர்வாகிகள் எடுத்துக்கொண்ட கடுக

★

முயற்சி, சமுதாயமே போற்றும் தகுந்ததும் பெருமைப்படத்தக்கதுமாகும். குலப் பெரு மக்கள் செய்த பொருளாதார உதவி காலத் தால் செய்த நற்செயலாகும்.

21-3-82ல் நடைபெற்ற தேர்தல் மூலம் திரு. எம்.ஆர். பழனியாண்டி செங்குந்தர் தலைவராகவும், திரு. டாக்டர் மு. கருணா நிதி எம்.பி.பி.எஸ் டி.சி.எம் செயலாளராக வும், திரு. பி.பி.எம். அண்ணாமலை பொருளாளராகவும் தேர்வு செய்யப் பட்டனர். திரு. து. பழனியாண்டி மாநிலச் சங்க அமைப்புச செயலாளர் ஆகவும் தேர்வு செய்யப்பட்டார்.

ஜெயங்கொண்டத்தில் திருமண மண்டபம் கட்டி நிர்வகிக்கவும் அதன மூலம் கிடைக்கும வருமானத்தில் நமது குலச் செல்வங்களின் கல்வித்தரத்தை உயர்த்தும் அரிய நோக்கோடு திரு.ஏ.வீ. முருகேச செங்குந்தர் எங்களை நிர்வாக அறங்காவலராகவும திரு. டி. ஈ. ஆறுமுக செங்குந்தர், திரு.வி.ஏ. ரெத்தின செங்குந் தர் ஆகியோரை செயலாளராகவும் திரு. எஸ்.வீ. குமாரசாமி செங்குந்தர் அவர்களை இணை நிாவாக அறங்காவலராகவும் கொண்டு ''செங்குந்தர் கல்வி மற்றும் தர்ம பரிபாலன அறக்கட்டளை'' உருவாககப் பட்டது. அறக்கட்டளையில் நிர்வாகிகள் நால்வரும் கண் துஞ்சாது—அயர்ச்சி அடையாது உழைத்ததன் பலனாக ஜெயங் கொண்டம் நகரில் குலப்பெருமைக்கும், ஒற்றுமைக்கும் சான்றாக விளங்கும் ''செங்குந்தா திருமண மண்டபம்'' சுமார் ரூ. 20 லட்சம் செலவில் கட்டப்பட்டு 8-9-1991ல் குலத்தலைவர் திரு. ஜே.எஸ். அவர்கள் தலைமையில் குலக்குரு வாரியார் சுவாமிகள் திருக்கரங்களால் திறந்து வைக்கப்பட்டது.

மேற்படி திருமண மண்டபத்தின் மூலம் கிடைக்கும் வருமானத்திலிருந்து கடந்த 3 ஆண்டுகளாகப் புலவர் பால. கோவிந்தசாமி எம்.ஏ.பி.டி. அவர்களது சீரிய தலைமையின் கீழ் நமது குல ஆசிரியப் பெருமககள் கோடைக்கால பயிற்சி வகுப்புகள் நடத்தி நமது மாணவர் செல்வங்களின் கல்வித் தரத்தை மென்மேலும்—உயர்த்தி வருகின்றனர். அறக்கட்டளை நிதியிலிருந்து (மாநில அளவில்) நமது உறவுக்குழநதைகளுக்கு ஊக்கப் பரிசளிப்பும் உதவித் தொகையும் வழங்கப்படுவது போற்றுதற்குரியதாகும்.

நமது இளைஞர்களின் உற்சாகத்தை யும் எழுச்சியையும், சமுதாய உயர்விற்கு பயன்படுத்திக் கொள்ளும் நோக்கோடு 24 - 12 - 1987 இல் திரு எம்.ஏ.டி. சேகர் அவர்களைத் தலைவராகவும், திரு.பி. மாசிலாமணி பி.எஸ்ஸி அவர்களைச் செயலாளராகவும், திரு.டி.எஸ். மணி & திரு. பி. எல். ஆர். முருகன் ஆகியோரைப் பொருளாளராகவும் கொண்ட 'முதலாவது' மாவட்ட செங்குந்தர் இளஞரணி அமைக்கப் பெற்றது.''திருச்சி மாவட்டத்தில் சமுதாய உணர்வில் மிஞ்சி நிற்பதற்குக் காரணமே இளைஞர் பட்டாளம்தான்'' எனத் தலைவர் ஜே. எஸ் அவர்களே மனம் மகிழ்ந்து குறிப்பிடும்வண்ணம் இளைஞரணியினரின் செயல்திறன் அமைந்துள்ளது. கட்டுப்பாடு கண்ணியம் மிக்க இளைஞர்களின் எழுச்சி யால் திருச்சி மாவட்ட விழாக்கள் அனைத்துமே எழுச்சி மிக்கவைதான். எனினும தூங்கிக் கிடந்த சமுதாயத்தைத் தட்டி எழுப்பிய விளங்கை மகாநாடு, 20 - 5 - 88இல் செந்துறையில் நடைபெற்ற மாவட்டச் சங்கத்தின 10வது ஆண்டுவிழா, மண்ணச்சநல்லூரில் நடைபெற்ற வட்ட மகாநாடு, 4-2-90இல் கரூரில் நடை பெற்ற வட்ட மகாநாடு இலையூர்மற்றும் தாத்தையங்கார் பேட்டையில் நடைபெற்ற பொதுக் கூட்டங்கள் 5 - 12 - 90இல் திருசசியில் நடைபெற்ற உண்ணாவிரதப் போராட்டம், 24-12-90இல் (பொய்வழக்கு கள் காரணமாகத் தலைவர்கள் கைது செய்ய பட்டதைக் கண்டித்து) ஜெயங் கொண்டம் பகுதியில் நடந்த சாலைமறிய லும், ''மித்திரன்சந்தா'' சேகரிப்பில் தம்பி கள் து. ப. புனிதவேல், எஸ். காளி முத்து, டி.வெங்கடேசன் ஆகியோரின் கடும உழைப்பும், மாற்றாரும் வியக்கும் வணணம் ஜெயங்கொண்டம் நகரில் அமைந் துள்ள திருமண மண்டபமும் மாவட்டச் சங்கம் அணிந்துள்ள பொற்கிரீடத்தில் பதிக்கப்பட்டுள்ள வைரக் கற்கள் ஆகும்.

6 - 6 - 93இல் அரசியல் கட்சிகளுக்கு இணையாக திரு.துரை. முத்துக்குமாரசாமி பி.எஸ்.ஸி., பி.எல. அவர்கள் தலைமையில பேரணி நடததி 15வது ஆண்டு விழா நடத்திய மாவட்டச் சங்கத்திற்குக் கிராமந் தோறும் கிளைச்சங்கங்களும இளைஞரணி களும அமைந்துள்ளது குறிப்படததககது.

தறிக்குழியில் உழன்று வரும் சமுதாயம் உயர்வு பெற அல்லும் பகலும் அயராது உழைப்போம்.



# பெண்மையைப் போற்றுவோம்

புலவர் ச. இராமசாமி எம்.ஏ.எம்.எட்,
காங்கேயநல்லூர்

"பெண்மையைப் போற்றுவோம்
பேதைமை ஓட்டுவோம்
உண்மையைச் சுற்றுவோம்
உள்ளொளி ஊட்டுவோம்"

நம் பங்கயக் கைநலம் பார்த்துதான் பாரில் அறங்கள் வளரும். ஆகையால் மங்கையாராகப் பிறப்பதற்கு நாம் நல்ல மாதவம் செய்திருக்கிறோம்.

"நுண்ணறிவு உடையோர் நூலோடு
பழகினும்
பெண்ணறிவு என்பது பெரும்
பேதைமைத்தே",

என இடைக்காலத்தவர் ஒதுக்கி வைத்த இனமாகப் பெண்ணினத்தை அறியாமையில் மூழ்கடித்தது பெரும் வேதனைக்குரியதொன்று. தன் மகனைப் புலியாக எண்ணியதாய் தன் வயிற்றை, அப்புலி வாழ்ந்த குகையாகக் கருதி இறும்பூதடைந்தாள் என்றால் அப்புறநானூற்றுத் தாயின் அறிவைப் பேதைமை உடைத்தென்று எவ்வாறு தள்ளிவிட முடியும்?

"ஈன்று புறந்தருதல் என்தலைக்
கடனே
சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக்
கடனே"

என அவரவர்க்கு உரிய கடமையை வகுத்துக் கூறியவள் ஒரு பெண்தான் என்று எண்ணிப் பார்க்கும்போது அவள் அறிவினை எண்ணுந்தொறும் எண்ணுந்தொறும் வியப்பு அறிவைக் கடக்கிறது. முறத்தால் புலியைத் துரத்திய பெண்மைக் கரத்தால் அடக்குவதோ காளையை இன்று. உறங்கும் புலிகள் உன் மடிப் பிள்ளைகள் இறங்கும் கொடிய இதயங்கள் நம்மால் இந்தக் குடியைக் குறைபடப் பேசி வந்த கூட்டம் வதைபடக் காண்போம் சாற்றுவார் இல்லை; சான்ற நம் பெருமையை; ஆற்றுவார் நம்மில் அருகியதால்தானோ வேறறுமை மிகுந்தது; வேற்றுமை புகுந்தது.

வேற்றுமை ஒற்று உருபேற்றதால் நாம் உருபோலப் பெயர்களானோம். இங்கு உருபும் பயனும் உடன் தொக்கியதால் அருகு செல்லவும் அஞ்சுகின்றோம். ஒரு குணம் தழுவிய பல உரிச்சொற்கள் இன்று பலகுணம் தழுவி ஓர் இடைச்செருகலாயிற்று.

தொன்று தொட்டு இயற்பெயராய் இருந்த நாம், நம் தொடர்புடைய வேறு பெயர்க்காகி வருகின்றோம். நம் தொடர்புடைய உடைய வேறு பெயர்க்கு ஆகி வருகின்றோம்.

இடைநிலைதான் காலம் காட்டும்; இடை நிலையாக் காலம் காட்டும்! இடை நிலையா காலம் காட்டும்?

நம் வினைகள் தொக்கியதால் தானோ காலம் கரந்த பெயரெச்சங்கள் காலம் கடந்து வினைத் தொகையாயின.

அடுக்குத் தொடராகத் துன்பங்கள் தொடர்ந்து முடுக்கத் தொடங்கியதால் துன்பத்துக்குத் தோள் கொடுத்து இணைந்து விட்டோம். துன்பமும் நாமும் பிரியா இரட்டைக் கிளவிகளானோம்.

செம்மை நம்மை விலகியதால்—விலக்கியதால் குந்தம் ஏந்திக் கூடினோம்.

பண்பு தொக்கினாலும் வெளிவரும் காலம் வரும்.

பண்பு தொக்கினாலும் வெளிவரும்; காலம் வரும்.

பண்பு தொக்கினாலும் வெளி—வரும்... காலம்? வரும்!

கொச்சைகள் எல்லாம் எச்சங்கள் ஆகி நம்மைத் தழுவவரும் தாம் முற்றுப்பெற.

ஈறு கெட்டதனால் எதிர் மறையில் பெயரில் எச்சங்கள் கூறுபோட்டுப் பல் பிடுங்கின.

உருவங்கள் படைத்தால் போதுமா? உரு அகங்கள்—உருவகங்கள் உருவாக்க வேண்டாமா? கருவங்கள் அடங்க-அடக்க-கடவுள் கருவகங்கள் தாமே காப்பாகும்?

இடு குறியாய்—இடுகுறியாய் இருந்த வர்களைத் தற்குறியொன்று காரணப் பெயராக்கிக் காரணம் காட்டிற்று.

உயிர்மெய்யாய் இருந்தபோது—ஒன்றாய் இணைந்திருந்த போது பலவாய்ப் பல்கிப் பெருகியிருந்தோம். உயிரும் மெய்யுமாய்ப் பிரிந்தபோது பன்னிரண்டும் பதினெட்டுமாய்ப் போனோம். ஒன்றுபட்ட உணர்வினில் உயர்வையும் பெருமையும் பெற்றோம். பிரிவினில் தாழ்மையும் உற்றோம். சார்ந்து இருந்தோம் முதல் ஆனோம் எனலாமோ! பிறர் சார்ந்து-பிறரைச் சார்ந்து இருந்தோம். இன்று முதல் நம்மைச் சார—இன்று முதல் நம்மைச்சார இருப்போம். தாயினமே தாழ்ந்து போயினமே நம்மினமே.

ஆயுதத்தை— குந்தத்தை— விட்டதனால காகிதக் கப்பலானோம்; மெய்யோடு அதை இணைத்து மெய்யின் பலம் சேர்ப்போம். ஆய்தம் தலையில் பிறப்பதனால் தலை சாய விடுவதில்லை.

உரத்தில் விளைவனவே உயர்ந்த மணிக்கதிர். உரத்தில் பிறப்பதனால் வல்லினம் நாமாவோம். உயிர் பிறப்பது கழுத்தில் என்பதால்தான் தலை சாய்க்கிறோம். கழுத்தைக் காக்க அல்ல—உயிரைப் போக்க — உறுதியைக் காட்ட உணர்வைக் கூட்ட மென்மை மூச்சிழுத்து மெல்லினத்தை மூக்கில் பிறக்க வைததால் வன்மை மார்பில் சிறக்க வைப்போம் மூக்குக்கும் மார்புக்கும் இடையில் இடையினம் போக்கும் உயிரோடு போகட்டும் கழுத்தோடு.

பெண்மையைக் கொண்டதால் மையலானார் காளையர். பெண்மையைக் கொன்றதால் பேதுற்றார். மையிறு பெற்றதால் மை உடையோம் அலலோம். வாய்=மை பெற்றதால் வாய்மை சிறக்க வில்லையா? பெண்=மை பெற்றால் போற்றாதார் இனியுண்டோ? மையீற்றுப் பண்புடையோம். கையேற்று நிற்பதில்லை யாரிடமும். பூனைக்கூட்டத்தால் எலிகளுக்கு விடுதலையா? பெண் மானே நகைப் பற்றோ கேட்டிடவே.

குந்தக் குழந்தையைக் கந்தக்கடவுள் காத்திடுவான்! காக்கும் பருவத்தில். செங்குந்தச் செங்கையே செங்கீரைத் ஆடவிடு! இங்குந்தன் செந்தளிரை. தாலசைத்து விட்டு விடு, தோளசைத்துக் காட்டிட தோல்வியை ஓட்டிட, சப்பாணி கொட்டத் தொடங்கினால் தண்டாயுத பாணியன்றி எப்பாணி எதிர் நிற்கும் இவன் முன்னால்? முத்தமழை பொழிந்து உன் மழலையின் வருகையைக் காட்டிவிடு. அம்புலியைக் காட்டு! அதை ஆராய அவ்வறிவியலில் முன்னேற—அம்புலியைத் தானாள. சிற்றில் சிதைத்தாலும் பரவாயில்லை பேரில் படைக்க வழிகாட்டு; நம்பேரில் முதன்மையாக்கு. பேரில்—பெரிய வீட்டுலகம்தானே நம்மவர் கண்டது. முழங்கட்டும் சிறுபறை; அதனால் வழக்கற்றுப் போகட்டும் சிறுகுறையும். சிறுதேர் உருட்டினால் வாழ்வின் வரு நாளில் வடிவேலன் வருதேர் இவன் உருட்ட முடியும். ஊசலாடும் நம் இனமக்கள் பெருமையை வாசல்தோறும் பரப்ப ஊசலாடட்டும். வாரி வழங்கும் வள்ளல் முருகனின் வள்ளிபோல் வளமுற கிழங்கு இவள் ஆளட்டும். அம்மானை ஆடவிடு பெம்மான் அருள்பெற.

கட்சி பலவானாலும் காட்சி பலவானாலும் வெட்சி இவன் நடத்த வேதனைப்படுவானேன்? வெட்கப் படுவானேன்? பரந்த நம் புகழைப் பகை சிதைக்க வருமேல் கரந்தை சூட்டிவிடு. களத்தில் இறக்கிவிடு. வஞ்சி வலை விரித்தாலும் நெஞ்சு கலங்காது வஞ்சி சூடிட வாழ்த்தி வழி அனுப்பு. காஞ்சி ஓர் அண்ணன் பிறக்கவா? தம்பியர் பலரைக் காஞ்சியில் சந்திக்க வை. எல்லைக்குள் இருந்து இல்லை நல்லதாக்கி எல்லைக்கு அப்பாலும் இனத்தைக் காக்க நொச்சியும், உழிஞையும் இச்சையாய்க் கொள்ளட்டும். வமபை வளர்ப்பானேன் என வாளாஇருந்து விட்டால், வழிகேட்டு வரும் வம்பின் பழி போட்ட தும்பைச் சூடி வாகை கொள்ளட்டும். உவமிக்க வழியின்றி வளம்மிக்க வாழ்வு காணட்டும் காட்டு. நீ காட்டாதே; காட்டாறு நீ என்று கூட்டிவா நம் இனத்தை.

தொடை ஒடுங்கியதால் அடி குறைந்தோம்; மோனைகள் மௌனமாயின. எதுகையோ எது—கையோ என ஏங்கியது. சிந்தடி எனச் சொன்னால் குறளடியோ செய்துவிடும். அளவடி கேட்டாலே பதிலடி நெடிலடி. ஆசிரியம் நாம் அல்லவா? அடிகளில் வரையறையா? செப்பல் முடிந்தது. அகவலை ஆரம்பித்தோம். துள்ளல் வேண்டாம். துங்கலை தூக்கி எறி—எரி; கலி இங்கு வேண்டா. களி ஓங்க வேண்டும். வஞ்சியை விட்டு விடுவோம். பாடிப் பயனில்லை. வெஞ்சினமா? வஞ்சினமே! வெற்றி நமதன்றோ? வஞ்சி இனமே வெற்றி நமதன்றோ?

# இளைஞர்களின் எழுச்சிப்பணி

(புலவர் ச. கந்தசாமி எம்.ஏ.எம்.எட், குடியாத்தம்)

**இளைய தலைமுறையே!**

எழுச்சி கொள்! வளைய வந்த கொசுக் கூட்டம் வாட்டி வதைப்பதைக் களைய எழுச்சி கொள்! சிங்கமாய் இருந்த உன்னினம் சிறுநரியாய்ப் போவதா? சங்கமாய் இருந்து அன்று சாதித்தவை எல்லாம் சாக்கடையில் கரைவதோ இன்று? ஆண்ட இனமா இன்று மாண்பிழந்து மாண்டு போவது?

**நீ யார்?**

எண்ணிப்பார்! நான் யார்? என் உள்ளம் யார்? ஞானங்கள் யார்? சமயத்திற்கும் சிந்தாந்தத்திற்கும் மட்டும் இது உரியது எனக் கொள்ளாதே. எண்ணிப் பார்!

நான் யார்? என் இனம் யார்? என் இனத்தின் ஞானம் எத்தகையது? விடைகள் கண்டெடுத்தால் தடைகள் தாமாகவே விலகும்.

**மரபின் மாண்பு**

வீறான செல்வமும், விளங்கும் கல்வியும், கேள்வியும் மிகுந்த பொறுமையும் தரும சிந்தனையும் உகந்து கொண்டவர். ஆண்மையும் பெருமையும் யாரைச் சேரும் இவரையன்றி! சிலமே கோலமாம் இவர்க்கு பேறான காரியம் செய்வதிலும் மாதவப் பெரியோரை நேசிப்பதிலும் யாராவார் இவர்க்கு நிகர்! கவி வாணரால் புகழப்படுதலும் புவியாளும் மன வலிமையும் தவிராது இவரை விட்டு.

வேல்கை தொட்ட முருகனை, வேலவன் குட்ட, சிறைபட்ட நான்முகன் முதலான தேவரை, முருகன் உபதேசம் பெற்ற பரமனை பலகாலம் வலம் வந்து திரிதலும் பரவுதலும் பல்லுயிர்க்கும் நல்லருள் செய்தலும் கருணையும் கொண்டவர்கள் உன் முன்னோர்கள்.

பூவில் சிறந்த திருமாதும், நால்வேதக் கலைமாதும் பொன்னாட்டு சசிமாதும் போற்றிடும் உமையவள் திருச்சிலம்பில் பிறந்தவர் நம் முன்னோர். காலனுடன் பெரும்போர் விளைத்த விறலோர்கள். நீறு விளங்கும் முகத்தில் மென்மீசை படைத்த பெரியோர்கள் நம் முன்னோர்கள். வல்லான் மனைவிக்கு அன்று மாங்கலியம் தந்தருளும் நல்லாண்மை படைத்தோர்கள். சேவல் கொடியும் சேர்ந்த விருது பலவும் பெற்று சண்முகன் தன் சேனாதிபதியும் சேனையும் ஆனவர்கள் நம் முன்னோர். நாச்சொல் தவறா நல்லோர். நாச்சிமுத்து நச்சிய முத்துக்கள் நம் முன்னோர்கள். திருப்பத்தூர் சண்முகனார் விருப்பத்தை நிறைவேற்றும் பொறுப்பேற்றுப் புறப்பட்ட புண்ணியர்கள் பத்மநாபரின் பாதம் மறவாதவர்.

**செங்குந்தரின் செம்மை**

சிங்களமாகிய பல்தேசம் வென்றவர் செங்குந்தர். தேவாரம் முற்றும் படிப்பவர் செங்குந்தர். திருவாசகத்தை ஓதும் ஒரு வாசகத்தவர் செங்குந்தர். காலையும் மாலையும் நித்தம் நித்தம் சிவசிந்தை மறவாதவர். செங்குந்தர் தேவே விலகினும் நாவிலகாதவர் செங்குந்தர். எய்தவர்க்கும் சிறைச்சோறு ஈகுவர் செங்குந்தர். குருபூசையும், சிவபூசையும் மறவாதவர்கள் கைக்கோளராகிய செங்குந்தரே.

**ஏன் தயக்கம்**

இன்னுமா விளங்கவில்லை? நீ வந்த வழிமரபு? இன்னுமா உறக்கம்? ஏன் எழவில்லை? ஏன் தயக்கம்? ஏன் மயக்கம்?

**''பூட்டிய இரும்புக் கூட்டின் கதவுதிறக்கப்பட்டது சிறுத்தையே வெளியில் வா''**

எலி என உன்னை இகழ்ந்தவர் நடுங்க புலிஎனச்செயல் செயல் செய்ய புறப்படு

வெளியில்! சிம்புள் பறவையே சிறகை விரி! எழு! சிங்க இளைஞனே! திருப்பு முகம்; திறவிழி இங்கு உன் இனத்துக்கு கூடற்றோர் வஞ்சனையால் நமக்குள உரிமை தமக்கு என்பார் எனில் வழிவந்த உன் மறத்தனம் எங்கே? இனப்பற்று எங்கே? விழிப்புற்று எடு.

இகழ்ச்சி நேர்ந்தால் இறப்போம் என்றும்;

புகழ்ச்சியே எம் பூணாம் என்றும்;

வையகம் ஆண்ட வடிவேலன் தோன்றலே!

கையிருப்பைக் காட்ட எழுந்திடு!

குறிக்கும் உன் இளைஞர் கூட்டம் எங்கே?

மறிக்கொணாக் கடல்போல் மாப்பகை மேல்விடு;

மொழி, இனம் உன்னிரு விழி எனக் கொண்டிரு;

கைக்குள திறமை- கைக்கோளத் திறமை காட்டிடு.

## இதைக் கேள்

பள்ளம் பறிப்பாய்; பறித்த பள்ளத்தில் வெள்ளத்தனைய இனத்தையே வீழ்த்தும் பிள்ளைப் பூச்சியே! தலையைத் தாழ்த்து. முகத்தைத் தாழ்த்து. ஈன உள்ளத்தை உடலை-உயிரைச் சுருக்கு; நச்சிக்குடி. தாழ்ந்து தாழ்ந்து நாயினும் தாழ்ந்து போ! ஆமையைப்போலே அடங்கி ஒடுங்கு. அழு; இளி; குனி; அஞ்சு; பிதற்று, கன்னம் கறுத்த இருட்டின் கறையே! தொங்கும் நரம்பின் தூளே! இதைக் கேள்!

இமை திற! எழுந்து நன்றாய் எண்ணு வாய்! தோளை உயர்த்து! சுடர்முகம் தூக்கு. மீசையை முறுக்கி மேலே ஏற்று; விழித்த விழியில் இனத்துக்கு ஒளி செய்; வானை இடிக்கும் மலைமேல் ஏறு.

எங்கும் பாரடா ஏங்கிடும் இனத்தாரை; பாரடா உன்னுடன் பிறந்த பட்டாளத்தை; என் இனம் என்று உனை தன்னிடம் ஒட்டிய நம்மின மக்களை அணைத்துக் கொள். உன்னைச் சங்கமமாக்கு! இனம் உண்ண உண். உடுத்த உடுப்பாய்.

## எழுச்சிப் பணி

அச்சம் தவிர்த்து வாழ். மச்சினில் வாழ்ந்தாலும் மானத்துடன் வாழ். நரியனையர் காலிடை வீழ்ந்து நாய்களைப் போல தமக்குள்ளே சண்டை நாளும் வளர்க்கும் ஈனச் செயலை இன்றோடு விட்டு ஒழி.

இல்லாமை என்னும் பிணி இல்லாமல் கல்வி நலம் எல்லார்க்கும் என்று சொல். பொல்லாங்கு தீர்ந்தது என்று பூரிப்புடன் எழு.

இல்லையே உனக்குச் சான்று தில்லையாடி வள்ளியன்றி ஏன் இடையீடு? தொடரட்டும் வள்ளிகள்! கொடிகாத்தான் குவலயம் மீட்டான் குமரன் என்பாயே! உன் குமரனை ஏன் அவ்வாறு உருவாக்க வில்லை?

சங்க காலத்தில் வள்ளுவர்; இடைக் காலத்தில் கூத்தர்; இக்காலத்தில் வாரி யார், போதுமா? காலத்திற்கு ஒருவர் எனக் கணக்கீடா? பாவேந்தரும் அண்ணாவும் சுத்தானந்தமும் போதுமென்றால் நீ வாழ்ந்த வாழ்வு இதுதானா? இன்னும் சொல்வேன்.

வெள்ளம் போல் இனத்தவர் கூட்டம் வீரர்கள் கூட்டம்; உடலினால் பலரானாலும் உள்ளத்தால் ஒருவராவோம். கள்ளத்தால்—வஞ்சத்தால் கயவர்கள் இவரை நெருங்க முடியாது எனக் கூறி, துள்ளும் நாள் தூரத்தில் இல்லை.

கூழ் குடித்தாலும் குறையிருந்தாலும் குடலொருங்கே சீழ்பிடித்தாலும் கடனிருந்தாலும் உணர்வரிதாம் வாழ்வு குடிகொண்டு ஒளிர்கின்ற செங்குந்த இனத்தவர்க்குத் தினையளவு நலமேனும் விளையுமென்றால் செத்தொழியும் நாள் நமக்குத் திருநாளாகும். என்னும் உறுதி உள்ளத்தில் கருதி புறப்படு! இளைஞனே புறப்படு! தலைவரின் விழிகாட்டும் வழியில் நடைகாட்டிப் புறப்படு! செயல்படு!

எழுமின் விழிமின்
கருதிய கருமம் கைகூடும் வரை
உழைமின்! உழைமின்!
வாழ்க செங்குந்தம்! வளர்க ஒற்றுமை!

# தலைவா நீ வாழ்க!

**திரு. K.B. மார்க்கபந்து முதலியார்**

தலைவர்
நகர செங்குந்தர் சங்கம்
குடியாத்தம் வட்டக்கிளை.
வ. ஆ. அ. மாவட்டம்.

வீர செங்குந்தம். வெற்றி செங்குந்தம்.
செங்குந்த மரபினரை சீர் செய்த தலைவா நீர் வாழ்க.
செய்தொழிலைச் சீராக்க வந்த சீமானே நீர் வாழ்க.
செங்குந்தனின் குறை தீர்க்க வந்த ஏந்தலே நீர் வாழ்க.
ஆடை கொடுத்து மானங்காத்த செங்குந்தனுக்குத்
தன்மானம் தந்து காத்துநிற்கும் தலைவா நீர் வாழ்க.
நெடிய ஆல் போன்று கூட்டமுண்டு, சேலை நூல் போன்று உறவு உண்டு.
ஆனைபலம் சேர்த்துவந்து சேவைசெய்வோம்செங்குந்தனுக்கு
யாதும் ஊரே. எங்கும் செங்குந்தனே,
நமது குறையை நம்மவர் மூலம் நாடாளுமன்றம்
அறியும் வண்ணம் நாம் செய்திடுவோமே.
ஏழை செங்குந்தன், நாடு ஏற்றம் பெற்றிட
ஏணிப்படிகள். முற்றம் ஏறிய பிறகு அவன்
சமுதாயக் காலடிக்கு அடியில் ஏனிந்த தாழ்வு
உயர்ந்த குலத்திலும் தாழ்ந்தவர் உண்டு.
தாழ்ந்தவர் இனத்திலும் உயர்ந்தவர் உண்டு.
உயர்வு தாழ்வினை நிர்ணயம் செய்த அரசே.
எங்களையும் மிகவும் பிற்படுத்தப்பட்டோர்
பட்டியலில் உடனே சேர்த்திடல் வேண்டும்.
வடித்த கூழினை ஆடைக்குத் தந்து அரசின்
அந்நிய செலவாணியை உயர்த்திடும் எங்கள்
வாடிய வயிற்றின் வாட்டம் போக்கிடுக!
எங்கள் நாற்பது லட்சம் பேரில் நாற்படை உண்டு.
ஒன்றுபட்ட எங்களை வஞ்சம் செய்ய எண்ணாதே.
சங்கம் கொண்ட எங்களைச் சங்கடத்தில் தள்ளாதே.
உரிமை உண்டு கேட்கிறோம். அரசே
உரிமையுடனே கேட்கின்றோம்.
போராட்டங்கள் புதிதல்ல எங்கள்
புனிதப் போரைத் துவக்கிடுவோம்.

எந்த அரசு வந்தாலும், எங்கள்
தோளைப் பற்றி முன்னேறி, எங்களைத்
தொழுவக் கட்டிலில் நிறுத்துகின்றீர்;
எச்சரிக்கை செய்கிறோம். எந்தக்
கட்சி எதுவானாலும், நாங்களும்
அதிலே இருக்கின்றோம். சமயம்
பார்த்துச் செய்திடுவோம். சமயோசிதம்
எங்களுக்கு உண்டென்போம்.
ஆளும் பலத்தைத் தந்திட்ட, எங்களுக்கு
ஆட்சி ஆள்வது ஒன்றும் பெரியதல்ல.
நெசவுத் தொழிலைச் செய்திடவே அண்ணல்
காந்தி நெறி கொண்டோம். சாந்த மூர்த்தி
என்றென்றும், சத்தியமூர்த்தி வழிகொண்டோம்
அகிம்சை வழியில் போராட்டம் அறவழியில்
போராட்டம் எங்கள் தலைவன் சுத்த தங்கம்
சுத்தானந்தர் வழி கொண்டு குந்தம்
தழைக்க வேண்டியே செங்குந்தர் மாநாடு
செய்துவிட்டோம். வையகம் போற்றிப்
பாராட்ட வைகுந்தம் வரையில்
புகழ் பரவும்! வாழ்க வாழ்க
செங்குந்தம் வைரம் போன்ற செங்குந்தம்.
வீரமான செங்குந்தம். வேள்வியில் பிறந்த செங்குந்தம்.
குடியேற்ற நகரில் மாநாடு, குடிகள்
ஏற்றம் அடைந்திடவே குழாமுடன்
கூடி நடந்திட்டோம். குற்றம்
குறைகள் இருந்தாலும் சுற்றம் சூழ
வந்திட்டோம். செங்குந்தன் வாழ்வு
நலம் பெறவே நல்ல திட்டம்
தீட்டிட்டோம். வாட்டம் போக்கி
வாழ்ந்திடவே வழிவகையினை
செய்திட்டோம். ஏழை பாழை
ஏதுமின்றி, பேதங்கள் கொஞ்சமும் இன்றி
முத்தான தலைவர் சுத்தானந்தரின்
தலைமையில் ஒன்று கூடிடுவோம்.
வாழ்க தமிழ்! வளர்க செங்குந்தர் இனம்!!





# குடியாத்தம் தியாகி D. A. ஆதிமூலம் தொண்டு

குடியாத்தம் தியாகி. D.A. ஆதிமூலம் நாட்டு விடுதலைப் போராட்டத்தில் தீவிர மாக ஈடுபட்டு, தன்னலமற்ற பொதுத் தொண்டு புரிந்தவர். தனது 90 ஆம் வயதிலும் நாட்டு முன்னேற்ற வேட்கை யுடன் வாழ்ந்து வருகிறார்.

துருகம். ஆறுமுகம் செங்குந்தர்— குப்பம்மாள் தம்பதியருக்கு 1-1-1904 அன்று இரண்டாவது மகனாகப் பிறந்து திண்ணைப்பள்ளியிலும் உயர்நிலைப் பள்ளியிலும் படித்து சென்னையில் சீனியர் கேம்ப்ரிட்ஜ் பயின்று கொண்டிருந்தபோது உத்தமர் காந்தி, சரோஜினி நாயுடு, சத்திய மூர்த்தி, காமராஜர் போன்ற தலைவர்களின் சொற்பொழிவுகளைக் கேட்டு, படிப்பை நிறுத்திவிட்டுக் காங்கிரஸ் கட்சியின் தீவிரத்தொண்டர் ஆனார்.

1924ல் இவரது பெற்றோர், முனியம்மாள் என்ற நங்கையை மணம் செய்துவைத்து இவருடைய கவனத்தை நெசவுத் தொழிலுக் குத் திருப்ப முயன்றனர். ஆனால் மற்ற மூன்று மகன்களும் தொழில் புரிய, இவர் மட்டும் கட்சிப்பணியில் முழுநேரமும் ஈடு பட்டிருந்தார்.

1930ல் உத்தமர் காந்தி உப்பு சத்தியாக் கிரகம் அறிவித்தபோது, இவர் குடியாத்தத் தில் ஒரு தொண்டர்படை அமைத்து, அதன், தளபதியாக ஒரு பெரிய ஊர்வலம் நடத்தி னார். ஆயிரக்கணக்கில் மக்கள் கலந்து கொண்டு ஆர்ப்பாட்டம் செய்தனர். கலங்கி விட்ட காவல்துறையினர் இவரையும் மற்றும் ஐந்து பேரையும் சிறைப்படுத்தினர். மக்கள் கொந்தளித்து 7 கள்ளுக்கடைகளை யும் 6 சாராயக்கடைகளையும் தீ வைத்துக் கொளுத்தினர். ஊரே அல்லோல கல்லோலப் பட்டது. உள்ளூர்ச் சிறையில் வைக்கப் பயந்து ஆந்திரப் பகுதியிலிருந்த பெல்லாரி சிறைக்கு ஆறுபேரையும் கொணடு சென்றனர். இராஜாஜி முதலிய தலைவர் களுடன் அந்தச் சிறையில் ஒரு ஆண்டு இருந்துவிட்டு வெளிவந்தார்.

1937ல் உள்ளாட்சித் தேர்தல்கள் நடந்த போது குடியாத்தம் நகராட்சித் தேர்தலில் நீதிக்கட்சியைத் தோற்கடித்து இவர் நகராட்சி துணைத்தலைவர் ஆனார். 1939ல் இரண்டாம உலகப்போர் மூண்டதும் அனைவரும் பதவி விலகினர்.

1942, ஆகஸ்ட்டு 9 ஆம் தேதி பம்பா யில் நடந்த காங்கிரஸ் மாநாட்டில் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி உறுப்பினர், என்ற முறையில் கலந்துகொண்டார். Quit India (வெள்ளையனே வெளியேறு)' Do or Die (செய் அல்லது செத்துமடி) என்ற உத்தமர் காந்தியின் இறுதி அறைகூவலை ஏற்று வெள்ளையர் ஆட்சியை ஸ்தம்பிக்கச் செய்யும் பணியில் ஈடுபட்டார். பம்பாயிலி ருந்து தலைமறைவாகிக் குடியாத்தம் வந்த ஏழு தீவிரவாத நண்பர்களைக்கொண்டு ரயில் நிலையம் போகும் வழியில் உள்ள செதுக்கரை கிராமத்தில் தந்திக்கம்பிகளை அறுக்க ஏற்பாடு செய்தார். தந்திக்கம்பிகள் அறுக்கப்பட்டு அந்த வட்டாரத்தில் காவல் துறைக்குப் பெரும் பீதி ஏற்பட்டது, சுமார் 10 மாதங்கள் தலைமறைவாக இருந்தார். மாறுவேடத்தில் ஊர் ஊராகச்சென்று உணர்ச்சியூட்டி வந்தார். காவல் துறை தேடி அலைந்தது. கடைசியாக, பட்டு என்ற கிராமத்தில் இருப்பதைத் துப்பறிந்து காவல்துறை படையுடன் சென்று துப்பாக்கி முனையில் கைது செய்தனர். விசாரணைக் காலத்தில் குடியாத்தம், வாணியம்பாடி, திருப்பத்தூர் சிறைச்சாலை களில் வைத்துத் துன்புறுத்தி காவல்

★

துறையினர் பழி தீர்த்துக் கொண்டனர் விசாரணை முடிவில் அபராதம் விதித்து விடுதலை செய்யப்பட்டார். 1942 ஆகஸ்டு போராட்டத்தில் கலந்து கொண்டு சிறை சென்றவர் குடியாத்தத்தில் இவர் ஒருவர் மட்டுமே. ஆகஸ்டு தியாகி என்று மக்கள் குறிப்பிட ஆரம்பித்தனர்.

1943க்குப் பிறகுதான் தன் வாழ்க்கையில் முதல் முதலாகத் தொழில் செய்ய ஆரம்பித்தார். அதுவரை கூட்டுக்குடும்பம். இவரையும் இவரது மனைவி மற்றும் மகனையும் கவனித்துக் கொண்டது. சம்பாதிக்கவில்லை என்ற குறையிருந்தாலும் இவரது பெற்றோர்களும் சகோதரர்களும் இவர் நாட்டுக்கு உழைப்பது பற்றிப் பெருமைப்பட்டனர். நெசவுத்தொழில் தொடர்பான சாயமருந்து மூன்று மாவட்டங்களில் விற்பனை செய்யும் வியாபாரத்தைத் தொடங்கினார். பொதுப்பணியும் தொடர்ந்தது.

1947ல் நாடு விடுதலை பெற்றபின் தியாகிகளுக்கு நிலம் வழங்கப்பட்டபோது, தனக்கு வேண்டாம் என்று கூறிவிட்டார்.

1952ல் குடியாத்தம் நகராட்சித் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டு 5 ஆண்டுகள் மக்கள் மெச்சும் வகையில் பணி புரிந்தார். மற்றும் குடியாத்தம் நகரக் கூட்டுறவு வங்கியின் தலைவராக 1952 முதல் 12 ஆண்டுகள் பணிபுரிந்து அதற்குச் சொந்தக் கட்டிடம் அமையவும் மக்களுக்கு எளிதாகக் கடன் கிடைக்கவும் பாடுபட்டார். மேலும் படவேட்டம்மன் கோயில் அறங்காவலர் குழுத்தலைவராக இருந்து அந்தக் கோயிலுக்குச் சொத்து சேர்த்து வைத்தார். கே.வி. குப்பம் அருகில் உள்ள மகாதேவமலை அடிவாரத்தில் ஆடிக்கிருத்திகை தோறும் 50 ஆண்டுகளாகத் தண்ணீர்ப் பந்தல் நடத்தி வருகிறார். அங்கே ஒரு சிறிய மடமும் கட்டியுள்ளார்.

படிப்பில் ஆர்வமுள்ளவர். ஆசிரியர்களும் வியக்கும் வகையில் ஆங்கிலத்தில் பேச வல்லவர். ஊர் இளைஞர்களுக்கு உயர் கல்வி பயில ஊக்கமளித்து வந்தார். சிறை வாசம், தலை மறைவுக் காலத்திலும் தன் மகனின் படிப்பு தடைப்படாமல் பார்த்துக் கொண்டு M.A. வரை படிக்கவைத்தார். காங்கிரஸ் மந்திர் சாலையில் தான் புதிதாகக் கட்டிய கட்டடத்தை நூலகமும் படிப்பகமும் நடத்த அரசுக்கு நன்கொடையாக அளித்தார். கட்டடம் இப்போது சுமார் ரூ. 5 இலட்சம் பெறுமானமுள்ளது.

இவரது துணைவியார் 1982ல் மறைந்தார். வயதாகி விட்டதால் வியாபாரத்தை நிறுத்திக் கொண்டார். தற்போது சென்னையில் உள்ள தன் வீட்டில் தன் ஒரே மகன் D.A.S. பிரகாசம் I.A.S. (ஓய்வு) அவர்களுடன் வசித்து வருகிறார்.





# தியாகச் சுடர்
# தில்லையாடி வள்ளியம்மை

புலவர் மாணிக்க கணபதி எம்.ஏ., பி.ஓ.எல்., பி.எட்., மன்னார்குடி



## தென்னாப்பிரிக்க வளர்ச்சியில் இந்தியர்

தங்கத்தின் புகழால் தரணியில் உள்ள நாடுகளைத் தன்பால் ஈர்த்தது தென்னாப்பிரிக்கா; ஆப்பிரிக்கக் கண்டத்துக்குப் பெயர் சேர்த்த பெருமையைப் பெற்றது. பன்னாட்டு மக்களைப் போலவே, பண்பார்ந்த பாரத நாட்டினரும் தென்னாப்பிரிக்கா சென்றனர்; தாயகமாகவே அதனை நினைத்தனர்; விவசாயத்தில் ஈடுபட்டனர்; கரும்பினை விளைவித்தனர்; காய்கறி பயிரிட்டனர்; தோட்டத் தொழிலுக்கெனச் சென்றவர்கள் வணிகர்களாக மாறினர்;வீடுகள் அமைத்துக் கொண்டனர். நிலத்துக்குச் சொந்தக்காரர்களாயினர்; இந்தியர்களின் வளர்ச்சியைக் கண்டனர் வெள்ளையர்கள்; சகித்துக் கொள்ள முடியவில்லை; தங்களுக்குப் போட்டியாக அமைந்தமையால் வெறுப்புக் கொண்டனர். இந்தியர்களின் வளர்ச்சியே வெள்ளையர்களின் விரோதத்துக்கு அடிப்படையாயிற்று!

## இந்தியரின் இன்னல் வாழ்வு

ஆங்கில அரசு அத்துமீறத் துவங்கியது; இந்தியர்களின் உரிமைகளைப் பறித்தது; இந்திய வணிகர்களுக்கு நஷ்டஈடு கொடுத்து, ஊரைவிட்டு விரட்டியது. நெடைபாதையில் நடக்கக்கூடாது—அனுமதிச் சீட்டு இல்லாமல் இரவில் உலவலாகாது —விருப்பிய இடத்தில் தங்கலாகாது—இந்தியர்களுக்கென்று ஒதுக்கப்பட்ட இடத்தில்தான் தங்கவேண்டும்— வாக்குரிமை கிடையாது" — என்றெல்லாம் அநியாயச் சட்டங்களை இந்தியர்களின் தலையில் சுமத்தியது; மனிதத்தன்மையற்ற தலைவரியும் போட்டது; விண்ணப்பங்கள் தந்து முயற்சித்தனர் இந்தியர்; எதுவும் பலனில்லை! எதிர்த்துப் போராடினர்; முடிவு துப்பாக்கிச்சூடு!சிறைவாசம்' இடையில்இரண்டொரு வெற்றிகள்; அவ்வளவே!

## வள்ளியம்மை குடும்பம்

தங்கமான நம் வள்ளியம்மையைத் தந்து, தங்கத்துக்குப் பெயர்பெற்ற ஜோகன்ஸ்பர்க் பெருமை கொண்டது; ஆர். முனுசாமி முதலியார்-புதுச்சேரி முதலியார் எனப் போற்றிப் புகழப்பட்டவர்; இந்தியர்களின் உரிமைக்காகப் போராடி ஒரு முறை சிறை சென்றவர்; அவரது மனைவியார் ஜானகி அம்மையார்; மங்களத்தம்மாள் என மகிழ்ச்சியோடு அழைக்கப்பட்ட மங்கையர் திலகம்; மங்களத்தம்மாளின் பிறந்தகம் தமிழக நாகை காயிதே மில்லத் மாவட்டத் தில்லையாடி; நம் முனுசாமி முதலியார் ஜோகன்ஸ்பர்க்கில் மளிகை வணிகராகத் திகழ்ந்து மக்களின் உள்ளத்தைக் கவர்ந்தவர்; தேனென இனிமையுடன் பேசித் தின்பண்ட விற்பனையும் செய்தார்.

முனுசாமி—ஜானகித் தம்பதியர்களின் இல்வாழ்க்கையில் மூத்த மகளாகப் பிறந்தவள்தான் நமது தியாகச் சுடர் தில்லையாடி; வள்ளியம்மை; பிறந்த ஆண்டு 1898 நல்லகுழந்தையாக வளர்ந்தாள்; அனைவரின் அன்பையும் பெற்றாள்; சற்று உயரமானவள், அழகான தோற்றம்; அன்போடு அரசு பள்ளியொன்றில் சேர்த்தனர்; ஓரளவு படித்தாள்; பண்பாட்டின் சிகரமெனத் திகழ்ந்தாள்,

## பதினாறு வயதில்

பதினாறு வயதினை எட்டிப் பிடித்துக் கொண்டிருந்தாள் வள்ளியம்மை, போது மான அளவு கல்வி பெறாதவள்; உலகின் போக்கினை உணராத பருவத்தினள்; வெள்ளையர் ஆட்சியின் கொடுமையில் தென்னாப்பிரிக்கா சிக்கித் தவித்த காலம்; தென்னாப்பிரிக்க நீதிமன்றம் தெளிவில்லாத சட்டம் ஒன்றைப் பிறப்பித்தது. "பாரம் பரியப் பெருமைமிக்க இந்திய மரபின்படி செய்துகொண்ட—செய்துகொள்ளும் இந்தி யரின் திருமணங்கள் செல்லாது" என்பது தான் அந்த அநியாயச் சட்டம்! வெள்ளை யர் இந்தியர்மீது திணித்த கொடுமையான சட்டங்களில் இதுவும் ஒன்று! அலைகடல் துரும்பென இந்தியர் தவித்தனர்; நம் வள்ளியம்மையின் பிஞ்சு உள்ளத்தில் இச்சட்டம் நஞ்செனப் பாய்ந்தது; கொஞ்சமும் அஞ்சவில்லை; கொதித்து எழுந்தாள் வள்ளியம்மை. "இந்தச் சட்டத்தை ஏற்றால்—என் அன்பான தாய், என் அருமையான தந்தைக்கு மனைவியாக முடியாதே! நானும் அவர்களுக்கு முறைப் படி பிறந்த மகளாக இருக்க முடியாதே! என்னைப் போலத் தானே எல்லாரும்; பந்த பாசங்கள் அற்றுப் போகும் சொந்தப் பிரச்னையாயிற்றே! என எண்ணினாள்; ஏங்கினாள்; நெஞ்சம் எரிமலையெனக் குமுறியது.

## சத்தியாக்கிரகத்தில் வள்ளியம்மை

ஈனச் சட்டத்தை எதிர்த்து, இந்தியர்கள் திரண்டு எழுந்தனர்; மானத்தோடு வாழ விரும்பினர்; சத்தியாக்கிரகப்பேரணி நடத்த திட்டமிட்டனர். நோயில் அகப்பட்ட தன் தந்தையைத் தன் தாயின் துணையோடு மருத்துவமனையில் சேர்த்தாள் நமது வள்ளியம்மை; அநியாயச் சட்டத்தை எதிர்த்து ஆவேசமாகப் புறப்பட்டாள். தாய் மங்களத்தம்மாளும் தன் மகளோடு சத்தியாக்கிரகப் பேரணியில் கலந்து கொண்டாள். 29 - 10 - 1913 அன்று பேரணி ஜோகன்ஸ்பர்கிலிருந்து புறப் பட்டது; சார்லஸ் டவுன், டண்டி, லேடிஸ் மித், மாரிஸ்பர்க், டர்பன் போன்றவை வழி யிடை நகரங்கள்; வால்க்ஸ்ரஸ்ட் வந்தடைந்தது; 22-12-1913—ஆம் நாள்; மரணத்தைத் துச்சமென மதித்து, மானம் காக்கப் புறப்பட்ட அன்பு மகள் வள்ளியம்மையோடு — அநியாயத்தை எதிர்த்துப் போராடிய அன்னை மங்களத் தம்மாள்உட்பட அனைவரையும் அந்நாட்டு அரசு தடுத்து நிறுத்தியது; கைது செய் தது; மூன்று மாதக் கடுங்காவல்; மாரிட்ஸ் பர்க் சிறையில் மங்களத்தம்மாளுடன் வள்ளியம்மையைத் தள்ளி வாட்டியது.

## சிறையில் வள்ளியம்மை

சிறை புகுந்த வள்ளியம்மைக்குக் கடுமையான நோய்; படுத்த படுக்கை; உடல் நலம் கெட்டது—எனினும் மனநலம் குன்றவில்லை. காந்திஜி—ஸ்மட்சுபிரபு உடன்பாட்டின்படிக் குறித்த காலத்துக்கு முன்னதாகவே வள்ளியம்மைக்கு விடுதலை கிடைத்தது; நாள் 11-2-1914; சிறையி லிருந்து தள்ளாடியவாறு வெளியில் வந் தாள். நண்பர் 'போலக்குடன்' வந்த காந்தியடிகள் வள்ளியம்மையைக்கண்டார்; கண்கலங்கினார். விரைவில் வீட்டிற்குச் செல்ல மங்களத்தம்மாள் எண்ணினார். மங்களத்தம்மாள் வள்ளியம்மையைச் சமுக் காளம் ஒன்றின்மீது படுக்கவைத்து, காந்திஜி, போலககின் துணையோடு வீட்டிற்குத் தூக்கி வந்தாள். தாயாரின் கவலையைப் பார்த்தார் அண்ணல்; இரண சிகிச்சைப் பெற்று வீட்டிற்குத் திரும்பி யிருந்ததந்தையின் மனவாட்டத்தை உற்று நோக்கினார்; மெலிந்து அவஸ்தைப்பட்டுக் கொண்டிருந்த வள்ளியம்மையின் பரிதா பமான நிலையினைப் பார்த்து, காந்தி யடிகள் கலங்கி உரைத்தார். நம் செங்குந்தர் குலச்செல்வக் குழந்தையின் அவல நிலையை எண்ணுந்தொறும் நம் மனம் சொல்லொணாத் துயரத்தில் துடிக்கிறது.

## தியாகச் சுடர்
## தில்லையாடி வள்ளியம்மை

காந்தியடிகள் வள்ளியம்மையின் இல்லத்துக்குச் சென்றபோது, சிறைக்குச் சென்றதைப் பற்றி வள்ளியம்மையிடம் சற்றே உசாவினார். "இந்தியாவின் நல்வாழ்வுக்காக எத்தனை முறை சிறை சென்றாலும், எள்ளத்தனையும் கவலைப் படமாட்டேன்; இறந்து போவது பற்றியும் எனக்குக் கவலையில்லை; தாய் நாட்டு மக்களின் நலனுக்கு உயிரைக் கொடுக்காத வர்கள் யார்?" என்று பெருமிதத்தோடு பேசினாள் நம் குந்தர் குலச் செல்வி.

மரணவாயிலில் நின்ற வள்ளியம்மை 22-2-1914-இல் இவ்வுலகத்தை விட்டாள்,

